# ஸ்ரீ லலிதோபாக்யானம்.



ஆசிரியர் :

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.


ஸௌம்ய ஞு } 1969. { விலை
ஆவணிமீ } { ரூ. 4—00.

# ஸ்ரீ லலிதோபாக்யானம்.



ஆசிரியர் :

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,
2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம்,
சென்னை—33.

ஸ்ரீ ராம ஜயம்
வைகாசி மீ 27 உ
ஆநந்த வருடம்



" மாம்பலம் குருகுல வெளியீடு "
நான்காம் பதிப்பு.



ஸௌம்ய ஹூ ஆவணி மீ } 1969. { விலை ரூ. 4—00

# முகவுரை.

எளிய நடையில் படிக்க ருசியான கதைகளை வெளியிடும் இந்நூல் வீட்டிற்கு ஒரு காபி அவச்யம் இருக்கவேண்டும். வீட்டில் இந்நூல் இருந்தாலே ஸகல நன்மைகளும் உண்டாகும். படிப்பவர் பயனைப்பற்றி கூற வேண்டுமா ?

தாங்கள் படிப்பதோடு நிற்காமல், நமது பெண்களும், நண்பர்களும் படிக்கும்படிச் செய்யுங்கள். விவாஹ காலம், நவராத்ரி, ஸுமங்கலி பிரார்த்தனை, சுக்ரவாரம் இவைகளில் இந்நூலை ஸுமங்கலிகளுக்கு, மஞ்சள், குங்கும, தாம்பூலத்துடன் அளிப்பது மிக மிக விசேஷம். ஸௌமங்கல்யம் விருத்தியாகும்.

இப்படிக்கு,

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,

வைதிக தர்ம வர்த்தனீ ஆசிரியர்.

# விஷய அட்டவணை

உ

ஸ்ரீ லலிதாம்பிகாயை நம:

# ஸ்ரீ லலிதோபாக்யானம்.



## முதல் அத்யாயம் —37 ச்லோகங்கள்.

சதுர்ப்புஜே சந்த்ரகலாவதம்ஸே
குசோன்னதே குங்கும ராகசோணே |
புண்ட்ரேக்ஷு பாசாங்குச புஷ்பபாண
ஹஸ்தே நமஸ்தே ஜகதேகமாத: ||

நான்கு கைகளுள்ளவளே! சிரஸில் சந்த்ரகலையைத் தரிப்பவளே! உன்னத ஸ்தநமுள்ளவளே! குங்குமத்தால் சிவந்தவளே! நாமக் கரும்பு, பாசம், அங்குசம், புஷ்பபாணம் இவைகளை கரத்தில் ஏந்தியவளே! ஜகத்தின் தாயே! உனக்கு நமஸ்காரம்.

அஸ்து ந:ச்ரேயஸே கிஞ்சித் வஸ்துவாமாங்கஸுந்தரம் |
யதஸ்த்ரிதீயோ விதுஷாம் துரீயம் தத்பரம் மஹ: ||

அர்த்தநாரீஸ்வரரது இடதுபுறத்தில் அழகாயிருப்பதும் அர்த்தநாரீஸ்வர ஸ்தானத்திலிருந்து, வித்வான்களுக்கு மூன்றுவதாக ப்ரம்ஹவித் வரிஷ்ட ஸ்வரூபமாக உள்ள துரீயமாயும் பரப்ரம்ஹ ஸ்வரூபமாயுமுள்ள ஓர் வஸ்து நமக்கு ஸ்ரேயஸ்ஸை அளிக்கட்டும்.

வேதவேதாந்தங்களையும் ஸர்வ ஸித்தாந்தங்களையும் உணர்ந்து ப்ரம்ஹானந்த ஸ்வரூபியாய் விளங்கும் அகஸ்த்யமுனிவர் ஒருஸமயம் ஸகல புண்ய க்ஷேத்ரங்களிலும், தீர்த்தங்களிலும், புண்ய ஆரண்யங்களிலும் யாத்ரை செய்தார். எங்கும் அக்ஞான இருள் சூழ, உண்பது, உடுப்பது, காமரஸத்திலீடுபடுவதுமான மானிடரைக் கண்டார். சிந்தைநொந்து அவர்கள் நற்கதியையே

எண்ணி, காஞ்சிமா நகரம் சென்றார். ஆங்கு, கலியின் கொடுமையை அகற்றவல்ல ஹஸ்தகிரிநாதரெனும் வரதர் ஏகாம்பரநாதர், காமாக்ஷி இவர்களை அர்ச்சித்தார். பல்லாண்டு பரந்தாமனை நாடி, பாரின் க்ஷேமத்திற்காகக் கடுந்தவம் புரிந்தார். சங்க சக்ர பீதாம்பரதாரியான பரமன் ஹயக்ரீவ வடிவமேந்தி முனிவர் முன்னேதோன்றினார். அகஸ்த்யர் ஆனந்தபரவசராகி, பலமுறை பணிந்தெழுந்து பகவானைத் துதித்தார். பக்த பராதீனரான பரமபுருஷன், "முனிவரே! உமது தவத்தால் உள்ளங் குளிர்ந்தோம். உமக்கு வேண்டிய வரம் யாது" என்றார். "ஜநார்த்தந! இப்பாமர ஜனங்கள் பிறவிக் கடலைக் கடந்து பேராநந்தம் பெற ஓர் உபாயத்தைத் தந்தருளல் வேண்டும்" என மஹர்ஷி வேண்டினார்.

ஹயக்ரீவர் கூறினார்:— முன்னம் இதே சிவனால் எனக்குக் கூறப்பட்டது. ப்ரம்ஹனாலும், தூர்வாஸராலும் பின்னர் உம்மாலும் வினவப்பட்டது. நான் கூறும் வழி உமது மூலமாக பிரஸித்தமாகும்படி வரந்தருகிறேன். நான் உலகிற்கு ஆதிகர்த்தா. உலகைப் படைத்துக் காத்து உபஸம்ஹரிப்பவன். மும்மூர்த்திகளாக விளங்குபவன். உலக வடிவன். குணமற்றவன். குணாச்ரயன். ப்ரதானம், புருஷன் என்ற இரு கூறாக உலகெலாம் பரந்து நிற்பவன். ஜடமாய், குணமாய் ஸர்வ பிராணிகளிடமும் இருப்பது எனது பிரதானமாம். குணாதீதமாய், சுத்த சைதன்யமாய் விளங்குவது புருஷனும். இதில் ஒன்றை நன்குணர்ந்தவனே நற்கதி பெறுவானெனில் இரண்டையும் அறிந்தவர் மோக்ஷம் பெறுவரெனக் கூறவும் வேண்டுமோ? தவத்தினாலும், யமநியமங்களாலும், தியாகத்தினாலும் ப்ராணிகளது பாபம் அகலும். ஆத்மகுணம் உண்டாகும். அதன் பின்னரே ஞானம் உதயமாகும். ஜீவாத்ம ஐக்ய ஞானத்தால் மோக்ஷமுண்டாகும். இது எல்லோருக்கும் ஸுலபமானதன்று.

பாமரரும், வர்ணாஸ்ரம தர்மங்களை விட்ட பாபிகளும், அஸத்துகளும் கூட ஸுலபமாக நற்கதிபெற ஓர் அரிய வழி கூறுகிறேன். பராஸக்தியான ஸ்ரீ ஜகன்மாதாவை பூஜிப்பதே அத்யுத்தமமான மார்க்கம். சாஸ்த்ரம் உணராமல் விதியை விட்டு எப்படிப் பூஜித்தாலும் உள்ளம் உவந்துஇம்மை, மறுமை, புக்தி, முக்தி எல்லாவற்றையும் எல்லோருக்கும் அளிக்க வல்லவள் இவள் ஒருத்தியே.பரம சிவனும் தேவியை த்யானம் செய்து ஸகல ஸித்திகளையும் பெற்றார். அர்த்தநாரீஸ்வரராக ஆனார். ப்ரம்ஹாதி தேவர்களும் தேவீ த்யானத்தால் ஸித்தி பெற்றனர். ஆதலின் தேவியை, மந்த்ரம், அஸ்த்ரம், ந்யாஸம் இவைகளுடன் க்ரமமாகப் பூஜை செய்யவேண்டும், தேவியிடமே மனது ப்ராணன், ஆசை இவைகளை வைத்துத் தேவியைத் தவிர தான் வேறல்ல என்றஎண்ணத்துடன் கர்மாக்களைச் செய்பவன் முக்தி பெறுவான்.

முனிவரே ! இது மிக ரஹஸ்யமானது. உமது தபோ பலத்தாலும் உலகமெல்லாம் இன்புற வேண்டுமென்ற எண்ணத்தாலுமே இதை உமக்குக் கூறினேன், தேவரும் மற்றவரும் உம்மிடமிருந்து உபதேசம்பெற்று ஸித்தி பெறட்டும்.

இதைக்கேட்ட அகஸ்த்யர் மற்றுமோர் முறை மாலின் திருவடி பணிந்து, " தாங்கள் கூறிய சக்தி உருவம் எத்தகையது ? எத்தகைய லீலைகளைச் செய்கின்றது ? எத்தகைய மஹிமை வாய்ந்தது ?" என்று கூறவேண்டினார். தனது அம்சத்தினால் தன்னைப்போல் உருக்கொண்ட ஹயக்ரீவரைக் காட்டி, "எது எதைக் கேட்க விரும்புகிறீரோ அவைகளுக்கு இவர் விடையளிப்பார்" என்று கூறி, மஹாவிஷ்ணு, மறைந்தார். ஆனந்தத்தால் மயிர்க்கூச்சலடைந்த மஹர்ஷி ஹயக்ரீவருடன் தம்ஆஸ்ரமம் சென்றார்.

முதல் அத்யாயம் முற்றிற்று.

## இரண்டாம் அத்யாயம் — 69 ச்லோகங்கள்.

அகஸ்த்யர் ஹயக்ரீவ முனிவரை அற்புதமான ஆஸனத்திலமர்த்தி, "ஸ்வாமின்! தங்களைப்போன்றவர்களது தர்சனமே உலக க்ஷேமத்தை அளிக்கும். தாங்கள் மஹாதேவியின் ஆவிர்பாவம், திவ்ய ரூபங்கள், லீலைகள் முதலியவற்றை விஸ்தாரமாக வர்ணியுங்கள் என்று வேண்டினர்.

*ஹயக்ரீவர் உரைத்தார்:—* அந்தத் தேவி அநாதியாக உள்ளவள். ஸமஸ்த வஸ்துக்களுக்கும் ஆதாரமானவள். ஸதஸத்கர்ம வடிவமானவள். த்யானத்தினால் மாத்ரம் தர்சிக்கத்தக்கவள். அறிவையும், வித்யையையும் அங்கமாகக் கொண்டவள். உள்ளத்திலே வஸிப்பவள். வெகுகாலம் அப்யஸிக்கும் ஆத்ம ஐக்ய பாவனையால் வ்யக்தமாக விளங்குபவள். ப்ரம்ஹாவினது த்யாந யோகத்தால் முதலில் பிரக்ருதி என்ற பெயரோடு தோன்றினள். தேவர்களது விருப்பைப் பூர்த்தி செய்தவளவளே. பாற்கடலை கடைந்தபோது இரண்டாவதாக மோஹினியாகத்தோன்றினள். அவளது அழகிய ரூபத்தைக்கண்டு ஸர்வக்ஞனன பரமசிவனும் பார்வதியை விட்டுவிட்டுப் பின் தொடர்ந்து ஓடி, சாஸ்தா என்பவரைப் பெற்றார்.

*அகஸ்த்யர்:—* ஜிதேந்த்ரியராய் மன்மதனை எரித்தவரான பூதேசன் எப்படி மோஹமடைந்து ஸுதனைப் பெற்றார்?

*ஹயக்ரீவர்:—* த்ரிலோகாதிபதியான தேவேந்த்ரன் கைலாஸபர்வதம்போல் விளங்கும்வெள்ளையானை மீதேறி தேவகணம்சூழ, செருக்குடன் பவனிவந்தான். அவன் கர்வத்தை உணர்ந்த கைலாஸநாதன் தூர்வாஸரை அவனருகே அனுப்பினர். கந்தை கிருஷ்ணாஜிநத்தை உடுத்தி மெலிந்த தேஹத்துடன் பித்தனைப் போல் ஆகாயமார்க்கமாய் அமராதிபனிடம் புறப்பட்டார். இடையே ஓர் வித்யாதரப்பெண் பல்லாண்டுகளாகத் தேவியை உபாஸித்து

அவள் அருள்செய்தளித்த ஒரு திவ்ய மாலையை வாங்கி வந்தாள். தூர்வாஸர் அவளைப்பார்த்து, "நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? ஏது இந்த மாலை?" எனவினவ, வித்யாதரி தன் வரலாற்றை உரைத்தாள். மஹர்ஷி அம்மாலையை விரும்ப அவள் தடையின்றித்தந்து தன் இருப்பிடம் புறப்பட்டாள். முனிவர் ஆவலுடனதை இருகரங்களாலேந்தி, தலைமீது வைத்து, "ப்ரம்ஹாதி தேவர்களுக்கும் கிட்டாதது இது. நான் க்ருதார்த்தனானேன்" என்று கூறி வித்யாதரிக்கு தேவி பக்தி உண்டாகும்படி ஆசீர்வதித்தார். பின்னர் ஆகாயத்தில் வரும் வித்யாதரிகளிடமிருந்து வீணை, ஆபரணம், மாலை, சந்தனம் முதலியவைகளைப் பிடுங்கி, அணிந்து பித்தனைப் போல் ஆடிப்பாடிக்கொண்டு, இந்த்ரனருகே சென்றார். தம்மிடமிருந்த அந்த மாலையைச் சக்ரனுக்களித்தார். அவர் அதை அலக்ஷ்யமாக வாங்கி, யானை மீது வைத்தார். ஐராவதம் அதை எடுத்துப் பூமியில் வைத்துத் தேய்த்தது. அதைக்கண்டு அடங்கா கோபங்கொண்ட முனிவர் "ப்ரம்ஹாதி தேவர்களுக்கும் கிட்டாத ஜகன்மாதாவின் மாலையை நீ சிரஸ்ஸில் தரிக்காமல் அலக்ஷ்யம் செய்தாய். ஆதலின் உனது ராஜ்யம், சோபையையும், தேஜஸ்ஸையும் இழக்கும்" என சபித்தார். தேவேந்த்ரன் எவ்வளவு வேண்டியும் வருங் காரியத்தைக்கருதி, தூர்வாஸர் பேசாமலேயேப்போய்விட்டார். உடனே இந்திரனிடம் இருந்த விஜயலக்ஷ்மி பாதாளம் சென்றாள், நித்யலக்ஷ்மி வாஸுதேவனிடம் சென்றாள். சதமகன் மனம் நொந்து ஸ்வர்க்கத்தில் தோன்றிய பற்பல அபசகுனங்களைக் கண்டு வருந்தி, குருவான ப்ருஹஸ்பதியை அழைத்து வேண்டினர்.

இந்த்ரன்:— முக்காலத்தையுமுணர்ந்த முனிவரே! முன்னம் காணாத பல துர்நிமித்தம் தோன்றுகின்றதே! அதனால் ஏற்படும் தீமை யாது? அதை அகற்ற உபாயம் யாது?

ப்ருஹஸ்பதி:— அவரவர் செய்த வினை, ப்ராயச் சித்தம், அனுபவம் இவற்றைத் தவிர வேறெதனாலும் கல்ப கோடி சதமானாலும் அகலாது.

இந்த்ரன்: — துஷ்கர்மா எத்தகையது? ப்ராயசித்தம் எத்தகையது?

ப்ருஹஸ்பதி :— கொல்லல், திருடுதல், ஹிம்ஸை, குடி, பரஸ்த்ரீகமநம் எனப் பாபம் ஐந்து வகைப்படும். ப்ராம்ஹணருக்கு ஓர் பாபத்தைச் செய்தால் அது பத்தாயிரம் மடங்கு அதிகமான துன்பத்தைத் தரும். க்ஷத்ரியருக்குச் செய்யும் தீவினை ஆயிரம் மடங்கும், வைஸ்யருக்குச் செய்வது நூறு மடங்கும், நான்காம் வரணத்தவர், பசு, குதிரை இவைகட்குச் செய்வது பத்து மடங்கும், யானைக்குச் செய்வது ஐந்து பங்கும், ஒட்டகைக்குச் செய்வது மூன்று பங்கும், பக்ஷிகளுக்குச் செய்வது ஒன்றரை மடங்கும் பலனை அளிக்கும். மூன்று வர்ணத்து ஸ்த்ரீகளுக்குப் பாபம் செய்தால் மேற் கூறியதில் கால்பங்கே பாபமானதால் அவ்வளவு ப்ராயச்சித்தம் செய்தால் போதும். பெற்றோர், குரு, யஜமானன், புத்ரன் இவர்களுக்குத் தீமை செய்யின் அதற்கு பிராயசித்தமே கிடையாது. குருவின் உத்தரவினால் ஓர் பாபம் செய்ய நேர்ந்தால் கால்பங்கு ப்ராயச்சித்தம் போதும். குருவின் ஆக்ஞையை மீறி, பாபம் செய்யநேரிடில் அரைப்பங்கு ப்ராயச்சித்தம் செய்துக் கொள்ளவேண்டும்.

பத்து ப்ராம்ஹணர்களை ரக்ஷிக்கும்பொருட்டு அரசன் ஒரு அந்தணனைக் கொல்லலாம். நூறு வேதியரைக்காக்க ப்ராம்ஹணன் ஒரு ப்ராம்ஹணனைக் கொல்லலாம். ஐந்து ப்ரம்ஹ வித்துக்களைக் காக்க ஓர் வைஸ்யனைத் தண்டிக்கலாம். பத்து வைஸ்யரைக்காக்க வைஸ்யர் ஓர் வைஸ்யரைக் கொல்லலாம். நூறு வைஸ்யர், ஆயிரம் நான்காம் வர்ணத்தவர் நிமித்தம் ஓர் அந்தணனையும் சிக்ஷிக்கலாம். நூறு நான்காம் வர்ணத்தவருக்காக ஓர் வைஸ்யனையும்,

ஐம்பது நான்காம் வர்ணத்தவருக்காக ஓர் நான்காம் வர்ணத்தவரையும் சிக்ஷிக்கலாம். பந்து மித்ரர்களுக்குச் செய்த பாபத்திற்கு முக்கால் பங்கும், மனைவிமக்களுக்கு செய்தால் பாதிபங்கும் ப்ராயச்சித்தம் செய்துகொள்ளல் வேண்டும். ஆத்மரக்ஷணார்த்தம் பாபம் நேர்ந்தால் ப்ராயச்சித்தம் இல்லை. தன்னைக் கொல்லவரும் எவரைக்கொன்றாலும் பாபமில்லை. மனைவி, மக்கள், ஸோதரர், பந்து இவர்களைச் சிக்ஷித்தால் முறையே பத்துப்பத்து மடங்கு பாபமதிகமாகும். ரக்ஷித்தால் அங்ஙனமே ஸுக்ருதமுண்டாகும். தேவர், ப்ராம்ஹணன், வேதியன், வேதார்த்தமறிந்தவன், வ்ரதம் செய்பவன், வேதாந்தி, வேதவித்து இவர்களைச் சிக்ஷித்தால் முறையே ஒன்று, இரண்டு, ஐந்து, நூறு, ஆயிரம், பத்தாயிரம், லக்ஷம் மடங்கு பாபமும் ரக்ஷித்தால் அவ்வளவுஸுக்ருதமும் உண்டாகும், அவர்களைத் தர்சித்தல், வணங்குதல், பணிவிடை செய்தல் ஆகியஇவைகளுக்கு ஸமமான புண்யமுண்டாகும் தேவப்ராம்ஹணர்களைக்காக்க வேந்தன் ஸிம்ஹம் முதலிய கொடிய ம்ருஹங்களைக் கொல்ல வேண்டும். ஆபத்தில் தன்னை ரக்ஷிக்கவும் அவ்விலங்குகளைக்கொல்லலாம். சுத்தமான அந்த மாம்ஸத்தை புஜிக்கலாம். ஆனல் தனக்கென அன்னத்தையும்.ம்ருகங்களையும் பாகம் செய்யாமல் தேவப்ராம்ஹணர் நிமித்தம் செய்தால் பாபமாகாது.

முன்னம் உலகை உய்விக்கப் பகவதி, மாயாதேவி தேவாஸுர மநுஷ்யாதிகளையும், பதினான்கு வகையான ம்ருகங்களையும் அவைகளைக் கொண்டு செய்யதக்க யாகங்களையும் படைத்தாள். மனிதர்களை நோக்கி, " ம்ருகங்களைக் கொண்டு யக்ஞம் செய்து தேவர்களை ஸந்தோஷப்படுத்துங்கள். அவர்கள் உங்கள் விருப்பைப் பூர்த்தி செய்வார்கள். இப்படி என்னலியற்றப்பட்ட சக்ரத்தை அனுஸரிக்காதவர் தரித்ரராகி பல நரகங்களை அனுபவிப்பர் " எனக் கூறினள்.

தேவ, பித்ரு, குரு, அதிதி, மஹாபுருஷர் நிமித்தம் மன்னன் மிருகங்களைக் கொல்ல வேண்டும். ஆபத்காலத்தில் அந்தணர் சுத்தமான மாம்ஸத்தை உட்கொண்டால் தோஷமில்லை. வேதம் விதித்ததைச் செய்து, தடுத்ததை விடவேண்டும்.

முன்னர் யௌவனாஶ்வன் செய்த வேள்வியில் 'எனக்கே இது, எனக்கே இது' என அமரர்களுக்குள் கலவரம் தோன்றிற்று. சதுர்முகன் அங்குவந்து இன்னாருக்கு இன்ன பசு என ஓர் வ்யவஸ்தை செய்தார். பராசக்திக்கு சிறிது சினம் தோன்ற,ப்ரஹ்மா அவளை வணங்கி, "எல்லா பசுக்களும் தங்களுக்குரியன; தாங்கள் லோக க்ஷேமார்த்தமன்றோ இதை விரும்புகிறீர்" என்று கூறி மறைந்தார். அதன்படியே அன்று முதல் வேள்வி நடைபெறுகிறது. அது நன்கு வேதத்தில் கூறப்பட்டதால் இங்கு விஸ்தரிக்கப்படவில்லை. ப்ராம்ஹண ஸ்த்ரீயைத் தவிர மற்ற பெண் மக்களும், நான்காம் வர்ணத்தவரும் மாம்ஸம் அருந்துவதால் பாபமில்லை. அந்தணன் ஆபத்காலத்தில் குரு உத்தரவுப் பெற்று அதை புஜித்தால் பாபமல்ல.

'ஏ பசோ! இதை அறி! நீ அசிவமல்ல! சிவமே! சிவனே உலக ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய காரணன். ருத்ரனே எல்லாவற்றிலும் சிறந்தவன். அவனே நீ' என்று எந்த ம்ருகத்தைத் தனக்காகவோ மற்றவர் பொருட்டோ கொன்றாலும் அது பாபமாகாது. வீட்டில் துன்புறுத்தும்பாம்பு, தேள், எலி முதலியவைகளைக் கொல்வதால் பாபமில்லை. இந்தப் பசுயக்ஞம் கர்ம பலத்தைக் கருதும் க்ருஹஸ்தர்களுக்கே ஏற்றது. மற்றோர் ஜபம், ஹோமம், தேவார்ச்சனம் இவைகளால் இஷ்டத்தைப் பெறலாம்.

இரண்டாம் அத்யாயம் முற்றிற்று.

மூன்ரும் அத்யாயம் — 66 ச்லோகங்கள்.

இந்த்ரன் :— பகவன்! ஹிம்ஸையாலுண்டாகும் பாபங்களைக் கூறினீர். திருட்டினுல் வரும் தீமையை விளக்கிக் கூறுங்கள்.

ப்ருஹஸ்பதி :— ஜீவனை வதைப்பது பாபங்களில் அதிகமானது. நம்பியவனையும், சரணாகதனையும் கொல்வது அதிலும் கொடிய பாபமாம். நம்பியவன் பாபியானுலும், நான்காம் வர்ணத்தவராயினும், சண்டாளனுயினும் அவனைக் கொல்வது ப்ரம்ஹஹத்திக்கு ஸமமாம். அதற்கு ப்ராயச்சித்தமே இல்லை. ப்ரம்ஹத்தை அறிந்தவனும், தரித்ரனும், மிகக் கஷ்டப்பட்டுப் பொருள் தேடி அதைக்கொண்டே ஜீவிப்பவனும், குடும்பியுமான ஒருவன் பொருளை அபஹரித்தல் மிகக்கொடிய பாபமாகும். நம்பியவர் பொருளை அபஹரித்தல் அதிலும் அதிக பாபம். தரித்ரன் பொருளை அபஹரிக்கக் கூடாது. தேவ த்விஜர்களுக்கு ஸொந்தமான ஸ்வர்ண ரத்நாதிகளைத் திருடும் பாபியைக் கொல்பவன் அச்வமேதயாக பலனைப் பெறுவான். குரு, தேவப்ராம்ஹணன், நண்பன், புதல்வன், ஆத்மஸகா இவர்களது பொருளைத் திருடினுல் ஒன்றைவிட ஒன்று பத்து மடங்கு பாபத்தைத் தரும். பொருளைத் திருடி வேசிக்கோ, அன்யன் ஸ்த்ரீக்கோ, கடனுக்கோ அளிப்பவன் ப்ராம்ஹண அதமனுவன். க்ஷத்ரிய, வைஸ்ய, நான்காம் வர்ணத்தவ, ப்ராம்ஹண, சண்டாளர் பொருளைத்திருடினுல் முறையே பத்துப் பத்து மடங்கு பாபமதிகமாம். பதினுயிரம், ஆயிரம், நூறு, பத்து இதில் ஓரம்சம் திருடினுலும் பாபமே. இவ்விஷயத்தில் உதாரணமாக ஓர் கதை சொல்லுகிறேன் கேள். அது மிக ரஹஸ்யமானது.

முன் ஓர் ஸமயம் காஞ்சியிலே வஜ்ரன் என ஓர் திருடனிருந்தான். அழகிய அந்நகரிலுள்ளவரனைவரும் தனிகர். தயை நிறைந்தவர், நோயற்றவர். பேராசை

கொண்ட வஜ்ரன் தனிகர் வீடுகளிலிருந்து சிறிது சிறிதாகத் திருடி நிறையப் பொருள் சேர்த்து விட்டான். அதைக் காட்டில் ஓர் பள்ளத்தில் பதுக்கிவைத்து அதன் மீது மூட ஓர் கல்லேத் தேடிச் சென்முன். அச்சமயம் அவ்வழியாக ஓர் வேடன் அந்தத் தனத்தில் பத்தில் ஓர் பாகத்தை எடுத்துக்கொண்டு விறகுக் கட்டுடன் சென்று விட்டான். வஜ்ரன் விசாலமான கல்லேக் கொண்டுவந்து அதன்மீதுமூடி மண்ணேத்தள்ளிக் குழியை மறைத்துவிட்டு மறுபடியும் காஞ்சி சென்முன். இங்ஙனம் பலமுறை திருடிப் பூமியில் வைத்து வந்தான்.

கிராதன் தன் மனேவியினிடம் அப்பொருளேத் தந்து அது வந்த வரலாற்றையுங் கூறினன். அவள் அதை மிக ஜாக்ரதையாக வைத்துவிட்டுச் சிறிது யோஜித்தாள். பின்னர் கணவனே நோக்கி, "நமது வீட்டருகே நடமாடும் ஓர் ப்ராம்ஹணன் என்னேப்பார்த்து, 'இவள் ராஜ மனேவியாயிருந்தால் மிக்க பாக்யவதியாயிருப்பாள். வேடன், ஆட்டக்காரன், சண்டாளன் முதலியவர்களிடம் லக்ஷ்மி நீண்டநாள் நிற்க மாட்டாள். இருந்தாலும் இவள் மிக்க பாக்யவதி. புண்யவதியாவாள் என்ருர். அவர் சொல் வீணுவதில்லே. நமது உழைப்பினுல் உண்டாகும் பொருளே நிலேத்து நிற்கும். மற்றது விரைவில் மறைந்து விடும். தானே வந்த தனத்தைக்கொண்டு குளம், கிணறு முதலிய தர்மத்தைச் செய்வோம்" என்ருள். இதைக் கேட்டுப் புண்யவசத்தால் அவனும் அங்ஙனமே இந்த்ர தீர்த்தத்திற்குக் கிழக்கே ஆழமான அழகிய ஓர் தடாகத்தை நிர்மாணம் செய்தான். கையில் இருந்த பொருளேக் கூலியாகக் கொடுத்து விட்டான். மிகுதி வேலேக்குப் பொருளில்லே, முன்போலவே வஜ்ரன் பூமியில் புதைத்து வைத்திருந்த தனத்திலிருந்து சிறிது சிறிதாகக் கொண்டுவந்து வற்ருத ஜலமுள்ளபடி ஆழமாகத் தோண்டி நாற் புறமும் படிக்கட்டுகளேயும், மகா விஷ்ணுவுக்கு ஓர் ஆலயத்தையும் கட்டினன். படிக்கரை

இடையே ஓர் சிவாலயத்தையும், காட்டை அழித்து அதி னுள்ளே பற்பல ஆலயங்களையும், வீடுகளையும் கட்டி, தேவர்க்கும், த்விஜர்க்கும் அர்ப்பணம் செய்தான். தேவ நாதர் முதலிய வேதியரை அழைத்து வஸ்த்ர ஸ்வர்ணாதி களைத் தந்து, ''வேதியர்களே! வீரதத்தனெனும் விறகு வெட்டி வேடனெங்கே? இந்தத் தடாகம், தேவாலயம் அக்ரஹாரமிவைகளெங்கே? தங்கள் கிருபையால்தான் இவை தோன்றின. அவைகளை ஏற்று அருள் புரிய வேண்டும். என்போன்றோர்க்கு நீங்களே கதி'' என்று வேண்டினான். அவர்கள் அப்படியே ஏற்று அவனது ப்ராம்ஹண பக்திக்கேற்றபடி த்விஜவர்மா என்று அவ னுக்குப் பெயரிட்டனர். அவன் மனைவியைச் சீலவதி என அழைத்தனர். இவ்விருவர்களும் புரோஹிதர் போன்ற தேவநாதர் பெயரால் தேவநாதபுரமென்று அதற் குப் பெயரிட்டு அங்குள்ளவர்களைக் காக்க தானுமங்கே வஸித்து வந்தான். பல காலம் சென்றபின் மனைவியுடன் த்வஜவர்மா இறந்தான். அவனருகே யமகிங்கரர் ப்ரம்ஹ தூதர், சிவதூதர், விஷ்ணுதூதர் அனைவரும் சூழ்ந்து, தத்தம் உலகிற்கே ஏற்றவன் இவன் எனப்போர் புரிந்தனர். இதனிடையே நாரதர் அங்குத் தோன்றி, ''இந்த வேடன் ஸொந்த தனத்தினால் புண்யம் செய்தவன் அல்ல. எவர்களுடைய பொருளைத் திருடித் தர்மம் செய் தானோ அவர்களும் இறக்கும் வரை இவன் வாயுவடிவனாய் ஸஞ்சரிக்கட்டும்'' என்றார். இதைக்கேட்டு, வந்த தூதர் கள் சென்றபின், முனிவர் சீலவதியை நோக்கி, ''நீ மிகப் புண்யவதி. ப்ரம்ஹலோகஞ் செல்'' என்றார். அவள், கணவனை விட்டு நான் எங்கும் செல்லமாட்டேன். அவர் வரும் வரை அல்லது பழைய உடலைப்பெறும் வரை இங்கேயே இருப்பேன்'' என்றாள். கருணைக் கடலான நாரதர் ''என் மஹிமையால் கர்மாவை நன்கு செய்யத் தக்க உடலைப் பெறுவீர்கள். அப்பாபம் நிவர்த்தியாக சுத்த ஜலத்தில் புனலாடி,விபூதி அணிந்து, ஸாம்ப ஸதா

சிவனை மனத்தே நினைத்து, ஶதருத்ரமெனும் மஹா மந்த்ரத்தை ஜபி. அது ஆயிரத்தெட்டு முறை ஜபிக்கப் படின் ப்ரம்ஹஹத்யாதி ஸகல பாபங்களையுமகற்றும்'' என்று அம்மந்திரத்தை அவளுக்கு உபதேசித்தார். அவ ளங்ஙனமே ஜபிக்க த்விஜவர்மன் பாபமகன்று பழைய உடலைப் பெற்றெழுந்தான். பின்னர், வஜ்ரனும், அவன் திருடிய பொருளுக்குச் சொந்தக்காரர்களும் இறந்தனர். யமதர்மன் அனைவரையும் நோக்கி, ''நீங்கள் செய்த பாபங்களெல்லாம் தெய்வ ஸங்கல்பத்தினுல் புண்யமாக மாறின. முதலில் புண்யத்தை அனுபவிக்கிறீர்களா? அல்லது பாப பலனை அனுபவிக்கிறீர்களா?'' என்று கேட்டார். அனைவரும் ஸுக்ருத பலனையே கோர, தர்ம ராஜன், ''த்விஜவர்மனது புண்ய பலத்தால் எல் லோருமே புத்ர, மித்ர, களத்ராதிகளுடன் விமானத்தின் மீதேறி ஸ்வர்க்கம் செல்லுங்கள்'' என்றார். த்விஜவர்மா மனைவியுடன் எல்லா உலகங்களையும் தாண்டி, கைலாஸம் சென்று, சிவ கணங்களுக்குத் தலைவனுகி, இன்றுமங்கே வஸிக்கிறுன்.

அப்புண்யத்தின் தாரதம்யப் பாகுபாட்டை இந்த்ரன் வினவ, ''பாதி புண்யம் த்விஜவர்மனைச் சார்ந்தது. கால் பங்கு வஜ்ரனுக்கும், மற்ற கால் பங்கு பொருளைப் படைத்தவருக்கும் சென்றது. மனஸ், வாக், காய, சேஷ்டைகளால் நான்கு வகையாகச் செய்யப்படும் பாபங்களும் அததனுல் செய்யப்படும் ப்ராயச்சித்தங் களால் அகலும்'' என்று ப்ருஹஸ்பதி கூறினுர்.

மூன்றும் அத்யாயம் முற்றிற்று

## நான்காம் அத்யாயம்— 18 ச்லோகங்கள்.

இந்த்ரன்:— மது எத்தகையது? அதனுலுண்டாகும் தீமை, நன்மை யாவை? அதை அருந்தில் யாது தோஷம்?

ப்ருஹஸ்பதி:— மாவினுலும், பனைச்சாற்றினுலும் தென்னஞ் சாற்றினுலும், புஷ்பங்களாலும், வெல்லத்தி-னுலும் ஐந்து வகையாக ஆஸவம் செய்யப்படுகிறது. முறையே ஒன்றைவிட ஒன்று பாபத்தில் குறைவானது. பைஷ்டிகமென்பதை எவருமருந்தலாகாது. முதல் இரண்டை வேந்தரும், நான்காம் வர்ணத்தவரும், முதல் மூன்றை வைஶ்யரும் விடவேண்டும். மூன்ருவதிலிருந்து ப்ராம்ஹண ஸ்த்ரீ தவிர மற்ற ஸ்த்ரீகளும், முவ்வர்ணத்தாரும் அருந்தலாம். கணவனை இழந்தவள், கன்யகை, ருதுமதி இவர்கள் எந்த மதுவையும் கொள்ளலாகாது. கணவன் ஊரிலில்லாதபோது மதுபானம்செய்யும் பெண் உன்மாதிநீ. அவளைச் சண்டாளிபோல் தூர விலக்க வேண்டும். மோஹத்தினுல் ப்ராம்ஹணன் மதுவை உட்கொண்டால் சாந்த்ராயண க்ருச்சிரத்தை அனுஷ்டிக்க வேண்டும். பத்தாயிரம் காயத்ரியையோ அல்லது ' ஜாதவேதஸே ' என்ற மந்த்ரத்தையோ, அம்பிகா ஹ்ருயத்தையோ ஜபித்தால் சுத்தனுவான். மற்ற முவ்வர்ணத்தவருக்கும், பெண்களுக்கும் முறையே பாதி பாதி ப்ராயச்சித்தம் செய்யவேண்டும். ப்ராம்ஹணர்களைக் கொண்டு மற்றவர் அதைச் செய்யலாம். ஜலத்திலிருந்து ஆயிரம் முறை ஜபித்தாலும் போதும்.

லக்ஷ்மீ, ஸரஸ்வதீ, கௌரீ, சண்டிகா, த்ரிபுராம்பிகா, பைரவர், பைரவி, காளீ, மஹாசாஸ்தா, மாத்ருகணங்கள், மற்ற சக்திகள் இவர்களது பூஜைக்கு மது மிகவும் ஶ்லாக்யமானது. வேதாந்தமறிந்த வேதியர் மதுவில்லாமலே அர்ச்சிக்க வேண்டும். காமனைக் கொண்ட இதரர், மதுவினுல் தேவியைப் பூஜித்து இவளைத் தவிர மற்றெதையும் கருதாது, அந்த நிவேதன மிகுதியைப் புஜித்தால் பாபலேசமுண்டாகாது. தெரிந்தோ தெரியாமலோ செய்த ஸகல பாபங்களையும் அகற்றத் தேவி பாதாரவிந்தஸ்மரணம்போதிய ப்ராயசித்தமாம். தேவி நிவேதனமில்லாமல்

அருந்தும் மது எவ்வளவு பிந்து உட்சென்றதோ அவ்வளவாண்டு ரௌரவ நரகத்தை தரும் போகத்திற்காகப் புஜிப்பவன் நான்காம் வர்ணத்தவரிலும் அதமன். ப்ராம்ஹணன் மோஹத்தினுலோ, லோபத்தினுலோ, விருப்பில்லாமலோ மதுபானஞ் செய்தால் தீயில் விழுவதைத் தவிர வேறு ப்ராயச்சித்தம் கூறக்கூடாது. தனது தவறை உணர்ந்து ஜன்மம் வ்யர்த்தமாய் விட்டதே எனப் புழுப் போல் துடிக்கும் ப்ராம்ஹணன், மஹான்களின் அனுக்ரகத்தாலும், பராசக்தியின் அர்ச்சனையாலும், யம நியமங்களாலும் எத்தனை நாள் அதை உட்கொண்டானே, அத்தனைமுறை சாந்த்ராயண க்ருச்ர அனுஷ்டானத்தினுலும் சுத்தனுவான். புத்தி பூர்வமாகக் குடித்தால் இரண்டு மடங்கு இந்த பிராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டும்.

நான்காம் அத்யாயம் முற்றிற்று.

---

## ஐந்தாம் அத்யாயம் — 36 ச்லோகங்கள்.

*இந்த்ரன்:—* அகம்யாகமனம் என்பது யாது? அதனுல் உண்டாகும் தோஷம் யாது? அதற்கு ப்ராயச்சித்தம் யாது? இவைகளை விவரிக்க வேண்டுகிறேன்.

*ப்ருஹஸ்பதி:—* தாயுடன் பிறந்தவள், குருபத்னி, மாமன் மனைவி இவர்கள் மனைவியாக எண்ணத்தக்கவர்களல்ல. தன் உடன் பிறந்தவளும், குரு பத்னியும் பெற்ற தாய் போன்றவர்கள். ப்ரம்ஹோபதேசம் முதல் வேதாந்தம் வரை கற்பித்தவர் மகா குரு ஆவர். ப்ரம்ஹோபதேசம் ஓரிடத்தே, வேத சாஸ்த்ரங்கள் வேறொரிடத்தே எனில் இவர் ஆசார்யர் ஆவர். இப்படிப் பலவகைப்படும். ஆசார்ய மனைவியுடன் சேர்ந்தால் பன்னிரண்டாண்டு க்ருச்ரம் அனுஷ்டிக்க வேண்டும். மாமன் மனைவியுடன் சேர்ந்தால் ஆருண்டு க்ருச்ரம் செய்யவேண்டும். ப்ராம்ஹண ஸ்த்ரீயுடன் ப்ராம்ஹணன் சேர்ந்தால் மூன்றுநாள் உபவாஸமிருந்து நூறு ப்ராணுயாமங்கள் செய்தால் சுத்தனுவான். ஸ்வஜாதி குலமுடையவனுனல் இரண்டு

நாளும், க்ஷத்ரிய ஸ்த்ரீயானுல் ஐந்து நாளும், வைஶ்ய ஜாதியானுல் ஏழுநாளும், குயவன், வேடன், செம்படவன் தொழிலாளிகள் ஜாதியானுல் பன்னிரண்டு நாளும், சண்டாளியானுல் ஓராண்டும் உபவாஸமிருந்தால் சுத்தனுவான் தேவதாஸி, ப்ரம்ஹதாஸி, ஸ்வதாஸி, நான்காம் வர்ணத்தவ தாஸி என்ற நால்வரில் முதலிருவரும் க்ஷத்ரிய ஸ்த்ரீ துல்யமாவர். மூன்ருவது ஸ்த்ரீ வைஶ்யப் பெண்போலும் மற்றவள் தாழ்ந்த ஜாதிப் பெண்போலுமாவள். ஆத்ம தாஸியானுல் சொன்னதில் பாதி தோஷமே தோன்றும். ஸ்வஸ்த்ரீ ரஜஸ்வலையாயிருக்கும் போது சேர்ந்தால் ப்ராஜாபத்ய வ்ரதம் செய்யவேண்டும். அத்தகைய அன்ய ஸ்த்ரீயாயின் இருபங்கும் க்ஷத்ரியையாயின் நாலுபங்கும் வைஶ்யையாயின் எட்டுபங்கும், நான்காம் வர்ணத்தவர் அல்லது வேசியாயின் பதினுறு பங்கும், ஸங்கர ஜாதியாயின் முப்பத்திரண்டு பங்கும் ப்ராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும். ஸ்வபத்னி ருதுவான காலத்தில் மோஹத்தால் சேர்ந்தால் சொன்னதில் பாதி ப்ராய சித்தம். அதாவது ஸ்னனம் செய்துவேறுவஸ்த்ரம் அணிந்து இரவுவரை உபவாஸமிருந்து தேவியை அர்ச்சிக்கவேண்டும் பெற்ருேர் உத்ரவினுல் கன்யகையைச் சேர்ந்தால் மூன்று நாள் உபவாஸமிருந்து அவளையே மணக்கவேண்டும். அவள் பிறர்க்குக் கொடுக்கப்பட்டுப் பின் கன்யாகாலத்தில் சேர்ந்தால், மூன்று நாள் உபவாஸத்தால் சுத்தனுவான். ஒர் மாதக் காலம் அத்தகைய கன்யகையைச் சேர்ந்தவன் நூறு ப்ராணுயாமம் செய்ய வேண்டும். ஒருவனுல் அநுபவிக்கப்பட்ட கன்யகையை அன்யருக்கு விவாஹம் செய்பவன் ஸர்வகர்மத்திற்கும் அர்ஹனல்லாத நான்காம் வர்ணத்தவனுவான்.

பெற்ருேரறிய ஒரு கன்யகையை ஒருவன் சேர்ந்த பின் அவளை அன்யனுக்குக் கொடுத்து, அவனிறந்த பின்

முதல்வன் தனது பாபத்தைக்கூறி, மஹான்களது அநுக்ரஹத்தால் விதிப்படி அவளையே மணந்து, க்ருஹஸ்த கர்மாக்களை அனுஷ்டிக்கலாம். விவாஹமானவள் கணவனிறந்தபின் வேறொரு புருஷனைச் சேர்ந்தால் அவள் கர்மாவிற்கேற்றவள் அல்ல.

எறும்பு முதல் ப்ரம்ஹா வரையிலுள்ள ஒவ்வோர் ப்ராணியும் பஞ்சபூதங்களால் ஆகியது. ஆஹாரம், ஶ்ருங்காரம், நித்ரை, பயம் இவைகளால் சூழப்பட்டிருக்கின்றன. ஆஹாரமின்றிப் பிழைத்தலரிது. உண்பவர் காமனையை அடக்கமுடியாது. உலகைப் படைக்கும்போதே ப்ரம்ஹன் ஆண் பெண் வடிவங்கொண்டு காமனையால் ப்ரவர்த்தித்தார். ஆதலின், அவர் ப்ரவ்ருத்தியுள்ளவரை உலகமும் காமனை கொண்டே இருக்கும். அவர் ஓய்ந்தால் ஓய்வடையும்.

இந்த ப்ரவ்ருத்தியினாலேயே நிவ்ருத்தியினலடையக்கூடிய மோக்ஷத்தைப்பெற ஓர் ரஹஸ்யமான வழி உண்டு. கேள். "ஸர்வாத்மாவான வாஸுதேவன் புராதனபுருஷன் ஸகல ஜகத்தையும் பெற்றெடுத்த ப்ரக்ருதி லக்ஷ்மி. இருபத்தைந்து தத்வ த்ருப்திக்காக மதநம் செய்யப்படுகிறது. இவள் உமையவள். நான் ஸதாசிவன். இருபத்தைந்து தத்வத்திற்காகக் கடையப்படுகிறது" என்ற மந்த்ரத்தின் மஹிமையால் ஸ்த்ரீ புருஷர்களுக்குத் தோஷம் தோன்ருது. மற்றுமோர் அதிரஹஸ்யத்தைக் கேள். "பக்தி ஶ்ரத்தையுடன் ஸ்நாநம் செய்து, ஜலத்திலிருந்து ஆயிரம்முறை பஞ்சதசாக்ஷரீமந்த்ரத்தை ஜபித்து தேவியை அர்ச்சித்தால் எத்தகைய பாபமும் கல்பகோடிகளில் செய்து சேர்ந்திருந்தாலும் பறந்துபோம். ஆபத் அகன்று ஸம்பத்துமுண்டாகும்".

ஐந்தாம் அத்யாயம் முற்றிற்று.

## ஆறும் அத்யாயம் —22 ச்லோகங்கள்.

இந்த்ரன்:— ஸர்வ தர்மங்களையுமுணர்ந்து ஸர்வ பூதங்களுக்கும் உபகாரஞ்செய்யும் பகவானே! சேர்க்கையால் உண்டாகும் பாப விசேஷத்தை கூறும்.

ப்ருஹஸ்பதி:— அதைச் செய்தவன், ப்ரதானன், ஸஹாயம் செய்தவன், நிமித்தமாயிருந்தவன், அநுமதியளித்தவன் என்பவர்களுக்குச் செயலுக்கேற்றபடி பாபம் அதிகம். முற்கூறிய உபாயத்தால் அது அகலும். மத்யம், கஞ்சா, பிசின், நாய்க்கொடை, உள்ளிப்பூண்டு, வெங்காயம், தும்மட்டிக்காய், நாயுருவி, கோவைக்காய், ஆம்பல், முருங்கைக்காய், அத்திக்காய், கத்திரிக்காய், தேற்ருங்காய் இவைகளைப் புஜித்தல் பாபம். பெயர் மாத்ரம் ப்ராம்ஹணன், தொழிலாளி. நடன், தன் நகரத்தில் உள்ள ஸேவகன், குக்கிராமத்தில் உள்ளவன், பரஸ்த்ரீகாமீ, வைத்யன், வைகாநஸன், சைவன், பெண்ணை கொண்டு ஜீவிப்பவன், அன்னத்தை விற்பவன், ஆயுதத்தால் பிழைப்பவன், ஸந்யாஸீ, வைதிகாசாரத்தை நிந்திப்பவன் ஆகிய இவர்களது பக்வான்னத்தைப் புஜித்தால் முறையே பாபமதிகமாகும். நமது அரிசியைக் கொண்டு அவர்கள் பாகம் செய்தளித்தால் சிறிது பாபமாம். ப்ராம்ஹண, க்ஷத்ரிய. வைஶ்ய, ஸத் நான்காம் வர்ணத்தவர்களது (நாம் காணுத) தைல பக்வமான பொருளைப் புஜித்தால் கால்பகுதி பாபமாம், த்விஜதாஸியால் செய்யபட்டதை அவள் எதிரில் புஜித்தாலும் பாபமாம். வேசியின் பொருளை ஏற்ருல் முக்கால் பங்கு பாபமாம். யாதவன் நான்காம் வர்ணத்தவனைப் போன்றவனே. ஆனுல் அவனிடம் பால், நெய் முதலியவைகளை ஏற்கலாம். எண்ணெய், நெய், வெல்லம் இவைகளாலாகியதை (வைஶ்யனிடமிருந்தும்) ஏற்கலாம். ப்ரஷ்ட ப்ராம்ஹண ஸ்த்ரீ தாஸியைப்போன்றவள். அவளெதிரில்

எதையும் உட்கொள்ளலாகாது. அதமன், கோள் சொல்பவனது அன்னத்தைப் புஜிக்கும் பூசுரன் நூறு ப்ராணுயாமம் செய்யவேண்டும். அல்லது, ஜலத்திலிருந்து காயத்ரியை அல்லது இதம் விஷ்ணு: த்ரயம்பஹம் என்பதை மூன்றுவாரம் ஜபிக்கவேண்டும். மேற்படி அன்னத்தைப் பெண்கள் புஜித்தால் ஓரிரவு உபவாஸம் இருந்து எத்தனைவேளை புஜித்தார்களோ அத்தனை ப்ராம்ஹணர்களுக்கு அன்னமிட்டால் சுத்தையாவார்கள். அல்லது அவ்வன்னத்தை ஜலதேவதாகமான, பாவமாநாதி ஸூக்தங்களாலே ப்ரோக்ஷிக்க வேண்டும். அன்ன ஸூக்தத்தாலோ ப்ருகுர்வைவாருணி என்பதாலோ, ப்ரம்ஹார்பணம் என்ற சுலோகத்தாலோ ஜபித்துப் புஜித்தால் பாபமில்லை. இதம் விஷ்ணு: என்ற மந்த்ரத்தால் ஏழு முறை ஜபித்து, ஸோஹம் பாவனையால் த்யானம்செய்து உண்டால் எந்த பாபமும் வராது. சங்கரனை ஸோகம் பாவனையால் த்யானித்து த்ரியம்பஹ மந்த்ரத்தை ஜபித்தலும் நன்றே. இதுவே துரான்னத்திற்கும் ப்ராயசித்தமாகும்.

இதிலும் ரஹஸ்யமானதைக் கேள். தேவியை த்யானம் செய்து, பஞ்சதசாக்ஷரியை ஜபித்து, அவளுக்கு நிவேதனம் செய்தது இது என்ற எண்ணத்தோடு நித்யம் புஜிப்பவன் எந்த பாபத்தையும், தாரித்ர்யம், வ்யாதி சத்ரு பயம் முதலியவைகளையும் அடையமாட்டான்? ஜபம் செய்பவனுக்கு எங்கும் மங்களமுண்டு. முடிவில் முக்தியுமுண்டாம். இன்னும் என்ன கேட்க விரும்புகிருய்?

ஆரும் அத்யாயம் முற்றிற்று

---

## ஏழாம் அத்யாயம் — 30 ச்லோகங்கள்.

**இந்த்ரன்:**— ஸ்வாமின்! எல்லாமுறைத்தீர், எந்த கர்ம விபாகத்தால் எனக்கு இந்தக் கதி வந்தது? அதற்கென்ன ப்ராயசித்தம்? அதைக் கூறுங்கள்.

ப்ருஹஸ்பதி:— கஶ்யபருக்குத் திதி என்பவளிடம் தநுவும், ரூபவதியும் பிறந்தனர். ரூபவதியைத் தாதாவுக் களித்தார். அவ்விருவர்க்கும் விஶ்வரூபனென ஓர் புத்ரன் பிறந்தார். அவர் விஷ்ணு பக்தர். கல்வியில் கரை கண்டவர். தைத்யர் சுக்ரரைப் புரோஹிதராக வரிக்க, தேவராஜனுன நீ விஶ்வரூபனை வரித்தாய். அவர் தானவரது ஸஹோதரி புத்ரராதலின் அவர்களிடம் த்வேஷமற்றவராயிருந்தார். ஆதலால் அஸுரேந்திரனும் தேவேந்திரனும் ஸமபலமாகவே இருந்தனர். ஆதலின் கோபங் கொண்ட நீ தபோவனஞ் சென்று, முனிவர் சூழ ப்ரம்ஹநிஷ்டனுய் வேதமோதிவரும் விஶ்வரூபரது மூன்று தலைகளையும் அறுத்தாய். அந்த பாபத்தினுல் பீடிக்கப்பட்ட நீ மேரு குஹையில் அனேகாண்டுகள் பதுங்கி நின்ருய். புத்ர சோகத்தால் வருந்திய தாதா, உன்னை விட்டு லக்ஷ்மி விலகட்டும் எனச் சபித்தார். நாதனற்ற தேவர்கள் தைத்யர்களால் பீடிக்கப்பட்டு ப்ரஹ்மாவைச் சரண் புகுந்தனர். அவர் அதற்கு பரிஹாரம் ஒன்றும் செய்யமுடியாமல் தேவர்களை அழைத்துக் கொண்டு வைகுண்டம் சென்ருர். அங்கு பகவானைப் பணிந்து துதித்து வேண்டினர். கருணுமூர்த்தியான பகவான் சிறிது யோசித்து, அந்த பாபத்தை மூன்ருகப் பிரித்து பெண்களிடமும், பூமியினிடமும், மரத்தினிடமும் கொடுத்தார். பெண்கள் ஸதா புருஷ ஸங்கத்தையும், ருதுவில் புத்ரோத்பத்தியையும், தன்னை வெட்டிய பின்பும் தான் வளரும்படி மரங்களும், வெட்டியபள்ளம் தானே தூர்ந்து போகும்படி பூமியும் வரம் வேண்டினர். அதை அச்யுதன் அளிக்க பூமியிடம் அந்த பாபம் களராகவும், மரங்களிடம் பிசினுகவும், பெண்களிடம் ரஜஸ்ஸாகவும் நின்றது ப்ரம்ஹாவின் அருளால் நீ குஹையிலிருந்து வந்து, ராஜ்யத்தையும், லக்ஷ்மியையும் பெற்ருய். ப்ரம்ஹாவினுல் ஸமாதானம் செய்யப்பட்ட தாதா, தான் இந்த்ரனுக்கு

அளித்த சாபம் காலாந்தரத்திலாவது பயனை யளிக்கட்டும் என, விஷ்ணுவை வேண்டினர். வரும் கார்யத்தை உணர்ந்த வைகுண்டநாதன், 'அப்படியே ஆகட்டும்' என்று சிரித்துக்கொண்டே சென்றார்.

மூவ்வுலகையும் ஆண்டுவந்த நீ கைலாஸத்தைப் பிடிக்க ஆரம்பித்தாய். சிவனால் தூண்டப்பட்ட தூர்வாஸர் உன் மதத்தை அகற்ற மறுபடியும் அதே சாபத்தைக் கொடுத்தார். இருவர் சாபமும் ஒரே பலனைத் தந்தது. ஆதலின் மூவ்வுலகும் லக்ஷ்மி, யக்ஞம், தானம், தபஸ், யமம், நியமம் முதலியவை இல்லாமலிருக்கின்றது பார். வேதியர் லோபிகளாய் தைர்யமிழந்து நாஸ்திகராயினர். செடிகொடிகள் வீர்யமற்றிருக்கின்றன. சந்த்ர சூர்யரும் அக்னியும் ஒளியற்றிருக்கின்றனர். காற்று புழுதி நிறைந்திருக்கின்றது. திக்கும் ஆகாசமும் குழம்பி இருக்கின்றன மூவ்வுலகும் பாழாயிருக்கின்றது.

ஏழாம் அத்யாயம் முற்றிற்று.

---

## எட்டாம் அத்யாயம். —47 ச்லோகங்கள்.

ஹயக்ரீவர்:— இப்படி இருவரும் பேசிக்கொண்டிருக்கும்போது மலகனெனும் அரக்கன் ஸ்வர்க்கத்தைப் பிடித்து, நந்தவனத்தைப் பாழாக்கிக் கோட்டையை இடித்து, வீட்டிலுள்ள வானவரை வலுவிலே இழுத்து அப்ஸரஸ்களையும் ஹிம்ஸித்தான். தேவர் கூக்குரலைக் கேட்ட வாஸவன் ஆஸனத்தை விட்டு, அமரருடன் ஸத்யலோகஞ் சென்று ப்ரம்ஹனிடம் முறையிட்டான். ப்ரம்ஹன் தேவர்களை நோக்கி, "தைத்யர்களைச் சிக்ஷிப்பவரான முகுந்தனையே சரணமடைவோ" மென, அனைவரும் பாற்கடலை அடைந்தனர். அழகிய சொற்களால் அவரைப் பணிந்து துதிக்க, பகவான் ப்ரத்யக்ஷமாகிக் கூறினார்.

ஹரி:—தேவர்களே! அஞ்சவேண்டாம். எனது தேஜஸ்ஸால் உங்களைக் காப்பாற்றுவேன். திவ்ய ஓஷதிகளை

இப்பாற்கடலிலிட்டு அஸுரருடன் ஸமாதானம் செய்து கொண்டு, மந்த்ரமலையை மத்தாகவும், வாஸுகியைக் கயிராகவும் செய்து, எனது ஸஹாயத்தால் அம்ருதமதனம் செய்யுங்கள். தானவரிடம் சென்று ஸமாதானமாக "இதிலிருந்துவரும் அம்ருதம் இருவகுப்பினருக்கும் பொதுவான" தெனக் கூறுங்கள். அம்ருதத்தை உண்டு அமரர்களாவீர்கள் அஸுரர் அதை அடையாவண்ணம் யான் செய்கிறேன்.

அங்ஙனமே தேவர் தைத்யருடன் ஸந்தி செய்து, பாற்கடலைக் கடைய ஆரம்பித்தனர். வாஸுகியின் வால் புறத்தில் வானவரும், முகத்தைத் தானவரும் பிடிக்கும்படி பகவான் தந்திரமாகச் செய்தார். பலவான்களானாலும் அஸுரர் அரவத்தின் முகத்திலிருந்து கிளம்பிய விஷஜ்வாலையால் எரிக்கப்பட்டு, தேஜஸ்ஸை இழந்து துன்புற்றனர். அனுகூல காற்றினாலும், தன் தேஜஸ்ஸினாலும் தேவர்களுக்குப் பலமளித்து பகவான் ஆதிகூர்மமாகி, முதுகுமீது அம்மலையைச் சுமந்தார். ஒருருவால் தேவரிடையிலும், மற்றொன்றாலஸுரரிடையிலுமிருந்து இழுத்தார். வேறோர் உருவால் மலையின் தலையிலிருந்து அதைப் பிடித்துக்கொண்டும், வாஸுகிக்கும் மற்றவர்க்கும் சக்தியையும் தந்தார். இதென்னவென்று ஸித்தர் சிந்திக்க, வாருணீ எனும் தேவி தோன்றி, தைத்யரிடம் சென்றாள். ஸுரா என்ற அதை அவர்கள் ஏற்காததால் அஸுரர் என்றழைக்கப்பட்டனர். பரமனது ஸூசனையால் தேவர் அதை ஏற்க, அன்று முதல் ஸுரர் ஆனார்கள். பிறகு ஸுரர்களால் பூஜிக்கத் தக்க ஸுரபி தோன்ற அனைவரும் அதைக்கண்டு ஆனந்தித்தனர். மறுபடியும் கடைய, அழகிய அப்ஸரஸ்ஸுக்களும், வாஸனையுள்ள பாரிஜாதமும் தோன்றின. பின்னர் சந்த்ரன் தோன்ற, பரமசிவன் அவனை ஏற்றுக்கொண்டார்.

அதன் பின் தோன்றிய விஷத்தை நாகங்களும், கௌஸ்துபமெனும் மணியை மாதவனும், வாஸனை நிறைந்த விஜயா என்னும் ஓஷதியை பைரவரும் எடுத்துக் கொண்டனர். பிறகு திவ்யாம்பரதாரியான தன்வந்த்ரி, அம்ருதம் நிறைந்த கமண்டலுவுடன் தோன்றினர். அதைக் கண்டு அனைவரும் ஆனந்தமடைந்தனர். அதன் பின் தாமரை வாஸனையிலுள்ள ஸாக்ஷாத் லக்ஷ்மீதேவி, கையில் தாமரை மலருடன் தோன்ற முனிவர் ஸ்ரீஸூக்தத்தினல் அவளைத் துதித்தனர். கந்தர்வர் கானம் செய்ய, அப்ஸரஸ் ஆட, கங்காதி புண்ய நதிகள் நீராட்டிவைக்கக் காத்திருந்தனர். தாமரையில் அமர்ந்த தேவிக்கு எட்டுத் திக் கஜங்களும் ஸ்வர்ண கலசத்தினல் ஸ்நாநம் செய்வித்தன பகவானுக்கு மிக பிரியமான துளஸியும் கடலிலிருந்து தோன்றினள். பாற்கடல் திவ்ய வடிவத்துடன் நின்று அழகிய பத்மமாலையைத் தேவிக்கு அளிக்க, திவ்யாபரணங்களை விஸ்வகர்மா தந்தான். அனைவரும் பார்த்திருக்க திவ்ய மாலை யணிந்த ஸ்ரீதேவி, ஸ்ரீ பதியின் மார்பை அடைந்தாள். துளஸியும் பகவானையே அடைய, ஸர்வ லோக மஹேஸ்வரியான லக்ஷ்மீதேவி, கருணை நிறைந்த கண்களால் தேவர்களை அநுக்ரஹித்தாள்.

எட்டாம் அத்யாயம் முற்றிற்று.

---

**ஒன்பதாம் அத்யாயம் — 86 ச்லோகங்கள்.**

*ஹயக்ரீவர்:—* விஷ்ணுவால் ஏற்கப்பட்ட தேவர் மிக ஸந்துஷ்டியுடனிருக்க, விஷ்ணு பராங்முகர்களான மலகாதி அஸுரர், லக்ஷ்மீ கடாக்ஷமின்றி மிக்கவாடியவர்களாயிருந்தனர். தைத்யர் தன்வந்த்ரியிடமிருந்த அம்ருதத்தை பிடுங்க, தேவர்க்கும் அஸுரர்க்கும் பயங்கரமான யுத்தம் முண்டாயிற்று. இதைக்கண்டுப்ரம்ஹாவும், சம்புவும் தத்தமிருப்பிடம் சென்றனர். ஸர்வலோக ரக்ஷகனன

விஷ்ணு தம்மைவிட வேறல்லாத ஸாக்ஷத் மஹேஸ்வரியை ஆராதித்து, தேவிமயமாகி விட்டார். எல்லோரையும் மயக்கத்தக்க ம்ருங்கார வேஷமுள்ள அம்மோஹினி, புன்னகையால் அஸுரரை மயக்கி, '' வீண் சண்டையை நிறுத்துங்கள். நான் மத்யஸ்தையாயிருக்கிறேன். இருவரும் கஷ்டப்பட்டீர்கள். எல்லோருக்கும் ஸமமாகப் பங்கிடுகிறேன். இரு பங்க்தியாக உட்காருங்கள். எவரும் பேசக்கூடாது. க்ரமமாகப்பங்கிடுகிறேன்'' என்ருள். இச்சொல்லாலும், தேவியின் உருவாலும் மதிமயங்கிய தானவர் அங்ஙனமே ஏற்று அம்பிகையிடம் அம்ருதத்தை அளித்து, வரிசையாக உட்கார்ந்தனர். இடது கரத்தில் அம்ருத கலசத்தையும், வலது கையில் ஸ்வர்ணக் கரண்டியையும் ஏந்தி, கங்கணம் சப்திக்க, மிக அழகாகத் தேவி தேவ பங்க்திக்கே முதலில் பறிமாறிஞள். தங்களிடையே தேவ வேஷம் பூண்டு அமர்ந்திருக்கும் ஸைம்ஹிகேயனைச் சந்த்ர ஸூர்யர், இவன் அரக்கன் என்று காண்பிக்க, பகவதி அக்கரண்டியால் அவன் சிரத்தை அறுத்தார். அம்ருத சம்பந்தத்திஞல் அது இறக்காமல் மேலே சென்றது. இங்ஙனம் தேவர்க்கே அம்ருதம் அனைத்தையும் அளித்து வெறும் பாத்ரத்தைத் தைத்யர் முன் வைத்து விட்டுத் தேவி மறைந்தாள். சூன்யமான பாத்ரத்தைப் பார்த்த அஸுரர், அடங்காச் சினங்கொண்டு தேவருடன் போர் புரிந்தனர். அம்ருத பாணபலத்தால் அமரர் துர்பலரான அரக்கரை அடித்து விரட்ட, சிலர் பாதாளத்திற்கும், சிலர் திக்குகளின் ஓரத்திற்கும் பயந்தோடினர். மலகாதிகளை முறியடித்து வெற்றிபெற்ற வாஸவன், லக்ஷ்மீ கடாக்ஷத்திஞல் இழந்த தேவராஜ்யத்தைப்பெற்று முன்போல் முவ்வுலகையும் ஆண்டுவந்தான். வானவரும் பயமின்றி ஸந்தோஷத்துடன் ஸஞ்சரித்தனர்.

இந்த மோஹினியின் சரித்ரத்தைக் கேட்டு ஆச்சர்யமடைந்த நாரதர், விரைவாகக் கைலாயஞ் சென்று,

நந்தியிடம் விடைபெற்று, பரமனை வணங்கி, அவரளித்த ஆஸனத்திலமர்ந்தார். "தேவரிஷியே! அம்ருத நிமித்தம் நடந்த தேவாஸுர யுத்தத்தில் யார் வெற்றிபெற்றது? அங்கென்ன அற்புதம் விஷ்ணுவினுல் செய்யப்பட்டது? கூறும்" என்று வ்ருஷபத்வஜன் வினவினுர். "ஸர்வக்ஞரான தாங்களறியாத தொன்றுண்டோ? அந்தப்போரில் ஆதி நாராயணன், ஶ்ருங்கார தேவதையே உருவெடுத்து வந்தது போல் மோஹினியாக வந்தார். அவளைக் கண்டவுடன் சண்டை ஓய்ந்தது. அந்த தேவி கூறியவண்ணம் அவளிடமே அம்ருதத்தையளித்து, தைத்யர் ஏமார்ந்தனர். தேவர்க்கே அதை யளித்து மோஹினி மறைந்தபின் அஸுரர் தேவருடன் சண்டையிட்டுத் தோல்வியடைந்து பாதாளஞ் சென்றனர்" என்று நாரதர் கூற, ஆச்சர்யமடைந்த பகவான் பார்வதியுடன் பாற்கடல் சென்ருர். சேஷசாயி எழுந்து வரவேற்று ஈசனை இறுகத் தழுவி ஆஸனத்தே அமர்த்தி, வந்தகாரணம் யாதென வினவினுர். "உமது ஜகன்மோஹனகரமான மோஹினி உருவை காண வந்தோம். வேண்டியவர்க்கு காமதேனுவான நீர் எமது விருப்பைப் பூர்த்தி செய்யும்" என்று பரமசிவன் கூற உடனே மாதவன் மறைந்தார். எங்கும் கண்படைத்த முக்கண்ணன் நான்கு திசைகளையும் நோக்க அபூர்வமான அழகிய ஓர் உத்யானம் கண்முன்னே தோன்றிற்று மலர்ந்த புஷ்பங்களிடையே ரீங்காரத்துடன் ஸஞ்சரிக்கும் வண்டுகளும் திக்குகளெல்லாம் பரவும் சம்பகாதி புஷ்ப வாஸனையும், மாந்துளிரை அருந்தி மதோன்மத்தாய் கூவும் குயிலும், அஶோகமரத்தே தாண்டவமாடும் மயிலும், பாடலி, தமாலம் முதலிய புஷ்பவாஸனையும், இளங்காற்ருல் அசையும் தாமரை நிறைந்த தடாகங்களும் முனிவர் மனதையும் கவர்ந்தன. அங்கு ஓர் பாரிஜாத மரத்தருகே இளம் ஸூர்யன்போல் சிவந்த மேனியுள்ளவளும், நவ யௌவனம் வாய்ந்தவளும், உயர்ந்த பத்ம

ராகம் போன்ற பாதங்கள், நகங்கள் இவைகளின் காந்தியை உடையவளும், செம்பஞ்சுக் குழம்பில்லாமலே சிவந்த பாதார விந்தமுள்ளவளும், அழகாக சப்திக்கும் பாத சலங்கையுள்ளவளும், மன்மத பாணபெட்டியின் திமிரை அடக்கும் முழங்காலுள்ளவளும், யானைத்துதிக்கைப்போன்ற துடையுள்ளவளும், சிவப்பாயும் வழுவழுப்பாயும் மெல்லியதாயுமுள்ள பட்டாடை உடுத்தியவளும் புதிய மாணிக்கம் பொருந்திய ஒட்டியாணம் உள்ளவளும், சுழல்போல் குழிந்த நாபியின் மேல் மூன்று ரேகையுள்ளவளும், மிகப்பெரிய ஸ்தனமண்டலமத்தியில் புரளும் முக்தாஹாரங்களுள்ளவளும், காட்டுவாழைபோல் ம்ருதுவான கைகளும்அழகிய கங்கணங்களுமுள்ளவளும், ஒவ்வோர் விரல்களிலும் கணையாழியணிந்தவளும், ஶங்கம் போன்ற கழுத்துள்ளவளும், கண்ணாடி போன்ற முகமும், சிவந்த உதடும், முல்லையரும்பு போன்ற தந்தபங்க்தியும், பெரும் முத்துடன் கூடிய மூக்கும், சிறிய தாழைமடல் போன்ற நீண்ட கண்ணும், அர்த்த சந்திரன் போன்ற நெற்றியில்விளங்கும் முந்நெற்றி மயிர்களை உடையவளும் அழகிய குண்டலம் உள்ளவளும், வாயில் வெற்றிலையும், நெற்றியில் கஸ்தூரிபொட்டும், தலையில் கறுத்த மயிரும் சஞ்சலமான கடை கண்களுள்ளவளும், ஸர்வ அவயவ பூஷிதையும், பந்தாட்டி வருபவளுமான மோஹினியைக் கண்டு பரமசிவன் மோஹித்து உமையை விட்டு அவளைப் பின் தொடர்ந்தார். அவள் பயந்தவள்போல் ஓட, வெகு ச்ரமபட்டு ஶிவன் அவளைப்பிடித்து அடிக்கடி ஆலிங்கனம் செய்துக்கொண்டார். அவரை உதறித் தள்ளி வெகு விரைவாக மோஹினி ஓடியும் காமபரவஶரான ஶிவன் பின் தொடர்ந்து பலாத்காரமாகக் கட்டிக்கொண்டார். உடனே ஶிவவீர்யம் சிந்த, அதிலிருந்து ஸகல ராக்ஷஸர்களையும் வெல்லத்தக்க மஹாசாஸ்தா என்பவர் உதித்தார். ஶிவவீர்யம் பட, ஆங்காங்கு, பூமி வெள்ளி

சாயையாகவும், ஸ்வர்ணநிறமாகவும் மாறிற்று. ஜகன் மோஹினியும் அங்கே மறைந்தாள். ஶிவையுடன் ஶிவனும் கைலை சென்றார்.

என் மனதிலேயே உள்ள ஓர் அற்புதத்தைக் கூறுகிறேன் கேள். முன்னர் பண்டன் எனும் ஓர் அஸுரனிருந்தான். அவன் தன்னிஷ்டப்படி தன் இனத்தவரைப்படைக்கும் சக்தி வாய்ந்தவன். அவன் சுக்ரருக்கு ஸமமான விசுக்ரனை வலது தோளிலிருந்தும், விஷங்கனை இடது தோளிலிருந்தும் படைத்தான். தூமினீ எனும் ஸஹோதரியையும் ஸ்ருஷ்டித்தான். இரு ஸஹோதரருடனும் அவன் ப்ரும்ஹாண்டத்தை ஹிம்ஸித்தான். த்ரிமூர்த்திகளும் அவனைக்கண்டு அஞ்சிப் பதுங்கினர். தேவகணங்கள் அவனால் பீடிக்கப்பட்டு மூச்சுவிடவும் முடியாதிருந்தனர். சிலர் பாதாளத்திலும், சிலர் ஜலத்திலும், சிலர் திக்கின் கோணங்களிலும், சிலர் மலைப்புதர்களிலும் பதுங்கி, மனைவி மக்களை விட்டுப் பிரிந்து, அதிகாரத்தை விட்டு உயிரை மிகக் கஷ்டத்துடன் காத்தனர். ப்ரம்ஹா முதல் ஸகல தேவ ஜாதிகளையுமவன் த்ருணமாக எண்ணி உலகை ஆண்டான்.

அவனைக்கொன்று உலகைக்காக்கத் தேவி இரண்டாவது அவதாரம் செய்தாள். யாகாக்னியிலிருந்து லலிதா என்ற பெயருடன், பாஶம், அங்குஸம், தனுஸ், பாணம் முதலியவைகளைக் கரங்களிலேந்தி, பரப்ரம்ஹ ஸ்வரூபிணியான அவள் பண்டாஸுரனைச் சண்டையில் கொன்றாள்.

ஒன்பதாம் அத்யாயம் முற்றிற்று.

---

## பத்தாம் அத்யாயம். — 35 ச்லோகங்கள்.

***அகஸ்த்யர் :—*** பண்டாஸுரன் எப்படி உண்டானான்? த்ரிபுராம்பிகை எங்ஙனம் தோன்றினாள்? அவன் எப்படிக் கொல்லப்பட்டான்? விஸ்தாரமாகக் கூறுங்கள்.

ஹயக்ரீவர்:— முன்னர் தந்தையின் யக்ஞத்தை அழித்த தாக்ஷாயணியை விட்டுப் பரமஶிவன் தன்னைத் தானே த்யானித்து ப்ரம்ஹாநந்த பரிதாரகக் கங்கைக் கரைமீது ஹிமாலயத்தே தங்கினார். அதை உணர்ந்த ஹிமவான், நாரதர் மூலம் தாக்ஷாயணியே தனக்குப் பெண்ணானாளென்றறிந்து, ஶிவனுக்குப் பணிவிடை செய்யும்படி உமைக்குக் கட்டளையிட்டார்.

இதனிடையே தாரகனால் பீடிக்கப்பட்ட தேவர்கள் ப்ரம்ஹாவின் உத்தரவுப்படி மன்மதனை அழைத்து, "உலகைப் படைக்க ஆரம்பித்த சதுர்முகனுக்கு மனதில் ஸந்தோஷமில்லாததால் ஸ்ரீ லக்ஷ்மீ நாராயணனைக் கருதித் தவம் செய்தார். பகவான் ப்ரத்யக்ஷமாகி யாது வரம் வேண்டுமென்றார். அவர் அநுயாஸமாக உலகைப் படைக்க அருள்புரிய வேண்டுமென்றார். உடனே லக்ஷ்மீபதி லக்ஷ்மியின் முகத்தை நோக்க அங்கிருந்து அழகிய நீ பிறந்தாய். கரும்புவில்லையும், புஷ்பபாணத்தையும், எங்கும் ஜயத்தையும், எவராலும் தாண்டமுடியாமையையும் உனக்கு வரமாக அளித்து, உன்னைக்கொண்டு சுலபமாக உலகைப்படைக்கும்படி அநுக்ரஹித்தார். அஜனும் ஸந்துஷ்டரானார். உனது பலமும், பராக்ரமமும், அழகிய அம்பும் எங்கும் தடையற்றது. ப்ரம்ஹாவிடம் வரம்பெற்ற தாரகன் ஸகல உலகையும், விசேஷமாக எங்களையும் பீடிக்கிறான். ஶிவ புத்ரனைத் தவிர மற்றவரிடம் அவனுக்குப் பயமில்லை. ஶிவனுக்கும், ஶிவைக்கும் குமாரன் ஜனிக்கும்படி செய்ய உன்னைத்தவிர வேறெவராலும் முடியாது. ஆத்மைக நிஷ்டராய் முனிவர் சூழ, ஶிவன் இமயகிரியில் தவம்புரிகிறார். கௌரி அங்கு அவருக்குப் பணிவிடை செய்கிறாள். அவ்விருவரையும் ஒன்று சேர்க்கும் இச்சிறு கார்யத்தினால் எங்களைக் காப்பாற்று" எனக்கூறினர்.

இவ்வாறு அடிக்கடி இந்த்ரனுல் துதிக்கப்பட்ட காமன் ஆத்ம விநாசத்தின் பொருட்டு, ஶிவாலயஞ்சென்று கந்த புஷ்பாதிகளால் ஶிவனுக்குபசாரம் செய்யும் பார்வதியைப் பார்த்தான். ஒருவருமறியாமல் பதுங்கி நின்று புஷ்பபாணத்தால் பரமஶிவனை அடித்தான். உடனே ஶிவன் ஸர்வ கர்மங்களையும் மறந்து ஆசையுடன் தேவியை நோக்கினுர். பிறகு தைர்யங்கொண்டு என்ன இது ? என்று யோஜித்து எதிரில் புஷ்ப பாணத்துடன் நிற்கும் மன்மதனை மூன்ருவது கண்ணுல் எரித்தார். இதைக்கண்டு துக்கமடைந்த பார்வதி தன் தந்தை உத்தரவு பெற்றுத் தவம் செய்யச் சென்ருள்.

சித்ரத்தில் ஸமர்த்தரான ஓர் கணேஶ்வரர் மன்மதனது சாம்பலை ஒரு புருஷவடிவாகச் செய்தார். அதை ஶிவன் தன் கண்ணுல் பார்த்தவுடன் அது ஒரு தேஜஸ்வியான புருஷனுய் உயிர்பெற்றெழுந்தது. கணேஶ்வரனுன சித்ரஸேநன் அவனைத் தழுவி, "ஶிவனை ஸ்தோத்ரம் செய்" என்று ஶதருத்ரீய மந்த்ரத்தை அவனுக்கு உபதேசித்தார். அங்ஙனமே அப்புருஷன் அதை ஜபித்து ஶிவனை நமஸ்கரித்தான். ஸந்தோஷங்கொண்ட ஸாம்பஶிவன் அவன் கோரியபடி சத்ருவின் பாதி பலம் அவனை வந்தடையும்படியும், சத்ருக்களது அஸ்த்ர சஸ்த்ரங்கள் அவனைப் பாதிக்காதபடியும், அறுபது ஆயிரமாண்டு ராஜ்யமாளும்படியும் வரம் தந்தார். இவனது செயலைக்கண்டு ப்ரம்ஹா "பண்ட்' 'பண்ட்" என நகைத்தபடியால் அப்புருஷனுக்கு பண்டாஸுரன் எனப் பெயர் உண்டாயிற்று.

பத்தாம் அத்யாயம் முற்றிற்று.

---

## பதிஞேராம் அத்யாயம் — 35 ச்லோகங்கள்

ஹயக்ரீவர்;— ருத்ரகோபாக்னியால் உண்டான பண்டன் உக்ரஸ்வரூபனுகவும், அஸுரனுகவுமானுன். சுக்ரரும்,

ஆயிரக்கணக்கான தைத்யரும் அவனைச்சூழ்ந்து கொண்டனர். தைத்ய ஶில்பியான மயனை அழைத்து, முன்னர் அஸுரேந்த்ரரிருந்து மூவ்வுலகையும் ஆண்டவிடமான சோணிதபுரத்தைப் புதியதாக நிர்மாணம் செய்யும்படி பண்டன் கூறினன். அங்ஙனமே அவர் மனதினல் ஓர் க்ஷணத்திற்குள் தேவபுரம்போல் படைக்க, ஆங்கு, சுக்ரர் அவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து, முன்னர் ஹிரண்யனுக்கு ப்ரம்ஹா தந்ததும், ஜீவகலையுடன் கூடியதும், அழிவற்றதுமான க்ரீடத்தைச்சூட்டினர். பிரம்மனுல் படைக்கப்பட்டதும், ரோகம், துக்கம் முதலியவைகள் தோன்ருமல் காப்பதுமான இரு சாமரங்களையும், ப்ரம்ஹ நிர்மிதமானதும், அஸ்த்ர சஸ்த்ரங்கள் மேல் விழாமல் காப்பதுமான குடையையும், விஜயமெனும் வில்லையும், கத்தியையும், திவ்ய ஆபரணங்களையும், ஸிம்ஹாஸநத்தையும் தந்தார்.

ஸர்வ ஆபரணங்களுடன் ஸிம்ஹாஸனத்திலமர்ந்த அவன் கடைசல் பிடித்த ரத்நம்போல் விளங்கினன். இந்த்ர ஶத்ரு, அமிலித்ரக்னன், வித்யுன்மாலீ, விபீஷணன், உக்ர கர்மா, உக்ரதன்வா, விஜயன், ஶ்ருதிபாரகன் என பலிஷ்டர்களான எட்டு அஸுரர்கள் அவனைச் சூழ்ந்திருந்தனர். அவனுக்கு ஸம்மோஹினி, குமுதினி, சித்ராங்கி, ஸுந்தரி என நான்கு மனைவிகளிருந்தனர். காலகதியை அறிந்த இந்த்ரன் முதலிய தேவர்கள் அவனை ஸேவித்தனர். ரதகஜ துரக பதாதிகள் ஆயிரக்கணக்காக அவனிடமிருந்தன. எல்லா அரக்கர்களும் சுக்ரர் சொற்படி நடந்து, புத்ர பௌத்ராதிகளுடன் பரமஶிவனை ஆராதித்தனர். ஒவ்வோர் ராக்ஷஸர் வீட்டிலும் யக்ஞமும், ருக் யஜுஸ், ஸாம வேதங்களின் அத்யயநமும், மீமாம்ஸா, ந்யாயம் முதலிய ஶாஸ்த்ர விசாரமும் நடந்துவந்தன. மகரிஷிகளது ஆஶ்ரமத்தில் நடக்கும் வேள்வியைப்போல் அஸுரர் வேள்வியிலும் தேவர்கள் ஹவிஸ்ஸைப் புஜித்தனர். இங்ஙனம் உலகை ஆண்டு

வந்த பண்டனுக்கு அரைக்ஷணம்போல் அறுபது ஆயிரம் ஆண்டுகள் சென்றன.

தபஸாலும், பலத்தாலும் அஸுரர் பலிஷ்டர்களானுர்கள். இந்த்ரன் குறைந்து வருவதைக் கண்ட கமலாபதி ஜகன்மோஹினியான ஓர் மாயையைப் படைத்து, "உனது தேஜஸால் நீ உலகை ஜயி. உன்னை எவரும் ஜயிக்க முடியாது. விரைவாகச்சென்று பண்டாஸுரனை மயக்கி விஷயங்களை அனுபவி" என்ருர். அப்படியே என அச்யுதனைப் பணிந்து, அவள் தனக்கு ஸஹாயமாகச் சில அப்ஸரஸ்ஸுகளை அளிக்கவேண்டினுள். அங்ஙனமே அவர் அளித்த விஶ்வாசி முதலியவர்களுடன் கூடி, பண்டன் மனைவிகளுடன் க்ரீடை செய்யும் மாநஸ ஸரஸிற்குச் சென்ருள். ஓர் சம்பகமரத்தடியே தங்கி, தோழிகளுடன் அழகாகப் பாடினுள். பண்டனும் மந்த்ரிகளுடன் அங்கு வந்து, இனிய கானத்தால் பரவஶனுகி, அம் மரத்தருகேச் சென்ருன். மின்னல் கொடிபோன்ற அவளைக் கண்டு மோஹித்தான். மந்த்ரிகளும் மற்ற மங்கையரிடம் ஆசை கொண்டனர். வெகுநேரம் அவர்கள் தங்களை ஏற்றுக் களிக்கும்படி வேண்ட, முடிவில் அவர்களும் இசைந்தனர். மஹாயாகங்களால் கூடக் கிடைக்கத் தகாத அந்த ஸ்த்ரீ ரத்னங்களைப் பெற்று, அனைவரும் பேராநந்தமடைந்தனர். இதில் சிக்கிய அஸுரர் மறையையும், மாதேவனையும், வேள்வியையும், மற்ற ஶுபாசாரங்களையும் மறந்தனர். புரோஹிதரை அவமதித்தனர். இங்ஙனம் எண்ணூறு ஆண்டுகளை ஒரு முஹூர்த்தம்போல் கழித்தனர்.

**பதினேராம் அத்யாயம் முற்றிற்று.**

---

## பன்னிரண்டாம் அத்யாயம் - 44 ச்லோகங்கள்.

அஸுரர் மோஹத்தால் ஸதாசாரத்தை விட்டுவிட இந்த்ரன் முதலிய தேவர்கள் அஸுர பீடை நீங்கி, பரம

ஸந்தோஷ மடைந்தனர். ஒரு ஸமயம் நாரதர் இந்த்ர ஸபைக்குவர, வாஸவன் எழுந்து வணங்கி ஆஸனமளித்து "பகவன்! தமது வரவால் யான் தன்யன் ஆனேன். இனி எனக்கு மங்களமுண்டாகும். உமது வசனும்ருதத்தைக் கேட்டு ஸமஸ்த துக்கங்களிலிருந்தும் கரையேறி க்ருதார்த்தனுவேன்" என்ருர்.

நாரதர்:— இச்சமயம் பண்டன் விஷ்ணு மாயையால் மோஹமடைந்திருக்கிருன். அதிலிருந்து விடுபட்டால் மூவ்வுலகையும் தஹிப்பான். உன்னை விட அதிக பலமும், தேஜஸ்ஸும் சஸ்த்ரமுமுள்ள பண்டனது தேஜஸ்ஸை குறைக்க வேண்டும். தேவியை ஆராதித்து அவளருள் பெற்ருலன்றி, கல்ப கோடிமதமானுலும் அவனை அசைக்க முடியாது அவன் மேன்மை அடைவதற்குள் அம்பிகையை ஆராதித்து க்ஷேமத்தை அடையுங்கள் என்ருர்.

இப்படி உபதேசித்த நாரதரைப் பூஜித்து, தேவருடன் தேவேந்த்ரன் தவம் செய்ய இமயமலைச் சென்ருன். அங்கு கங்கை கரையில் ஸமஸ்த தேவர்களுடன் பராமக்தியை பூஜித்தான். அந்த இடம் அதுமுதல் இந்த்ரப்ரஸ்தமென வழங்கப்படுகிறது. நாரதர் கூறியபடி ஜபத்யானுதிகளால் வேறிடத்தே மனதைச் செலுத்தாமல் ஏகாக்ர சித்தர்களாகத் தேவி பூஜை செய்து உக்ரமான தவம் செய்தனர். அவர்கட்குப் பத்தாயிர மாண்டுகள் பத்துத் தினம்போல் சென்றன.

மோஹமடைந்த தம் சிஷ்ய வர்க்கத்தைக்கண்டு சுக்ரர் பண்டனிடம் சென்று, "உனது பலத்தைக் கொண்டே அஸுரர்கள் நிர்ப்பயர்களாக ஸஞ்சரிக்கின்றனர். ராக்ஷஸ ஜாதியையே அழிக்கும் விஷ்ணு, மாயையால் உங்களை மோஹிக்கும்படி செய்து விட்டார். ஸமயம் பார்த்துக் கொண்டிருந்த இந்த்ரன் உன்னை ஜயிக்கும் பொருட்டு கடுமையாகத் தவம் செய்கிருன். அதனுல்

ஜகன்மாதா ஸந்தோஷமடைந்தால் அவனுக்கே ஜயமுண்டாகும். ஆதலால் மோஹத்தை விட்டு மந்த்ரிகளுடன் ஹிமாலயஞ்சென்று சத்ருக்களின் தவத்தைக் கலை'' என்றார். உடனே பண்டன் ஆஸனத்தை விட்டெழுந்து மந்த்ரிகளை அழைத்து இந்த வ்ருத்தாந்தத்தைக் கூறினான்.

ஶ்ருதவர்மா எனும் மந்த்ரி, "தைத்யேந்த்ர! ஶிவனளித்த அறுபதாயிரமாண்டும் கழிந்தும் அநேக காலமாய் விட்டது. காலத்தை மீற எவராலும் முடியாது. அந்தந்தக்காலத்தில் ஸுக துக்கங்களை அனுபவிக்கத் தான் வேண்டும்.'' என்றான். பீமகர்மா:— ''காலத்தை கருதி சத்ருவை உபேக்ஷை செய்யலாகாது. குரு கூறியபடி சத்ருவின் கார்யத்தைக் கெடுத்து ஜயம் பெறுவோம். அன்றியும் சத்ருவின் பாதிபலம் தங்களிடம் வரும்படி ஶிவனளித்த வித்யையால் உமக்கே ஜயம்'' என்றார். இதை ஆமோதித்துப் பண்டன் ஸேனையுடன் இமயகிரி சென்றான். இதையறிந்த அம்பிகை தாண்ட முடியாத மாயா ப்ராகாரத்தை அங்கு உண்டு பண்ணினாள். பண்டன் அதைக்கண்டு ஆச்சர்யமடைந்து மிக்க பலமுள்ள அஸுராஸ்த்ரத்தால் அதை முறித்து கர்ஜித்தான். முறிக்க முறிக்க மறுபடியும் புதிது புதிதாகத் தோன்றும் அக்கோட்டையைக் கண்டு அஸுரேந்த்ரன் வருந்தித் தன் இருப்பிடம் சென்றான்.

தேவர்கள் பல்லாண்டு கடுந்தவம் புரிந்தும் தேவி ப்ரத்யக்ஷமாகாததால் வருந்தி, மிகப் பயங்கரமான ராக்ஷஸ ஸேனையைக் கண்டு பயந்தோட ஆரம்பித்தனர். வாஸவன் அவர்களை நோக்கி, ''அரக்கன் எங்குச் சென்றாலும் நம்மை விடப்போவதில்லை. அவனை ஜயிக்கவும் நம்மால் முடியாது. ஒரு யோஜனை தூரம் விசாலமான ஒரு குண்டத்தை கல்பித்து மஹாயாகவிதியாக அக்னியை ப்ரதிஷ்டை செய்து, பராசக்தியைக் குறித்து மஹா மாம்ஸத்தால் யாகம் செய்து மோக்ஷமடைவோம். அல்லது

ஸ்வர்க்கத்தை அனுபவிப்போம்'' என்ருன். அங்ஙனமே அமரர் விதிப்படி மந்த்ர பூர்வமாக தங்கள் மாம்ஸத்தை அறுத்தறுத்துக்கைகால் முதலியவைகளை ஹோமம்செய்து கடைசியாக சரீரத்தை ஹோமம் செய்யும்போது ஒப்பற்ற ஒருதேஜஸ் தோன்றிற்று·கோடி ஸூர்யன்போல் ஜ்வலிப்பதும், கோடி சந்த்ரனைப்போல் சீதளமாயிருப்பதுமான அந்த தேஜஸ்ஸினிடையில் ஓர் சக்ரமும், அதனிடையே ஜகத்தை உஜ்ஜீவிப்பவளும், ப்ரம்ஹ விஷ்ணு ருத்ரஸ்வரூபிணியும், உதய ஸூர்யனை யொத்த காந்தியுள்ளவளும் அழகின் எல்லையும், ஆனந்தக்கடலும், ஜபா புஷ்பம் போன்றவளும், மாதுள முத்துபோன்ற வர்ணமுள்ள வஸ்த்ரமணிந்தவளும், ஸர்வாபரணங்கள் பூண்டவளும் ஶ்ருங்காரத்திற்கு இருப்பிடமானவளும், கருணைததும்பிய கடைக்கண்ணுள்ளவளும், பாஶம் அங்குஶம், இக்ஷு கோதண்டம், பஞ்சபாணம் முதலியவைகளைக் கரத்தில் ஏந்தியவளுமான ஸாக்ஷாத் மஹாதேவி தோன்றினுள். ஸமஸ்த தேவர்களும் பரம ஸந்தோஷத்துடன் தேவியைப் பலமுறை பணிந்தனர். அவர்கள் மீது தேவியின் கடாக்ஷம் வீழ்ந்தவுடன் தேவர் அனைவரும் வஜ்ர சரீர முள்ளவர்களாகி அகிலார்த்தத்தையு மளிக்கும் அம்பிகையைக் கீழ்க்கண்டவாறு துதித்தனர்.

பன்னிரண்டாம் அத்யாயம் முற்றிற்று.

---

## பதின்மூன்ரும் அத்யாயம்-— 57 ச்லோகங்கள்

## லலிதா ஸ்தவராஜம்.

தேவீ! ஜகன்மாதாவே! பரவஸ்துவிலும் பரமானவளே! கல்யாணத்திற்கிருப்பிடமானவளே! காமகலா ஸ்வரூபிணீ! சங்கரீ! வாமாக்ஷீ! காமாக்ஷீ! சுந்தரீ! ஸமஸ்த தேவர்களாலும் ஆராதிக்கத் தக்கவளே! காமேஶீ! காமத்தை யளிப்பவளே! ப்ரம்ஹஸ்வரூபிணீ!

ப்ரம்ஹாநந்த ரஸாத்மிகே! நாராயணீ! பரே! ஸமஸ்த லோகத்தையும் ஸந்தோஷப்படுத்துபவளே! ஸ்ரீ கண்டனுக்கு ப்ரியமானவளே! ஸ்ரீ லலிதாம்பிகே! ஸ்ரீ விஜயே! தேவீ! விஜயலக்ஷ்மியையும் ஸம்ருத்தியையும் அளிப்பவளே! ஸர்வோத்க்ருஷ்டையாய் விளங்குக!

உண்டானதற்கும், உண்டாகப் போவதற்கும், யக்ஞயாகாதிகளுக்கும், கிணறுவெட்டுவது, தோப்பு வைப்பது முதலிய பூர்த்தத்திற்கும் காரணமானவளே! மூன்று லோகங்களையுங் காப்பவளே! உனக்கு நமஸ்காரம். கலை, முஹூர்த்தம், காஷ்டை முதலிய காலவடிவமானவளே! ஆயிரக் கணக்கான தலை, வாய், கண், கை, கால்களுள்ளவளே! நமஸ்காரம். அணுவிலுமணுவாய்ப் பெரிதிலும் பெரிதாய், பரத்திலும் பரமாய், தேஜஸ்ஸிற்குத் தேஜஸ்ஸாய் உள்ளவளே! அதலம் உனது கால், விதலம் முழங்கால்; ரஸாதலம் இடுப்பு: பூமி வயிறு: புவர்லோகம் ஹ்ருதயம்: ஸ்வர்க்கம் முகம்: கண்கள் சந்த்ர ஸூர்யாக்நிகள்: திக்குகள் கைகள்: காற்று மூச்சு: வாக்கு வேதங்கள்: விளையாட்டு உலக ஸ்ருஷ்டி: தோழன் சின்மய சிவன்: ஆஹாரம் ஸதாநந்தம்: இருப்பிடம் ஸாதுக்களின் ஹ்ருதயம்: காண்பதும் காணாததுமான புவனம் உனது ரூபம்: கேஶம் ஆகாஶம்: நக்ஷத்ரங்கள் புஷ்பம்: தர்மாதிகள் கரங்கள்: அதர்மம் ஆயுதம்: யம நியமாதிகள் விரல்கள்: ஸ்வாஹா ஸ்வதா என்பன உலகை உஜ்ஜீவிக்கும் ஸ்தனங்கள்: ப்ராணாயாமம் மூக்கு: நாக்கு ஸரஸ்வதீ: ப்ரத்யாஹாரம் இந்த்ரியங்கள்: த்யானம் புத்தி: தாஹம் ஆஸநம். மனஸ் தாரணாசக்தி: ஹ்ருதயம் ஸமாதி: உடலிலுள்ள ரோமங்கள் மரங்கள்: உதயம் வஸ்த்ரம்: பூதம் பவ்யம் பவிஷ்யத் எனும் முக்காலமும் நித்யமான ஶரீரம்: யக்ஞரூபே! ஜகத்தாத்ரீ! ஸர்வாதாரமான உன்னை

உலகம் அறிவதில்லை. எல்லோருடைய உள்ளத்திலிருந்தாலும் காணப்படாதவள் நீ. மோஹன ஶக்தி உள்ளவள். நாம ரூப வடிவமான உலகைப் படைத்து அதில் பற்றில்லாமல் அங்கே நிற்பவள். அத்தகைய தேவிக்கு நமஸ்காரம். மஹா தேவியாய் ஸர்வ ஶக்தியாய், பரா ஶக்தியாய். பரப்ரம்ஹம், ப்ரம்ஹாநந்தா என்றழைக்கப் படுபவளான தேவிக்கு நமஸ்காரம்! தன் ஆக்ஞையால் அக்னி, ஸூர்யர், சந்த்ரர், காற்று, ப்ருதிவி முதலியவைகளை உலகிற்குப் பயன்படுமாறு செய்பவளும் நீ. ப்ரம்ஹனைப்படைத்து, ஆதி ஶ்ருஷ்டியில் ஆதி பூமியாயிருந்து உலகைத்தரித்த தேவிக்கு நமஸ்காரம்! அமேயமான ஶக்தியால் ப்ருதிவி, ஆகாஶம் முதலியவைகளைத் தரிப்பவளும், தன்னிடமிருந்து ஸூர்யனை உதிக்கும்படிச் செய்பவளுமான தேவிக்கு நமஸ்காரம்! ஸ்வர்க்கம் அந்தரிக்ஷம் இவைகளைத் தனக்குள்ளே அமைத்து உலக வடிவமாயுள்ள தேவிக்கு நமஸ்காரம்! இந்த ஸமஸ்தமான ஜகத்தும் அந்தந்தக் காலத்தில் எங்கிருந்து உண்டாகி எங்கு வளர்ந்து எங்கு ஒடுங்குகின்றதோ அந்தத் தேவிக்கு நமஸ்காரம்!

ரஜோ குணத்தால் படைத்து ஸத்வத்தால் ரக்ஷித்துத் தமஸால் அழிப்பவளும், குணமற்றவளுமான ஶிவைக்கு நமஸ்காரம்! ஜகத்திற்கு ஒரே தாயாயும், தந்தையாயுமுள்ளவளும், அகில தந்த்ர ரூபமாயும், யக்ஞ ரூபமாயுமுள்ள தேவிக்கு நமஸ்காரம்! லோக குருக்களில் ப்ரதானமாயும், வாக் விபூதியாயுமுள்ள தேவிக்கு நமஸ்காரம் லக்ஷ்மியாய் ஜகத்திற்கு ஒரே ஸந்தோஷமாய், ஶம்பு பத்நியாய் ஸர்வ ஶக்தியாயுள்ள தேவிக்கு நமஸ்காரம்! ஆதி மத்யம், அந்த மற்றதும், பஞ்சபூத ஸம்பந்தமில்லாததும், வாக்கு, மனஸ்ஸு இவைகளுக்கு எட்டாததும், ஊஹிக்கவும் முடியாத வைபவமுள்ளதும், ரூபமற்றதும், இரண்டற்றதும், கண்ணுக்குப் புலப்படாததும்

சிறந்ததுமான உனது ப்ரபாவத்தை எப்படி வர்ணிப்பது? உலகத்தால் நமஸ்கரிக்கப்பட்ட விஶ்வேஶ்வரீ! வேத ரூபிணீ! மாயாமயீ! மந்த்ர ஸ்வரூபீ! ஸர்வேஶ்வரீ! ஸர்வ ரூபிணீ! தயை செய்வாயாக!

இவ்வாறு இந்த்ரன் முதலிய தேவர்கள் துதித்துப் பல முறை பணிந்து தேவியைப் சரணமடைந்தனர். ப்ரஸன்னமான தேவி வாஸவனை நோக்கி, "வரத்தை வேண்டிக்கொள்" என்றாள். இந்த்ரன், "தாயே பண்டனால் பீடிக்கப்பட்ட நாங்கள் மிக்க ஶ்ரமத்துடன் உயிரை வைத்துக்கொண்டிருக்கிறோம். நீயே ஶரணம்" என்றான். தேவியானவள், "நானே அவனைக்கொன்று விரைவில் மூவுலகையும் உனக்களிக்கிறேன். நிர்ப்பயமாயும், ஸந்தோஷமாகவும் தேவர்களிருக்கட்டும்" என்றனள்.

அன்றியும், "இந்த ஸ்துதியைப் பக்தியுடன் படிப்பவர் தர்மம், ஶ்ரீ, யஶஸ் இவைகளைப் பெற்று, வித்யா விநயஸம்பந்நர்களாய் நோயற்று, நீண்டநாள் புத்ரமித்ர களத்ரர்களுடன் ஸுகமாக வாழ்வர்" என்றும் வரமளித்தனள். அனைவரும் தேவியைப் பார்த்துப் பார்த்துப் பேரானந்தம் பெற்றனர்.

பதிமூன்றும் அத்யாயம் முற்றிற்று.

---

## பதினான்காம் அத்யாயம்—93 ச்லோகங்கள்.

ஹயக்ரீவர் :— அந்த ஸமயத்தில் மஹரிஷிகளுடன் ப்ரம்ஹா, கருடாரூடரான விஷ்ணு, வ்ருஷபரூடரான பரமஶிவன், நாரதாதி தேவரிஷிகள், அப்ஸரஸ்ஸுகள், விஶ்வாவஸு, கந்தர்வர், யக்ஷர் முதலிய அனைவரும் மஹேஶ்வரியைத் தர்ஶிக்கவந்தனர். ப்ரம்ஹாவின் உத்தரவுப்படி விஶ்வகர்மா அழகிய ஒரு பட்டணத்தைப் படைத்தார். ஸர்வ மந்த்ராதி தேவதையான துர்க்கையும், ஸர்வ வித்யாதி தேவதையான ஶ்யாமையும்

ப்ராம்மீ முதலிய மாத்ரு கணங்களும், அணிமாதி ஶக்திகளும், கோடிக்கணக்கான யோகினிகளும், பைரவர்களும், க்ஷேத்ர பாலகர்களும், மஹா ஶாஸ்தாவும், மஹா கணேஶரும், ஸ்கந்தரும், வீரபத்ரரும் வந்து தேவியைப் பணிந்து ஸ்தோத்ரம் செய்தனர். ப்ராகாரங்களும், தோரணங்களும், ரத, கஜ, துரகசாலைகளும், அழகிய ராஜ வீதிகளும், சிற்றரசர், மந்த்ரி, ஸேனாதிபதி, த்விஜர்கள், வைதாளிகர், தாஸிகள் ஆகிய இவர்களுக்குத் தனித் தனியே அற்புதமான வீடுகளும் நிறைந்த அப்பட்டணத்தினிடையே திவ்யமான ராஜக்ருஹம் அமைக்கப்பட்டது. அதன் வாசலில் பெரிய கோபுரமும், உள்ளே பல ஶாலைகளும், அனேக ஸபைகளும், நவரத்நமயமான ஸிம்ஹாஸன ஸபையும், அதனிடையே சிந்தாமணியால் நிர்மாணம் செய்யப்பட்ட ஒப்பற்ற, அழகிய, ஸ்வயம் ப்ரகாஶமான உதய ஸூர்யன் போன்ற திவ்ய ஸிம்ஹாஸனமும் இருந்தன.

இதைக்கண்டு ப்ரம்ஹா, "அந்த அழகிய புரத்தில் வஸிக்கும் பாமரனும் ஸர்வ லோகாதிபதியாவான். கேவல ஸ்த்ரீயோ, புருஷனோ ராஜ்யத்திற்கு அர்ஹரல்ல. மங்களாசாரமுள்ள மஹா புருஷன் தக்க மனைவியுடனிருந்தால் அபிஷேகத்திற்கேற்றவன். ஶ்ருங்கார ரஸமே உருவெடுத்து வந்தது போன்ற இத்தேவதைக்கேற்ற புருஷன் ஶிவனை யன்றி வேறெவரும் இலர். அவரோ ஜடாதாரியாய் முண்ட மாலை யணிந்தவராய், விரூபாக்ஷராய் கபாலியாய், விபூதியை அணிந்து ஸ்மஶானத்தில் தங்கி அமங்கள வேஷராய் இருக்கின்றார். அவரை ஸுமங்கலையான தேவி எப்படி வரிப்பாள்? என யோஜித்துக் கொண்டிருந்தார். அங்குப் பரமஶிவன் கோடி மன்மதனைப்போல், திவ்யாம்பரதாரியாய், அழகிய கந்த புஷ்பங்கள் மணக்க, க்ரீடம், ஹாரம், குண்டலம் முதலிய திவ்யாபரணங்களை அணிந்து மணக்கோலத்துடன்

தோன்றினர். அவரைக்கண்டு ஆச்சர்யமடைந்தவராய், ப்ரஹ்மா அவரைத் தழுவி, காமேச்வரன் எனப் பெயரிட்டுப் பராசக்திக்கேற்ற புருஷன் இவரே என்று தேவியிடம் சென்றார். அங்கு மும்மூர்த்திகளும் தேவியைத் துதிக்க, காமேச்வரன் காமேச்வரியினிடமும், காமேச்வரி காமேச்வரனிடமும் காமனை கொண்டு மற்ற கார்யங்களை மறந்து இவரே நமக்கேற்றவரென இருவரும் கருதினர். இருவரும் மன்மத பாணத்தினால்பீடிக்கப்பட்டும் தீரர்களாததால் பிறரால் அறிய முடியாத கார்ய முள்ளவர்களாய் இருந்தனர். ஒரு முஹூர்த்தகாலத்தில் கலங்கா மனத்தினர்களாக ஆனார்கள்.

ப்ரஹ்மா தேவியைப் பார்த்து, "தாயே! இந்த ஸகல தேவரிஷிகணங்களும், கணவனுடன் தாங்கள் ஸிம்ஹாஸனத்திலிருந்து தங்களை ஆளும்படி வேண்டுகின்றனர். உமக்கேற்ற பதியாகும் பாக்யத்தைப் பெற்றவர் யாரோ? உலகைக்காக்க அப்புருஷனை மணந்து இந்நகரத்திற்கு ராணியாயிருங்கள். தேவர்களால் அபிஷேகம் செய்யப்பட்டு ஸாம்ராஜ்ய லக்ஷ்மியுடன் ஸர்வ ஆபரண பூஷிதையாகப் பதியுடன் ஸிம்ஹாஸனத்தில்வீற்றிருக்கும் உம்மைப் பார்க்க ஆவல் கொண்டிருக்கிறோம்" என்று வேண்டினர். புன்னகைக்கொண்ட தேவி ப்ரம்ஹாதி தேவர்களைப்பார்த்து, "தேவர்களே! யான் ஸ்வதந்த்ரையாய் என்னிஷ்டம்போல் ஸஞ்சரிப்பவள். என்னைப் போன்ற பதியையே யான் விரும்புகிறேன்" என்றாள். அப்படியே ஆகட்டுமென்று ப்ரம்ஹா ஸர்வ தேவர்களுடன் தேவியை நோக்கி தர்மார்த்தம் நிறைந்த சொற்களை கூறினர்.

"தேவி! சிலகாலம் வரை மனைவியாக வைத்துக் கொள்ளப்படும் பெண் வேச்யையாவாள். விலைகொடுத்து மனைவியாக ஏற்கப்பட்டவள் தாஸியாவாள். தந்தையால்

பத்நியாக அளிக்கப்பட்டவள் பித்ருதத்தைஎனப்படுவாள். தன்னிஷ்டபடி கணவனைத் தேடி எடுப்பவள் காந்தர்வ விவாஹம் செய்தவளாவாள். இங்ஙனம் நால்வகையுண்டு ஒரே வஸ்துவாய், உண்டு இல்லை என்பன இல்லாததாய் சிவானந்த வடிவமாய் உள்ள ப்ரஹ்மத்திடமிருந்து ப்ரஹ்ருதி தோன்றிற்று. அந்த ப்ரம்ஹமும் ப்ரஹ்ருதியும் நீயே! நீ அநாதி! எல்லாமாயிருப்பவள். உனக்கு காரணம் வேறுஇல்லை நீயே எல்லாவற்றிற்கும் காரணம் ஸநகாதி யோகிகள் உன்னையே தேடுகின்றனர். ஸதஸத்தாயும், வ்யக்த அவ்யக்தையாயும் உள்ளவள் நீ, பஞ்சப்ரம்ஹஸ்வரூபிணீ என உன்னைக் கொண்டாடுகின்றனர். உலகை நீயே படைத்துப் பரிபாலித்து உபஸம்ஹாரம் செய்வதால் நீ காந்தர்வமணம்புரிவது உனது ஸ்வாதந்த்ரியத்திற்குப் பங்கத்தைத் தராது. லோக அநுக்ரஹத்திற்காக நீ ஒரு புருஷனை ஏற்கவேண்டும்'' என்றார் ப்ரம்ஹா.

இதைக் கேட்ட தேவி, ஓர் மாலையை தன் கரத்தாலெடுத்து ஆகாயத்தே எறிந்தாள். அது காமேஶ்வரரின் கழுத்திலேயே வீழ்ந்தது. ஸகல தேவர்களும் பரம ஸந்தோஷமடைந்தனர். இந்த்ரனது தூண்டுதலால் ஸகல மேகங்களும் புஷ்ப வர்ஷங்களை வர்ஷித்தன.

ப்ரம்ஹா மஹா விஷ்ணுவை நோக்கி, இவ்விருவர்களுக்கும் விவாஹத்தைச் செய்து வைக்கவேண்டும். ஜகத்திற்கு மங்களத்தை உண்டு பண்ணும் முஹூர்த்தம் இதுதான். விஷ்ணு ரூபமுள்ளவள் தேவி. நீரும் அவருக்கு உடன் பிறந்தவர். ஆதலால் நீரே காமேஶ்வரனுக்குக் கல்யாணியான தேவியைக் கன்யாதானம் செய்யும்.'' என்றார். அங்ஙனமே அச்யுதனும் ஆனந்தத்துடன் தேவரிஷி பித்ரு கந்தர்வர் முன்னிலையில் விதிப்படி ஜலத்தாரையை முன்னிட்டு, தேவனுக்குத் தானஞ்செய்து, இருவருக்கும் விவாஹத்தைப் பூர்த்தி செய்து வைத்தார். அவ்விருவர்

களுக்கும் ப்ரம்ஹாதி தேவர்கள் காணிக்கைகளை ஸமர்ப் பித்தனர். வஜ்ரம் போன்ற கரும்பு வில்லை ப்ரம்ஹனும் வாடாத புஷ்பபாணத்தை விஷ்ணுவும், வருணன் நாக பாசத்தையும், விச்வ கர்மா அங்குசத்தையும், அக்நி கிரீ டத்தையும், சந்த்ர ஸூர்யர்கள் இரண்டு குண்டலங்களை யும், ரத்நாகரம் நவரத்நமயமான ஆபரணத்தையும், சுக்ரன் அக்ஷயமானமதுபாத்ரத்தையும், குபேரன் சிந்தாமணி மாலையையும் தந்தனர். ஸாம்ராஜ்யத்திற்கு அடையாள மான குடையை விஷ்ணுவும், கங்கா யமுனைகள் சாமரங் களையும், ப்ரம்ஹா, வஸு, ருத்ரர், ஆதித்யர், அச்வினீ தேவர், திக்பாலர், மருத், ஸாத்யர், கந்தர்வர், ப்ரம்ம தேச்வரர் ஆகிய இவ்வனைவரும் தத்தம் ஆயுதங்களை யும், மிக்க வேகமும், பலமுள்ளனவும், நோய் பசி தாஹம் முதலியன இல்லாதனவும், பருத்தவைகளுமான நான்கு குதிரைகளையும், ரதத்தையும், வஜ்ர துல்யமான ஆயுதங்களையும் கொடுத்தனர்.

ப்ரம்ஹா ஸாம்ராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்யக் கருதி, குஸுமாகரம் எனும் ஒரு திவ்ய விமானத் தைப் படைத்தார். அது வாடாத மாலையுள்ளது. ஆயுதங் களால் வெட்ட முடியாதது. விண்ணிலும், மண்ணிலும் இஷ்டம்போல் ஸஞ்சரிப்பது. அதன் வாஸனையை மோந்த மாத்ரத்தில் மயக்கம், பிணி, பசி, துன்பம் முதலி யன நீங்கிபோம். மனத்திற்குப் பேரானந்தத்தை யளிக்கும். அந்த திவ்ய விமானத்தின் மீது தம்பதிகளை ஏற்றித் தேவர்கள் ஊர்வலம் வந்தனர். சத்ரம் சாமரம் கொடிகள் தடிகள் சூழ, வீணை வேணு ம்ருதங்கம் முதலிய வாத்யங்கள் கோஷிக்க, நாற்புரமும் தேவகணங்கள் சூழ ஒவ்வோர்மாடியிலிருந்து அப்ஸரஸ்ஸுகள் பொரியையும் அக்ஷதையையும் இறைக்கத் தனது தேஜஸால் எல்லா வற்றையும் ப்ரகாசப்படுத்திக்கொண்டு ஹார்த்தி எடுக் கும் அப்ஸரஸ்ஸுகளை மந்தஹாஸத்தால் ஆசீர் வதித்து ஆதிதம்பதிகள் ஒவ்வோர் வீதியாக வலம் வந்து

விமானத்திலிருந்து இறங்கி ராஜக்ருஹத்தினுள்ளே நுழைந்தனர்·வயதான ஸுமங்கலிகள் திவ்ய கந்த புஷ்பாக்ஷதைகளால் அவ்விருவரையும் வரவேற்று ஸிம்ஹாஸனத்தில் அமர்த்தினர். ஆங்கு கூடியவர்களில் யார் யார் எதை எதை மனதில் விரும்பினரோ, அதையதைத் தேவி உடனே தன் கடாக்ஷ வீக்ஷணத்தால் பூர்த்திசெய்வித்தாள் இதைக்கண்ட சதுர்முகன் அம்பாளுக்குக் காமாக்ஷி, காமேஶ்வரீ என்ற காரணப் பெயர்களைச் சூட்டினுர். தேவியின் ஆணையால் மேகம் அந்நகரில் அற்புதமான அரிய பல ஆபரணங்களை வர்ஷித்தது. சிந்தாமணி, கல்பவ்ருக்ஷம், லக்ஷ்மி, காமதேனு இவைகள் ஒவ்வோர் வீட்டிலும் தங்கி நின்றன. ப்ரம்ஹாதி ஸகலதேவர்களும், நாரதாதி தேவரிஷிகளும், வஸிஷ்டாதி ப்ரம்ஹரிஷிகளும் இதர கார்யங்களை விட்டுத் தேவியின் ஆனந்தத்திலேயே ஈடுபட்டுத் தத்தம் நகரைவிட விஶாலமாய் ஸகல ஸௌகர்யங்களும் நிறைந்த இப்புரியில் ஸுகமாக வஸித்தனர். "இந்தத் தேவி என்னிடத்தில் அதிக அன்புள்ளவள், என்னிடந்தான் அவளுக்கு அதிக அன்பு" என ஒவ்வொருவரும் எண்ணும்படி அவரவர்களை அத்யந்த ப்ரீதியோடு ஸந்தோஷிப்பித்தனள். இந்தத் தம்பதிகள் முவ்வுலகிலுள்ள அனைவருக்கும் அவரவர் விருப்பை வர்ஷித்து ஆனந்தமளித்தனர். இங்ஙனம் பத்தாயிரம் ஆண்டுகள் ஒரு க்ஷணம்போல் சென்றன.

ஒரு ஸமயம் நாரதரிஷி. ஆங்குத் தோன்றித் தேவியைப் பணிந்து, துதித்து, "தாங்கள் அவ்யக்தையாயினும் துஷ்டர்களை ஶிக்ஷிக்கவும், ஶிஷ்டர்களை ரக்ஷிக்கவும், வ்யக்தையாக அவதரிக்கிறீர். பண்டாஸுரன் என்பான் முவ்வுலகையும் பீடிக்கிறுன். தங்களையன்றி வேறெவராலேயும் அவன் கொல்லத்தக்கவனல்லன். அன்றியும், தேவர்கள் அனைவருமிங்குத் தங்கி உமது ஸேவையிலேயே ஈடுபட்டிருப்பதால் தேவநகரங்கள் அமங்கள

மாயும் ஶூன்யமாயுமிருக்கின்றன. தங்கள் உத்தரவு பெற்றுத் தேவர்கள் தங்களிருப்பிடம் செல்லட்டும்'' என்றுர். பராஶக்தியும் அப்படியே அனைவரையும் தக்க படி ஸன்மானித்து அனுப்பினுள். ப்ரம்ஹாதிகள் தேவியை விட்டுப்பிரிய மனமின்றி ஓர் அம்சத்தால் அங்கு தங்கித் தேவியைப் பூஜித்துக்கொண்டிருந்தனர்.

இந்தத் தேவியின் ஆவிர்ப்பாவம் ராஜ்யாபிஷேகம் முதலிய கதைகளைக் காலையில் எழுந்து எவன் பக்தி ஶ்ரத்தையுடன் ஜபிக்கிருனே அவன் செல்வம் நிறைந்து அம்ருதம் போன்ற வாக்குள்ளவனுவான். இவ்வுலகி லும், மறு உலகிலும் அவன் அஶுபத்தைப் பெறமாட் டான். பரந்த கீர்த்தியையும், நித்ய லக்ஷ்மியையும் பெறுவான். மிக்க தேஜஸ்வியாய், வீர்யவானுய், தீரனுய், தாபத்ரயமின்றி, நான்கு புருஷார்த்தங்களைப் பெற்று ஸுகமாக வாழ்வான். ஸிம்ஹாஸனத்திலுள்ள தேவியை த்யானம் செய்து மூன்று ஸந்திகளிலும் ஜபிப்பவன் ஆறு மாதங்களுக்குள் மிகுந்த செல்வத்தைப்பெறுவான்.

பதினுன்காம் அத்யாயம் முற்றிற்று.

---

## பதினைந்தாம் அத்யாயம்—108 சுலோகங்கள்.

ஹயக்ரீவர்:— ஜகன்மாதாவான ஸ்ரீ லலிதாதேவி த்ரிலோக கண்டகனை பண்டனைக் கொல்லக் கிளம்பினுள். ஸப்த ஸமுத்ரங்களும் மத்தளமாகிய வானளாவக்கோஷித்தன. ஆநகம், பணவம், கோமுகம், அர்த்த சந்த்ரகம், டிண்டிமம் முதலிய வாத்யங்கள் முழங்கின. ஸ்ரீ லலிதா தேவியின் அங்குஶத்திலிருந்து தோன்றிய ஶம்பத்கரீ என்னும் ஶக்தி ரணகோலாஹலமென்னும் யானையின் மீதேறி, நால்வகைச் சேனையுடனும், ஶக்தி கணங்களுட னும் கிளம்பினுள். ஸ்ரீ லலிதையின் பாஶத்திலிருந்து உண்டான அஶ்வாரூடா என்பவள் போர்க்கோலத்துடன்

புறப்பட்டனள். அவளைத் தொடர்ந்து வநாயுஜம், காம் போஜம், பாரசிகம் முதலிய குதிரைப் படைகள் பின் சென்றன அவை மிக்க பலமும் வேகமுமுள்ளவை. யஜ மானன் கருத்தையுணர்ந்து அதன்படி நடப்பன. அநேக நல்ல லக்ஷணங்கள் பொருந்தியன. அதில் ஆபராஜித மென்னும் அஶ்வத்தின்மீது அஶ்வாரூடை அமர்ந்தாள். அது மிக்க கம்பீரமானது. இருபுறமும் புரளும் பிடரி மயிருள்ளது. படபடவென்று பூமிமீது குளம்புகளை வைத்து, இனி வரப்போகும் தேவியின் விஜயத்திற்கு மங்கள கோஷம் செய்வதுபோல் விளங்கிற்று. மயிர் அடர்ந்த வாலை அடிக்கடி இருபுறங்களிலும் உதறுவதா லும், அதி வேகமாகச் செல்லுவதாலும் அது இறக்கை களை உதறிப் பக்ஷி பறப்பது போலிருந்தது. அஶ் வாரூடை பாஶம், அங்குஶம், பிரம்பு, கடிவாளம் இவை களை நான்கு கரங்களிலுமேந்தி திவ்ய ஆபரணங்களால் ப்ரகாஶித்துக்கொண்டு குதிரைகளை நர்த்தனம் செய்வித் துக் கொண்டே சென்றாள்.

ஸ்ரீ தண்டநாதை யென்னும் ஶக்தியின் ப்ரயாணத் திற்காக வாசிக்கப்படும் படஹ ஶப்தம் உலகைச் செவிடு படும்படி செய்தது. தண்டநாதையைச் சார்ந்த சில ஶக்தி கள் பயங்கரமான பல ஆயுதங்களைத் தாங்கி மிக நெருக்கமாய்க் கூடி வரும் ஸேனைகளைப் பிரம்பினால் பிரித்து அடக்கி நடத்திச் சென்றன. சில ஶக்திகள் எருமைக்கொடி, மான்கொடி, ஸிம்ஹக்கொடி முதலிய உயர்ந்த த்வஜங்களைக் கையிலேந்திச் சென்றன. சிலர் வெண் குடைகளை எடுத்துச் சென்றனர். அவை ஆகா யத்தில் பல சந்த்ர மண்டலங்கள் விளங்குவது போலிருந் தன. குடைகள் மறைத்ததால் ஸூர்ய வெளிச்சமின்றி இருள் சூழ, அக்குடைகளின் ஸ்வர்ண தண்டங்கள் தம் காந்தியால் இருளை அகற்றிப் பிரகாஶமளித்தன. சில

ஶக்திகள் விசிறிகளை ஏந்திச் சென்றன. சண்டன், உச்சண்டன் முதலிய பைரவர்கள் ஸ்வர்ணவர்ணமான ஜடா மண்டலததால் திக்குகளை ப்ரகாஶப் படுத்திக்கொண்டு அரக்கரைத் தஹிப்பவர் போல் ஶூலபாணிகளாகச் சென்றனர்.

வராஹமுகியான தேவி தன்னைப்போன்ற முகமும், ஆயுதமும், மஹிஷவாஹனமும் உள்ள பல ஶக்திகள் சூழ கறுத்த வஸ்த்ரம் உடுத்திக் கோரப் பல்லும் உக்ரப் பார்வையுமுள்ளவளாகக் கிளம்பினுள்.

ஸ்ரீ தண்டநாதை கிரிசக்ரமெனும் உத்தம ரதத்திலிருந்து இறங்கி வஜ்ரகோஷமெனும் உக்ரமான தனது ஸிம்ஹவாஹனத்தின் மீதமர்ந்தனள். மிக்க பயங்கரமாய் மூன்று யோஜனை தூரம் உயரமாயுள்ள அந்த ஸிம்ஹவாஹனத்தில் வீற்றிருந்து, கோபத்துடன் அரக்கர்களை அழிக்கத் தண்டநாயகி கிளம்பியபோது மூவ்வுலகமும் நடுங்கிற்று. அமரர் அனைவரும், 'உலகை எரித்துச் சாம்பலாக்குவாளோ? பூமியை உலக்கையால் இருகூருகப் பிளப்பாளோ? கலப்பையால் கடலைக் கலக்குவாளோ?' என அஞ்சி வெகுதூரமோடி ஆங்கிருந்து தேவியைப் பார்த்து, அஞ்ஜலியுடன் பல முறை பணிந்து பன்னிரண்டு நாமாக்களை ஜபித்தனர்.

அகஸ்த்யர் :— மஹாப்ராக்ஞரான ஹயக்ரீவரே! அந்தத் தேவியின் பன்னிரண்டு பெயர்கள் யாவை? அதைக் கேட்க மிக ஆவல் கொண்டுளேன். அருள் புரியும்.

ஹயக்ரீவர் :— எதைக்கேட்டவுடன் தேவி ப்ரஸன்னமாவாளோ, அதைக் கூறுகிறேன் கேள். பஞ்சமீ, தண்ட நாதா, ஸங்கேதா, ஸமயேஶ்வரீ, ஸமயஸங்கேதா, வாராஹீ, போத்ரிணீ, ஶிவா, வாத்தாளீ, மஹாஸேநா, ஆக்ஞாசக்ரேஶ்வரீ, அரிக்நீ இப்பன்னிரண்டு

நாமாக்களென்னும் வஜ்ர கவசமணிந்தவர் எப்போதும் துன்பம் பெறுர்.

இங்ஙனம் துதிக்கும் தேவர்களது நன்மையை நாடியே தேவி யுத்தத்திற்குக் கிளம்பிச் சென்ருள். மந்த்ரிநாதா தேவியைப் பணிந்து கிளம்ப, ஸங்கீத யோகினீ ப்ரயாணத்தைக் காண்பிக்கும் காஹளீ வாத்யத்தை முழங்கினுள். வீணு பாணிகளாகச் சிலர் பாடினர்; சில ஆடினர்; சிலர் மதுபானத்தால் சிவந்த கண்கள் உள்ளவர்களாகித் தேவியைத் துதித்தனர். மயில், குயில், ஹம்ஸம், கிரி முதலிய வாஹநங்கள் மீதேறிச் சில ஶக்திகள் மந்த்ரிநாதையைப் பின் தொடர்ந்தனர்.

கேய சக்ரமெனும் திவ்ய ரதத்திலமர்ந்து ஶ்யாமளா எனும் மந்த்ரிநாயிகை கிளம்பினுள். தேவர்கள் அவளை ஸங்கீதயோகிநீ, ஶ்யாமா, ஶ்யாமளா, மந்த்ரிநாயிகா, மந்த்ரிணீ,ஸசிவேஶானீ, ப்ரதாநேஶீ, ஶுகப்ரியா, வீணுவதீ, வைணிகீ, முத்ரிணீ, ப்ரியகாப்ரியா, நீபப்ரியா, கதம்பேஶீ, கதம்பவநவாஸிநீ, ஸதாமதா என்னும் பதினுறு பெயர்களால் துதித்தனர். இந்த நாமாக்களைப் பக்தியுடன் ஒருமுறை ஜபித்தாலும் மூன்று உலகும் வஶ்யமாகும். மந்த்ரிநாதையின் கடாக்ஷம் எங்கெங்குப் படுகிறதோ அங்கங்கு ஸேனைகள் தைர்யமாய் ஸந்தேஹமின்றிச் சென்றன. ஸ்ரீ லலிதாதேவி எவ்வளவு ராஜ்ய விஷயமான சர்ச்சை செய்கிருளோ அவ்வளவும் மந்த்ரிணிக்கு வஶ்யமாயின.

பிறகு, ஸங்கீதயோகினியின் கரத்திலுள்ள கிளியினிடமிருந்து தநுர்வேதம் நான்கு கைகளுடனும், மூன்று தலைகளுடனும், மூன்று கண்களுடனும், தோன்றி ப்ரதான தேவியை வணங்கிக் கூறிற்று.

"தாயே! பண்டாஸுரனுடன் போருக்குக் கிளம்பும் தங்களுக்கு ஸஹாயம் புரிவது என் கடமை. தாநவரை

அழிக்கும் சித்ர ஜீவமென்னும் இவ்வில்லையும், அக்ஷய மான இரு அம்பருத்தூணிகளையும் பெற்று எனக்கு அருள் புரியுங்கள்.'' ஸ்ரீகப்ரியை அவ்வில்லை யேற்று. நாணேற்றி, டங்காரஞ் செய்தனள். அச் சப்தமானது உலகெலாம் பரவி, தேவர்களுக்குப் பேரானந்தத்தை விளைவித்தது.

யந்த்ரிணீ, தந்த்ரிணீ எனும் அவளுடைய இரு தோழி கள் கிளியையும் வீணையையும் தலைமீது ஏந்தித் தேவிக் குப் பணிவிடை செய்தனர். தேவியின் கரத்திலிருந்த அம்பு, காளியின் கண்போல் உக்ரமாக இருந்தது. உக்ர வேஷத்துடன், பயங்கரமான பற்பல ஆயுதங்களைத் தாங்கிய ஆயிரம் அக்ஷோஹிணீ ஸேனைகள் தேவியைப் பின் தொடர்ந்தன. அவைகளின் ஶப்தம் ஆகாயமளாவி நின்றது.

சக்ர ராஜ ரத நாயகியான ஸாக்ஷாத் பராஶக்தி அங்குஶம், பாஶம், கரும்புவில், புஷ்பபாணம் இவைகளை ஏந்தி, கோடி ஸூர்யோதயம்போல் விளங்கா நின்ற சிவந்த ஶரீர காந்தியுடன், திக்குகளில் பரவுகிற முக காந்தியால் மேக மண்டலத்தைச் சந்த்ர மயமாக்கிக் கொண்டு, பத்து யோஜனை தூரம் விஸ்தீர்ணமுள்ள முத்துக்குடையால் சந்த்ர மண்டலத்திற்கு அதிக ப்ரகாஶத்தை அளித்துக்கொண்டு, விஜயை முதலிய முக்ய பரிசாரிகைகள் நாற்புறமும் வெண்சாமரம் வீச, தேவர்கள் துதிக்க, வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத வைபவமுள்ளதும், முவ்வுலகைத் தனக்குள்ளே அடக்கி யுள்ளதுமான ஶக்தி சக்ர ஸாம்ராஜ்யத்தில் அபிமான முள்ளவளாகி, அஞ்ஜலி பந்தத்துடன் தன்னைத் துதிக்கும் மும்மூர்த்திகளையும் கடாக்ஷவீக்ஷணத்தால் அருள் புரிந்து அப்ஸரஸ்ஸுகள் ஜய! ஜய! ஶப்தத்துடன் பொரி இறைக்க, யுத்த வேஷத்தால் மனோஹரமாய் விளங்கும் காமேஶ்வரீ முதலிய பலர் படைசூழ, நூறு யோஜனை

தூரம் நீளமான கொடி பறக்கும் ஸ்ரீ சக்ரராஜ மெனும் ரதத்திலேறி. நவாவரண தேவதா பரம்பரைகள் சூழ, ஸம்ஸார தாபத்தைத் தணிப்பதில் ஸமார்த்தியம் வாய்ந்த இருபத்தைந்து நாமரத்னங்களால் தேவர்கள் துதிக்க, யுத்தத்திற்குக் கிளம்பினுள்.

அகஸ்த்யர் :— ஸ்வாமின்! கர்ணும்ருதமான அந்த இருபத்தைந்து நாமாக்களேயும் அருள் புரியும்.

ஹயக்ரீவர் :— ஸிம்ஹாஸநேஶீ, லலிதா, மஹா ராக்ஞீ, வராங்குஶா, சாபிநீ, த்ரிபுரா, மஹாத்ரிபுர ஸுந்தரீ, ஸுந்தரீ, சக்ரநாதா, ஸம்ராஜ்ஞீ, சக்ரிணீ, சக்ரேஶ்வரீ, மஹாதேவீ, காமேஶீ, பரமேஶ்வரீ, காம ராஜப்ரியா, காமகோடிகா, சக்ரவர்த்திநீ, மஹாவித்யா, ஶிவாநங்கவல்லபா, ஸர்வபாடலா, குலநாதா, ஆம்நாய நாதா, ஸர்வாம்நாயநிவாஸநீ, ஶ்ருங்காரநாயிகா இந்த நாமாக்களால் லலிதா பரமேஶ்வரியைத் துதிப்பவர் ஸகல ஸௌபாக்யத்தையும், அஷ்ட ஸித்திகளேயும், கீர்த்தியையும் பெறுவர்.

இங்ஙனம் மிகப் பயங்கரமான ஸேனேயை நடத்திக் கொண்டு ஸ்ரீ லலிதை பண்டனே எதிர்க்கச் சென்ருள்.

பதினேந்தாம் அத்யாயம் முற்றிற்று.

---

## பதிஞரும் அத்யாயம் — 97 சுலோகங்கள்.

அகஸ்த்யர் :— சக்ரராஜ ரதேந்த்ரத்தின் பர்வாக் களில் (ரதத்தின் தட்டுகளில்) உள்ள ப்ரகடா முதலிய தேவதைகளின் பெயர்களேயும், ஸங்க்யைகளேயும், வர் ணங்களேயும், ஆயுதங்களேயும் கூறுங்கள்.

ஹயக்ரீவர் :— அந்த ரதத்தின் ஒன்பதாவது பர்வா வில் அணிமா, மஹிமா, லகிமா, கரிமா, ஈஶிதா, வஶிதா, ப்ராப்தி, ப்ராகாம்யா, புக்தி, ஸர்வகாமா என நான்கு

கரங்களுள்ள பத்து ஸித்திகள் இருக்கின்றனர். அவர்கள் ஜபாபுஷ்பம் போன்ற சிவந்த வர்ணமுள்ளவர்கள். சிந்தாமணி, கபாலம், த்ரிஶூலம், கத்தி, கஜ்ஜலம் இவைகளைத் தரித்தவர்கள். யோகிகளால் ஸேவிக்கத் தக்கவர்கள். அந்த பர்வாவின்மேலே ப்ராம்ஹீ, மாஹேஶ்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மீ ஆகிய எட்டு ஶக்திகள் கபாலத்தையும் தாமரையையும் ஏந்திய இரு கரங்களுடன், சிவப்பு வஸ்த்ரமுடுத்திச் சிவந்த காந்தியுடன் விளங்குகின்றனர். இந்த ஶக்திகளையே சிலர் ப்ரம்ஹாதிகளுக்கு ஸமமான ஶரீரம், ஆயுதம், சின்னம் முதலியவைகளை உடையவர்களாக த்யானம் செய்கின்றனர்.

அவர்களுக்கு மேலே பத்து முத்ரா தேவிகள் மாதுளம் புஷ்பம் போன்ற காந்தியுள்ளவர்களாயும், பீதாம்பரமணிந்து நாற்கைகளில் முத்ரையுடன் கூட கத்தியுங் கேடயமும் ஏந்தி, மதத்தால் சிவந்த கண்களுடையவர்களாகவும் விளங்குகின்றனர். ஸர்வஸம்க்ஷோபிணீ, ஸர்வ வித்ராவிணீ, ஸர்வாகர்ஷிணீ, ஸர்வ வஶங்கரீ, ஸர்வோன் மாதினீ, ஸர்வ மஹாங்குஶா, ஸர்வ கேசரீ, ஸர்வபீஜா, ஸர்வயோகினீ, ஸர்வ த்ரிகண்டிகா என்பன அவர்களது பெயர்கள். அணிமா முதலிய ஸித்திகளும், ப்ராம்ஹீ முதலிய ஶக்திகளும், ஸம்க்ஷோபிணீ முதலிய முத்ரா ஶக்திகளும், ப்ரகடயோகினிகள் எனப்படுவர். பண்டாஸுரனை ஸம்ஹரிக்க இவர்கள் அந்த ரதத்தில் வீற்றிருந்தனர்.

எட்டாவது பர்வாவில் காமாகர்ஷிணீ, புத்யாகர்ஷிணீ' அஹங்காராகர்ஷிணீ, ஶப்தாகர்ஷிணீ, ஸ்பர்ஶாகர்ஷிணீ, ரூபாகர்ஷிணீ, ரஸாகர்ஷிணீ, கந்தாகர்ஷிணீ, சித்தாகர்ஷிணீ, தைர்யாகர்ஷிணீ, ஸ்ம்ருத்யாகர்ஷிணீ, நாமாகர்ஷிணீ, பீஜாகர்ஷிணீ, ஆத்மாகர்ஷிணீ, அம்ருதாகர்ஷிணீ, ஶரீராகர்ஷிணீ எனச் சந்த்ரகலை வடிவமான

பதினாறு ஶக்திகள் விளங்குகின்றனர். இவைகள் குப்த யோகினிகள் என்றழைக்கப் படுவார்கள். பவழம் போன்ற திருமேனியை யுடையவர்கள். நான்கு கரங் களும் மூன்று கண்களும் உள்ளவர்கள். தலையிலே அர்த்த சந்த்ரனைத் தரித்தவர்கள். வில்லும், அம்பும், கத்தியும், கேடயமும் இவர்களது ஆயுதங்களாகும்.

ஏழாவது பர்வாவில் குப்ததரயோகினிகள் எனும் பெயர் கொண்ட எட்டு அநங்க ஶக்திகள் உளர். அநங்க குஸுமா, அநங்கமேகலா, அநங்கமதநா, அநங்கமத நாதுரா, அநங்கரேகா, அநங்கவேகா, அநங்காங்குஶா, அநங்கமாலினீ என்பன இவர்களது பெயர். ஜபா புஷ்பம் போன்ற நிறமுள்ள இவர்கள் கரும்புவில், புஷ்ப பாணம், புஷ்ப கந்துகம், உத்பலம் இவைகளைத் தரித்துப் பண்டனிடம் மிகக்கோபங்கொண்டு ஜ்வலித்தனர்.

ஆறுவது பர்வாவில் ஸம்ப்ரதாய யோகினிகள் என்ற பெயருடைய ஸம்க்ஷோபிணீ முதலிய ஶக்திகள் ஜடாதாரிகளாய், ஸிந்தூர திலகமணிந்தவர்களாய் அக்நி வில், அக்நி பாணம், அக்நி கத்தி, அக்நி சக்ரமெனும் கேடயம் முதலியவைகளைத் தரித்திருந்தனர். ஸ்ரீ லலிதை யின் ஆக்ஞா ஶக்திகள் இவர்கள். ஸர்வ ஸம்க்ஷோபிணீ, ஸர்வவித்ராவிணீ, ஸர்வாகர்ஷிணீ, ஸர்வாஹ்லாதிநீ, ஸர்வஸம்மோஹிநீ, ஸர்வஸ்தம்பிநீ, ஸர்வஜ்ரும்பிணீ, ஸர்வவஶங்கரீ, ஸர்வரஞ்ஜிநீ, ஸர்வோந்மாதிநீ, ஸர் வார்த்தஸாதிகீ, ஸர்வஸம்பத்திபூரணீ, ஸர்வமந்த்ரமயீ, ஸர்வத்வந்த்வ க்ஷயங்கரீ என்பன அவர்களது பெயர் களாகும்.

ஐந்தாவது பர்வாவிலுள்ளோர் குலோத்தீர்ண யோகினிகள் என்ற பொதுப் பெயருடையவர்கள். ஸ்ப டிகம் போன்றவர்கள். பரசு, பாஶம், கதை, மணி இவைகளைத் தரித்தவர்கள். ஸர்வஸித்திப்ரதா, ஸர்வ ஸம்பத்ப்ரதா, ஸர்வப்ரியங்கரீ, ஸர்வமங்களகாரிணீ,

ஸர்வகாமப்ரதா, ஸர்வதுக்கவிமோசிநீ, ஸர்வம்ருத்யு ப்ரசமநீ, ஸர்வ விக்நநிவாரணீ, ஸர்வாங்கஸுந்தரீ, ஸர்வ ஸௌபாக்யதாயிநீ என்ற இவர்கள் தேவியின் தயை யால் பூர்ணமாய் ஈடேற்றப்பட்ட மநோரதங்களை உடை யவர்கள்.

நான்காவது பர்வாவிலுள்ளோர் முத்துப்போன்ற வர்ணமுள்ளவர்கள். நிகர்ப்ப யோகினிகள் எனும் பெயருள்ளவர்கள். ஸர்வக்ஞா, ஸர்வசக்தி, ஸர்வைஸ் வர்ய ப்ரதாயினீ, ஸர்வ க்ஞானமயீ, ஸர்வ வ்யாதி விநாஸினீ ஸர்வாதாரஸ்வரூபா, ஸர்வபாபஹரா, ஸர்வா நந்தமயீ, ஸர்வரக்ஷா ஸ்வரூபிணீ, ஸர்வேப்ஸித பலப்ரதா என்ற இவர்கள் நான்கு கரங்களையுடையவர்கள். வஜ்ரம், சக்தி, தோமரம், சக்ரம் இவைகளைத்தரிப்பவர்கள்.

மூன்ருவது பர்வாவில் வஸிப்பவர்கள். ரஹஸ்ய யோகினிகள் எனும் ப்ரஸித்தமான வாகதீச்வரிகள். ரக்தா சோக புஷ்பம் போல் சிவந்த சரீர வர்ணமுள்ள வர்கள். சரீரம் முழுவதும் கவசமணிந்தவர்கள். வில், அம்பு, வீணை, புத்தகமிவைகளைத் தரித்தவர்கள். வசிநீ காமேசீ, மோதிநீ, விமலா, அருணா, ஜயிநீ, ஸர்வேசீ, கௌளினீ எனுமிவர்கள் தைத்யருக்கு யமன் போன்ற வர்கள்.

இரண்டாவது பர்வாவில் உள்ளோர் காமேசீ, வஜ் ரேசீ பகமாலினீ எனும் மூவர்கள். இவர்களுக்கு எட்டு கரங்களுண்டு. வில், பாணம், பாநபாத்ரம், மாதுலங்கம் கத்தி, பலகை, நாகபாசம், மணி இவைகளை ஏந்தி அம் பிகைக்கு ஸமமான பலம் உள்ளவர்களாயும், ஸ்ரீ லலிதை க்கு மிக அந்தரங்கமாயும் விளங்குகின்றனர்.

ஆநந்த மஹா பீடமான ரதமத்ய பர்வாவின் சுற்றி லும் வஸிக்கும் திதிநித்யாக்களெனப்படும் தேவிகள். ஸ்ரீ தேவிக்குச் சமமான ரூபம், ஆயுதம் இவைகளை உடை யவர்கள். லோகோபகாரமாக ஒவ்வோர் யுகத்திலும்

தோன்றுபவர்கள். காமேஶீ, பகமாலா, நித்யக்லின்ன பேருண்டா, வஹ்ஹி வாஸினீ, மஹா வஜ்ரேஶ்வரீ, தூதி த்வரிதா, குலஸுந்தரீ, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வ மங்களா, ஜ்வாலாமாலினிகா, சித்ர என்பன அவர்களின் பெயர்களாகும்.

## கீதிசக்ர ரதபர்வா தேவிகள்.

கீதி (கேய) சக்ரமெனும் மந்த்ரிநாதையின் மஹா ரதத்தில் ஏழு பர்வாக்களிருக்கின்றன. நடு பர்வாவில் ஸ்ரீ தேவிக்கு மிக ப்ரியையான ஸங்கீத யோகினீ எனும் தேவி விளங்குகிருள். முதல் பர்வாவில் மந்த்ரிணீ வஸிக்கிருள். இரண்டாவது பர்வாவில் ரதி, ப்ரீதி, மனோஜா என்பவர்கள் வீணபாணிகளாகக் கறுத்த மேனி யுடன் ப்ரகாஶிக்கின்றனர்.

மூன்ருவது பர்வாவில் த்ராவிணீ, ஶோஷிணீ, பந்தினீ மோஹினீ, உன்மாதினீ எனும் மன்மதபாண தேவதைகள் இருக்கின்றனர், அதனடியிலே காமராஜன், கந்தர்ப்பன் மன்மதன், மகரத்வஜன், மனோபவன் என்பவர்கள் முவ் வுலகையும் மோஹிக்கச் செய்துகொண்டு வஸிக்கின்ற னர். நான்காம் பர்வாவிலே ப்ராம்ஹீ முதலிய ஏழு ஶக்திகளும், சண்டியுமிருக்க, அதனடியிலே லக்ஷ்மீ, ஸரஸ்வதீ, ரதி, ப்ரீதி, கீர்த்தி, ஶாந்தி, புஷ்டி, துஷ்டி முத லிய ஶக்திகளுமிருக்கின்றனர். ஐந்தாம் பர்வாவில் வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரீ, ஶாந்தி, ஶ்ரத்தா, ஸரஸ்வதீ, க்ரியாஶக்தி, லக்ஷ்மீ, துஷ்டி, மோஹினீ, ப்ரமதினீ, ஆஶ் வாஶினீ, வீசி, வித்யுன்மாலினீ, ஸுராநந்தா, நாகபுத்திகா ஆகிய இவர்கள் வஜ்ரகவசம் பூண்டு அட்டஹாஸத்துடன் வஜ்ரம், தண்டம், ஶதக்நீ, புஸுண்டிகா முதலிய ஆயுதங் களை ஏந்தி யுத்தத்திற்கு ஸன்னதமாயிருக்கின்றனர்.

ஆருவது பர்வாவில் மூன்று ஶிகைகளும், பாநபாத் ரமும், கறுத்த மேனியுமுள்ள அஸிதாங்கர், ருருசண்டர்

க்ரோதர், உந்மத்தர், கபாலி, பீஷணர், ஸம்ஹாரர் எனும் அஷ்ட பைரவர்கள் வஸிக்கின்றனர். ஏழாவது பர்வாவில் மாதங்கி, ஸித்தலக்ஷ்மீ, மஹாமாதங்கி, மஹநீ ஸித்தலக்ஷ்மீ ஆகிய இவர்கள் நால்வரும் சிவந்த மேனி உள்ளவர்களாகவும், ஆயுத பாணிகளாகவும் இருக்கின் றனர். அதே பர்வாவின் கீழ்ப்புறத்தில் கணபர், க்ஷேத்ர பர், துர்க்காம்பர், வடுகர் இவர்கள் ஶஸ்த்ரபாணிகளாக இருக்கின்றனர். இன்னும சிறிது கீழே லக்ஷ்மியும், ஸரஸ் வதியும், ஶங்கநிதி பத்மநிதிகளும் யுத்த கோலத்துடன் இருக்கின்றனர். இந்த்ரன் முதல் விஷ்ணுவரை பத்துத் திக்குகளின் சக்ர நாயகர்கள் ஶக்தி வடிவமாகவும் அங்கு வஸிக்கின்றனர். இவர்கள் முறையே வஜ்ரம், ஶக்தி, காலதண்டம், கத்தி, பாஶம், த்வஜம், கதை, த்ரிஸூலம் தர்பாஸ்த்ரம். சக்ரம் ஆகிய ஆயுதங்களை ஏந்தி மந்த்ரி நாதையை ஸேவிக்கின்றனர். மந்த்ரிநாதையை முன்னி ட்டு ஸ்ரீ தேவியின் ஆக்ஞையைப் பெற்ருல் ஸேவர்களுக்கு விரைவில் கார்ய ஸித்தி உண்டாகுமெனக் கருதி, அவளை யே அணுகி ஸகல சக்திகளும். திக் பாலர்களும் நின்ற னர். அவளே எல்லாம் வல்லவள். இந்தக் கேயசக்ர ரத பர்வாவில் வஸிப்பவர்களின் பெயரைக் கேட்பவர்கள் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டு ஜய த்தைப் பெறுவார்கள்.

பதினாரும் அத்யாயம் முற்றிற்று.

---

## பதினேழாம் அத்யாயம்—105 ச்லோகங்கள்

## கிரிசக்ர ரத பர்வ தேவதைகள்.

கிரிசக்ர மெனும் ரதத்தில் ஐந்து பர்வாக்கள் இருக் கின்றன. பிந்து எனும் முதற் பர்வாவில் தண்டநாயிகை பல பயங்கரமான ஆயுதங்களை ஏந்தி ஜகத்திற்குக் கண் டகர்களான அஸுர கணங்களை அடியோடு நாஶம்

செய்பவள் போல் ப்ரகாஶிக்கிருள். வாராஹீ, வார்த் தாளிகை என்பவரும் அங்கு தங்குகின்றனர். இரண் டாவது பர்வாவில் ஜ்ரும்பிணீ, மோஹிநீ, ஸ்தம்பிநீ எனும் மூவரிருக்கின்றனர். முஸலம், கலப்பை, பாஶம், பாநபாத்ரம் இவைகளைக் கரகமலங்களில் ஏந்தி, சத்ருக் களைத் தஹிப்பவர் போலிருக்கின்றனர். மூன்ருவது பர்வாவில் தேவியின் மந்த்ரத்தை ஆஶ்ரயித்த அந்திநீ முதலிய ஐந்து சக்திகள் அட்டஹாஸத்தால் முவ்வுலகை யும் பிளப்பவர் போலும், ப்ரளயாக்நியே பெண் உரு வெடுத்ததுபோலும் பண்டாஸுர யுத்தத்தில் பெருகும் ரக்தப்ரவாஹத்தை நாவினுல் நக்க ஆசை கொண்டவர் போலும் தண்டநாதையை ஸேவிக்கின்றனர்.

நான்காவது பர்வாவில், ப்ராம்ஹீ முதலிய ஶக்தி களில் ஐந்தாவது, எட்டாவதுமான வாராஹீ, மஹாலக்ஷ்மீ ஶக்திகள் தவிர மற்ற ஆறுபேரும் தண்டநாதையின் உத்திரவுபடி வஸிக்கின்றனர். அவர்களின் நாற்புறங் களிலும் யாகிநீ, ராகிநீ, லாகிநீ, வாகிநீ, ஶாகிநீ, டாகிநீ இவர்களின் ஐக்ய ரூபமான ஹாகிநீ முதலிய ஏழு யோகி னிகள் சத்ருக்களின் உடலைப் பீறி ரத்தத்தைக் குடிப்ப வர் போல் உக்ரமான ஸிம்ஹ நாதத்தால் பத்துத் திக்கு களையும் நிரப்பிக்கொண்டு விளங்குகின்றனர். தாது நாதைகளென்று அழைக்கப்படுமிவர்கள் அணிமாதி எட்டு ஸித்திகளையுமளிக்க வல்லவர்கள். மோஹநம், மாரணம், ஸ்தம்பநம், தாடநம், பக்ஷணம், வேரோடு அரக்கரை அறுப்பது இவைகளில் மிக்க ஸமர்த்தர்கள். பக்திமான்களது ஸகல ஆபத்துகளையும் போக்கடிப்பவர் கள். தாதுக்களில் தங்கி நிற்கும் இந்த தாது நாதைகள் ஒரு க்ஷணத்திற்குள் ஏழு கடலையும் கலக்கவல்லவர். ஆகாயத்தை மலையாக்கவும், அரை க்ஷணத்திற்குள் மலைகளைத் தூள் தூளாக்கவும் வல்லவர்கள். வண்டிச் சக்ரம்போல் சுழலும் பயங்கரமான கண்களுள்ளவர்கள்.

தம் நாதனுக்கும், தமது மதத்திற்கும், வைதிக தர்மத்திற்கும் தேவர்களுக்கும், வீரர்களுக்கும், யக்ஞங்களுக்கும் த்ரோஹம் செய்பவர்களைப் பக்ஷிப்பதில் ஸமர்த்தர்கள். நித்யம் வாராஹியை ஸேவிப்பவர்கள். அங்கேயே இருபுறங்களிலும் க்ரோதிநீ, ஸ்தம்பிநீ என இருவர்கள் இரண்டு சாமரங்களை வீசிக்கொண்டிருக்கின்றனர். ரதத்தின் இரு பக்கங்களிலும் ஹலம், முஸலமென்ற இரு ஆயுதங்கள் தேவதா ஸ்வரூபத்துடன் நிற்கின்றன. லோக உபத்ரவம் செய்யுமரக்கர்களைக் கொல்லும் இவ்வாயுத தேவதைகள் தங்கள் தலைகளின் மீது அந்த ஆயுதங்களை மகுடம்போல் வஹிக்கின்றனர். இவைகளை கொண்டே தேவி, விஷங்கன் என்ற அரக்கனை வெல்லப் போகிருள். அப் பர்வாவிலேயே கட கட வென்று பற்களைக் கடிக்கும் ஶப்தத்தால் உலகை செவிடாக்கும் சண்டோச் சண்டனென்பவன், ஸதா தேவியை ஸேவித்துக் கொண்டே ஶூல, கட்க, ப்ரேத, பாஶங்களுடன் வீற்றிருக்கிருன். ஐந்தாவது பர்வாவில், வார்த்தாளி முதலிய எட்டுத் தேவதைகள் எட்டுத் திசைகளிலும் அல்லும் பகலும் தேவியை ஸேவிக்கின்றனர். வார்த்தாளீ, வாராஹீ, வராஹமுகீ, அந்திநீ, ருந்திநீ, ஜ்ரும்பிநீ, மோஹிநீ, ஸ்தம்பிநீ என்பன அவர்களது பெயர்கள். அங்கே இடது புறத்தில் ஓர் க்ரோஶ தூரம் (500 முழம்) உயரமுள்ள மிகப் பயங்கரமான மஹிஷ வாஹனம் நிற்கின்றது.

லோக க்ஷேமத்தை நாடிக் கார்ய ஸித்தியை ஸ்ரீ லலிதாதேவியிடம் அறிவித்துக்கொள்ள அறுபத்துநான்கு கோடி அப்ஸரஸ்ஸுகளுடன் அமராதிபதியும், ஸித்தரும் ஸாத்யரும், கந்தர்வரும், பூதகணங்களும், வருணனும் வித்யாதரரும், தும்புரு நாரதர்களும், ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரர்களும் மற்ற எண்ணிறந்த கணங்களும் சூழ்ந்திருந்தனர். ஜ்ரும்பிநீ, ஸ்தம்பிநீ, மோஹிநீ என்னும் மூன்று

சக்திகளும் க்ஷேத்ரபாலனும், ஸிம்ஹவாஹனமும், வராஹ முகங்கொண்ட ஆயிரம் ஶக்திகளும், மற்றோர் வாஹன மான மானும் கரத்தில் மாம்ஸம் ஏந்தி, தேவதா ரூபத் துடன் தோன்றிய மதுக்கடலும், ப்ரத்யேகம் ஆயிரம் படர்களுடன் கூடிய கேதுகர், திரிபுராரி, அக்நி பைரவர், யமஜிஹ்வர், ஏகபாதர், காலர், கராலகர், பீமரூபர், ஹாடகேஶர், அசலநாமா எனும் பத்து பைரவர்களும், ரக்த பாணத்தில் ஆசைக்கொண்ட ஜ்ரும்பிணீ முதலிய வர்களும் சூழ கிரிசக்ரமெனும் சிறந்த ரதம் கிளம்பிற்று. சக்ர ராஜ ரதம் சென்ற விடத்தே கேய சக்ர ரதமும், கேய சக்ர ரதம் சென்ற விடத்தே கிரிசக்ர ரதமும் செல் வது, மூவ்வுலகும் நடந்து செல்வது போலவும், மேரு, மந்த்ரம், விந்த்ய பர்வதம் என்னும் மூன்றும் ஓரிடத்தில் சேர்ந்தன போலவும் இருந்தது. சக்ர ராஜ இரதத்திற்கு இரா தேவி, த்ரிபுர பைரவி, ஸம்ஹார பைரவர், ரக்த யோகினீ, வல்லபர், ஸாரஸர், சாமுண்டா எனும் ஆறு ஸாரதிகளாம். கேய சக்ர ரதத்திற்கு ஹஸந்திகையும், கிரி சக்ர ரதத்திற்கு ஸ்தம்பிநியும் ஸாரதிகளாம். ஸ்ரீ லலிதையின் ரதம் 10 யோஜனை உயரம் உள்ளது. கேய சக்ர ரதம் ஏழு யோஜனை உயரமும் கிரி சக்ர ரதம் 6 யோஜனை உயரமும் உள்ளது. 10 யோஜனை உள்ள லலிதையின் முத்துக்குடை ஶக்தி சாம்ராஜ்ய ஸூசக மாயிருந்தது.

ஸ்ரீ லலிதாதேவி இவ்வளவு சிறப்புடன் பண்டாஸு ரனை ஜயிக்கக் கிளம்பும்போது பூமி நடுங்கிற்று. ஸர்வ பூதங்களும் கலங்கின. தேவ துந்துபி முழங்கிற்று. புஷ்ப வர்ஷம் வர்ஷித்தது. கந்தர்வர் கானம் செய்தனர். ஸரஸ் வதி ஜயமங்கள ஶப்தங்களைக் கூறினாள். தேவியைத் துதித்து ஆநந்த பரவசர்களாகி ஶக்திகள் ஆடிப்பாடிச் சென்றனர். வஸிஷ்டர் முதலிய ஸப்த ரிஷிகள் நான்கு

வேதங்களாலும் ஜய ஸ்ரீயை வ்ருத்தி செய்தனர். அவ் வுத்தமர்கள் ஆஶீர்வதித்தனர்.

பதினேழாம் அத்யாயம் முற்றிற்று.

## பதினெட்டாம் அத்தியாயம்—104 ச்லோகங்கள்.

### ஶூன்யக நகரத்தில் உத்பாதங்கள்

ஸ்ரீ லலிதை புறப்பட்ட ஶப்தத்தைக் கேட்டுப் பண்டாஸுர புரத்திலுள்ளோர் நடுங்கினர். கடற்கரையில் மஹேந்த்ர பர்வதத்தினருகே ஶூன்யகமென்று மிகப் ப்ரஸித்தமான புரியில் பண்டன் பரிவாரத்துடன் வஸித்தான். நூறு யோஜனை தூரம் விஶாலமான அந்நகரம் உத்பாதங்களால் ஒரே புகையாயால் சூழப்பட்டது போலாயிற்று. சுவர்களெல்லாம் பிளந்து விழுந்தன. ஆகாஶத்திலிருந்து கொள்ளிக்கட்டைகள் விழ்ந்தன. பூகம்பம் உண்டாயிற்று. த்வஜங்களின் மீதமர்ந்து காக்கை, கழுகு முதலியவை ஸூர்யனைப் பார்த்துப் பயங்ரமாகக் கத்தின. குடிகளின் மனம் காரணமின்றித் துடித்தது. ஆகாஶத்திலிருந்து பல க்ரூரமான அசரீரிச் சொற்கள் கேட்கப்பட்டன. கொடிகள் அழுக்கடைந்தன. ராக்ஷஸ ஸ்திரீகளது உடலிலிருந்து மாலையும், ஆபரணங்களும் திடீரெனக் கீழே விழுந்தன. ஹா ஹா எனக் கூக்குரலுடன் அழுகைக் குரல் கேட்டது, கண்ணாடி, கவசம், கொடி, கத்தி, மணிகள், ஆகாஶம் இவைகள் அடிக்கடி தமது ப்ரகாஶங்களை இழந்தன. உப்பரிகைகளிலும். சந்த்ரசாலைகளிலும், கடைத்தெருக்களிலும், கோஷ்டிகளிலும், ஸபைகளிலும், விளையாடுமிடங்களிலும், ஸேனைகளிலும், உத்யாநங்களிலும், நாற்சந்துகளிலும், கோபுரங்களிலும், மற்றுமுள்ள இடங்களிலும் மஹாபயங்கரமான கோஷங்கள் கேட்கப்பட்டன. நாய்கள் ஸூர்யனைப் பார்த்து ஊளையிட்டன. ஆங்காங்கு ரக்த மழை பொழிந்தது. ஆகாயத்திலிருத்து சுருள் சுருளாக ரோமங்கள் பூமியில் எங்கும் விழுந்தன.

இப்படி பூமியிலும், ஆகாயத்திலும் பல கெட்ட குறிகள் தோன்ற, இதைக் கண்டு அந்நகர வாஸிகள் நடு நடுங்கிப் பண்டனிடம் தெரிவித்தனர். உடனே அவன் மந்த்ராலோசனை ஸபைக்கு வந்து ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்தான். விசுக்ரன், விஷங்கன் என்னும் இரண்டு ஸஹோதரர்களும் அவனருகே வந்து வணங்கி அமர்ந்தனர். சிற்றரசர்கள் எண்ணிறந்த ஸேனைகளுடன் வந்து அஸுரனைப் பணிந்து அவனது ஆக்ஞையின் பேரில் பணிவுடன் ஆஸனங்களில் அமர்ந்தனர்.

மிக்க கம்பீரமான த்வனியுடன் விசுக்ரன் எழுந்து பண்டாஸுரனை நோக்கி, "தேவ! உமது புஜபலத்தை கண்டு பயந்த தேவர்கள் வேறு சரணமின்றி அக்நியில் வீழ்ந்து அழிந்தனர். அங்கிருந்து தெய்வச் செயலாக ஒரு பெண் தோன்றி இறந்த இந்த்ராதி தேவர்களைத் தன் பராக்ரமத்தால் படைத்தெழுப்பினுள். உத்ஸாகங் கொண்ட தேவர்களால் உத்ஸாகப்படுத்தப்பட்ட அவள் அநேக அபலைகளுடன் பல ஆயுதங்களை ஏந்தி நம்மை ஜயிக்க வருகிருள். என்ன அறியாமை! அபலைகளான ஸ்த்ரீகளின் கூட்டம் மஹாபலசாலிகளான நம்மை ஜயிப்பதென்பது தளிர்களால் பர்வதங்களைப் பிளக்க முயல்வது போல்வதாகும். பெண்களுடன் போரென்பது நமக்கு வெட்கமானதன்றே? நமது ஸேனையைக் கண்டவுடன் இந்த்ராதி தேவர்கள் பயந்தோடுகின்றனர். ப்ரம்ஹா முதலியவர்களுக்கு நமது பாணத்தால் அடிப்பட்ட அடையாளம் இன்றும் மாறவில்லை. விஷ்ணுவைப் பற்றிப் பேச்சே இல்லை! சிவனே நம்மைக் கண்டு மிகப் பயந்தவர். மற்றவரைப் பற்றிப் பேசவும் வேண்டுமா? திக்பாலர்களோ பயந்து ஓட்டமெடுத்தனர். அத்தகைய வல்லமையுள்ள நம்மை ஜயிக்கப் பெண் வருகிருளாம்! ஆயினும் அல்பமான சத்ருவைக்கூட உபேக்ஷை செய்யலாகாது. அவளை விரட்ட நமது கிங்கரர்களை அனுப்புவோம். மதோன்மத்தையான அவளைத் தலைமயிரைப்

பிடித்திழுத்து வந்து நமது அந்தப்புரத்திற்கு ஒரு சேடி யாக வைத்துக் கொள்ளுவோம். நமது ஸேனையிலுள்ள ஒவ்வொருவரைக் கண்டாலும் மூவ்வுலகமும் நடுங்குகிறது. பின்னர் தேவர் சித்தம்'' என்றான்.

பின், விசாரஸமர்த்தனும், நீதியின் மர்மங்களை நன்கு உணர்ந்தவனுமான விஷங்கன் எழுந்து ''தேவா! தாங்கள் அறியாததொன்றுமில்லை. தங்களுக்குச் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை. எதையும் நன்கு விசாரித்தே செய்தல் வேண்டும். இல்லையேல் கார்யம் அடியோடு அழிந்துவிடும். ஜயத்தை விரும்புபவர் சத்ரு வினிடம் சாரனை அனுப்பி அவனது பலாபலத்தை நன்கு உணரவேண்டும் சாரனையே சக்ஷுஸ்ஸாகக்கொண்டு,த்ருட ப்ரக்ஞனாய், ஸதா சங்கையுள்ளவனாய் ஆனால் அதைவெளி யில் காட்டாமல் மந்த்ரிகளிடம் ஏகாந்தமாக மந்த்ராலோ சனைசெய்யும் அரசனே ஜயம்பெறுவான். யோஜிக்காமல் செய்யுங் கார்யம் அழிந்துவிடும். ப்ராணி என்றோ, பெண்ணென்றோ, அல்பனென்றோ, அரசன் சத்ருவை அவமதிக்கலாகாது. தூணிலிருந்து தோன்றிய நரம்ருக ஸ்வரூபரான நரஹரி ஹிரண்யனைக் கொல்லவில்லையா? சண்டி என்னும் ஒரு பெண்ணால் ஶும்ப, நிஶும்பர், மஹிஷன் அவர்களைத் தொடர்ந்த பல அரக்கர்கள் அழிக் கப்படவில்லையா? ஆதலின் பெண்ணென்று அவமதிக்க லாகாது. அவள் ஶக்தியன்றோ? ஶக்தியே ஜயத்திற் குக் காரணம். ஶக்தியின் ஆதரவைக்கொண்டன்றோ ஆண் பெண் எனப்படுகின்றது. அச்சக்தி எங்கும் விளங்குபவள். ஆனால் அவள் யார்? எங்கிருந்து பிறந் தாள்? என்ன செயலுள்ளவள்? எதை ஆஶ்ர யித்தவள்? என்ன பலமுள்ளவள்? யாரவளுக்கு ஸஹாயம்? என அவளது ப்ரவ்ருத்தியை முதலில் நன்கு உணரவேண்டும்'' என்றான்.

இதைக் கேட்ட பண்டன் அலக்ஷ்யமாய் பரிஹஸித்துக் கூறலானுன். "ஆஹா! இஃதென்ன விசாரம்? ஸமமான சத்ருவினிடமன்ரூே இத்தகைய நீதி மார்க்க விசாரம் செய்யவேண்டும். ஓர் பெண்ணுக்காகவா நாம் விசாரம் செய்வது? நமது ஸேனைகளில் மிகப் பலிஷ்டர்களான ஸேநாதிபதிகள் நூற்றுக்கணக்காக இருக்கின்றனர். ஏழு கடலைக் குடிக்கவும், மூவுலகை எரிக்கவும் அவர்கள் ஶக்தி வாய்ந்தவர்கள். ஏன் வீணுகப் பெண்ணிடமஞ்சுகிருய்? சாரர் மூலம் அவளைப் பற்றி முன்னமே கேள்விப்பட்டிருக்கிறேன். அவள் அக்நியில் இருந்து தோன்றியவள். அவள் பெயர் லலிதா. பெயருக்கேற்றபடி புஷ்பம்போல் மிக ம்ருதுவான ஶரீரமுள்ளவள்; வீர்யமற்றவள். அவள் போர்க்களத்தைப் பார்த்ததேயில்லை; ஆனல் மாயை நிறைந்தவள். பல பெண்மணிகளைப் படைத்து அவர்கள் மத்தியிலேயே நடமாடுகிருள். அவளுக்கேது பலம்? அல்லது, நீ கூறியபடி அவள் மஹாபலசாலியாயிருப்பினும், மூவுலகிலும் தங்கு தடங்கலின்றிச் செல்லும் மஹிமை வாய்ந்த பண்டனை யாவரே ஜயிக்க வல்லவர்? எனது பாஹு பலத்தால் பீடிக்கப்பட்ட தேவர்கள் யாவரும் தங்கள் அதிகாரங்களையிழந்து, ஸ்த்ரீ புத்ராதிகளைத் துறந்து, பாதாளம், கடல், மலைக்குஹை, புதர் முதலியவிடங்களில் உருமாறிப் பதுங்கி வஸிக்கின்றனர்.

இத்தகைய நமது பராக்ரமத்தை நேற்றுப் பிறந்த அவள் எவ்வாறு அறிவாள்? பெண்களுக்கு ஸாஹஸமதிகம். கார்ய அகார்ய மறியாது நாஶமடைவர்! அவளை முன்னிட்டுக் கொண்டு யுத்தத்திற்கு வரும் தேவரோ, மூவரோ, திக் பாலரோ எவராயினும் அவர்களை ஒரு க்ஷணத்தில் ஹதம் செய்ய நான் ஒருவனே போதும். குடிலாக்ஷன், குரண்டன், கரங்கன், காகவாசிகன், வஜ்ரதன், வஜ்ரமுகன், வஜ்ரலோமா, வலாஹகன், ஸூசீமுகன்

பாலமுகன், விகர்ணன், விகடாநநன், கராளாக்ஷன், கரண்டகன், தமநன், திர்க்கஜிஹ்வன், ஸ்வர்க்கசத்ரு, ஸ்வர்க்கபலன் முதலிய கணக்கற்ற நமது ஸேநாதிபதிகள் ஹிரண்ய கசிபுவுக்கு ஸமமானவர்கள். சத்ருவைப் பழைய மண் பாத்ரத்தைப்போல் பொடியாக்கித் தள்ளுவர். ஹிரண்யாக்ஷனுக்கு ஸமமான எனது புத்ரர்கள் ஒவ்வொருவருக்கும் மஹா வீரர்களான நூறு நூறு புத்ரர்கள் இருக்கின்றனர். ஆயிரக் கணக்கான நமது அக்ஷோஹிணீபதிகள் கோபங்கொண்டால் எதிரிகளின ஸேனைகளில் சாம்பல் தான் மிஞ்சும். ஹா! அபலேயான இச்சிறுமி எம்மாத்திரம்! இவளது மாயா விலாஸம், மஹா மாயாவிகளான நமது ஸேனைத் தலைவர்களுக்கு ஒரு சிறிய மாம்ஸத் துண்டத்திற்கு ஸமானமாகும். மனக்கவலையை விட்டொழி" என்று இவ்வாறு கூறி, ஆஸநத்தை விட்டெழுந்து, பண்டாஸுரன் ஆயிரம் ஸேனைக்கதிபனான குடிலாக்ஷனெனும் ஸேநாதிபதியைப் பார்த்து "ரே! ஸேனைகளை ஸந்நாஹம் செய். நம் நகரத்தின் நாற்புறங்களிலும் ஸேனைகளை நிறுத்து. துர்க்கங்களைப் பாதுகாக்க ஏற்பாடுகள் செய். மஸ்த்ரங்களை எறியும் யந்த்ரங்களை நூற்றுக்கணக்காகச் சேகரி. புரோஹிதர்களைக் கொண்டு ஆபிசார ஹோமம் செய்! ஆயுதங்களைத் தயாராக வைத்துக்கொள். விரைவில் யுத்தம் நடைபெறும். தக்க ஸேனையுடன் ஒரு ஸேநாதிபதியை முன்னே நிறுத்து. அவன் வருபவளுடன் போர் புரிந்து அவளைத் தலை மயிரைப் பிடித்திழுத்து வரட்டும்" என்று கூறி அந்தப்புரம் சென்றான். யுத்தத்திற்குவரும் லலிதையின் ஸேனைத்வனி அஸுரர்கள் காதில் வீழ்ந்து மிக்க பயத்தை உண்டுபண்ணிற்று.

பதினெட்டாம் அத்யாயம் முற்றிற்று.

---

## பத்தொன்பதாம் அத்யாயம்—110 சுலோகங்கள்

## பண்டாஸுர ஸேநா ஸந்நாஹம்.

ஹயக்ரீவர் :— ஸ்ரீ லலிதா தேவியின் ஸேனையில் இருந்து கிளம்பும் ஶப்தம் மூவ்வுலகையும் செவிடுபடும் படி செய்தது. தைத்ய ஸேனைகளது த்வனியோ ந்ருஸிம்ஹனது கர்ஜனைபோல் ஆகாஶமளாவிற்று. ஶக்தி ஸேனைகளைக் கண்டு அடங்காக் கோபங்கொண்ட அஸுரர்களது படையிலிருந்துஒருவன் விசித்ரமான ரத்ன கவசம் பூண்டு ரோஹண பர்வதம் நடந்து வருவதுபோல் வந்தான். காளராத்திரி போன்ற கத்தியேந்தி மற்ருெருவன் எதிர்த்தான். சிலர் குதிரைகளின் மீதும், சிலர் யானைகளின் மீதும் ஏறிக்கொண்டு பட்டஸம், முத்கரம், பிதுரம், பிண்டிபாலம், திருகணம், முஸுண்டீ, கதை, முஸலம், சதக்நீ, த்ரிசிகம், விசிகம், அர்த்தசக்ரம், மஹா சக்ரம், வக்ராஸ்த்ரம், உரகாநநம், பணிஶீர்ஷம், தண்டா, க்ஷேபணீ, வஜ்ரபாணம், கரட்டம், யவ மத்யம், முஷ்டி மத்யம், வலயம், கண்டலம், கண்டரம், பரஶு முதலிய ஆயுதங்களைக் கரங்களிலேந்தி வந்தனர். ஒட்டை, கழுதை, ஓநாய், நாய், காக்கை, கழுகு, புலி, ஸிம்ஹம், ஶரபம், பேருண்டம், பன்றி, ப்ரேதம் முதலிய வாஹனங்களிலமர்ந்து பலர் போருக்கு வந்தனர். குடிலாக்ஷனென்னும் ஸேநாதிபதி துர்மதனெனும் அஸுர வீரனை அக்ஷோஹிணீ ஸேனைகளுடன் தேவியோடு போர்புரிய அனுப்பினுன். அவனுக்கு முன்னே படஹ வாத்யத்தை வாசித்துக்கொண்டு அட்டஹாஸத்துடன் துர்முகன் சென்ருன்.

ஶூன்யக நகரத்தின் கிழக்கு வாயிற்படியில் பத்து அக்ஷோஹிணியுடன் தாளஜங்கனும், தென் திக்கில் பத்து அக்ஷோஹிணியுடன் தாளபுஜனும், மேற்கில் அவ்வளவு படையுடன் தாளக்ரீவனும், வடதிசையில் அப்படியே

தாளகேதுவும் ரக்ஷகர்களாக நிறுத்தப்பட்டனர். கோட்டைச்சுவரைச் சுற்றி, கபிஸீர்ஷகமெனும் வீடுகளில் பத்து அக்ஷௌஹிணீ ஸேனைகள் மண்டலமாக நிறுத்தப்பட்டன. துர்மதன் அனுப்பப்பட்டதையும், மேற்கூறிய ஏற்பாடுகளையும் குடிலாக்ஷன் பண்டனிடம் விக்ஞாபித்துத் தானும் ஸேனையுடன் யுத்த ஸந்நத்தனாக ஆனான்.

### துர்மத வதம்.

துர்மதன் தூண்டுதலால் ராக்ஷஸஸேனை ஶக்தி ஸேனையிலுள்ளோரைக் கத்தியினால் எதிர்க்க ஆரம்பித்தது. ஶக்திகளும் தன் யஜமானியின் உத்தரவுப்படி தைத்ய ஸேனையைத் தாக்கினர். இரு ஸேனைகளும் கைகலந்து யுத்தம் செய்தபோது புழுதிகள் ஆகாஶத்தைச் சூழ்ந்தன. யானைகளின் காதுகளாலும், குதிரைகளின் மூச்சுக்களாலும் தூளிகள் ஆகாஶத்தில் பரவி, சுழன்று சென்றன.

அரக்கரது அட்டஹாஸத்தைக் கண்டு அடங்காச் சினங்கொண்ட ஸம்பத்கரீ தன்னைப்போன்ற பல ஶக்திகள் சூழத் தங்கள் வாஹநங்களான அஶ்வங்களாலும், யானைகளாலும் அஸுர ஸேனையைத் தாக்கினாள். ரணகளத்தில் எங்கும் தூளிகள் பறந்தன; பேரிகைகள் முழங்கின; ரக்த ஆறுகள் ஓடின; பாணங்களால் அறுபட்ட த்வஜங்களும், தலைகளும், நாலா பக்கமும் சிதறி விழுந்தன. ரக்தத்தினால் சிவந்ததும், கீழே தள்ளப்பட்ட வெண்குடைகளால் நிறைந்ததுமான யுத்தகளம் ப்ரளய கால ஸந்த்யா காலம்போல் விளங்கிற்று. இங்ஙனம் முறியடிக்கப்பட்ட அஸுரஸேனை மிகக் கோபங்கொண்டு ஶக்திகளைத் தாக்க அவர்கள் அதிபயங்கரமான ஆயுதங்களால் தைத்யர்களது ஶிரங்களை அறுத்துக் குவித்தனர். தேவிகளது உக்ர பராக்ரமத்தை ஸஹியாமல் தைத்யர் கூக்குரலிட்டு ஓட ஆரம்பித்தனர். இதைக்கண்டு துர்மதன் ஒட்டை மீதேறி வந்து பல்லாயிரக் கணக்கான ஶரங்களால் ஸம்பத்கரியின் ஸேனையை முறியடித்தான்.

தனது ஸேனை அஸுரர் படையால் அசைவற்றிருப்பதைப் பார்த்து ஸம்பத்கரீ ரண கோலாஹலமெனும் குஞ்சரத்தின் மீதேறிக் கையில் கோதண்டத்தை எடுத்து ஶரங்களை வர்ஷமாக வர்ஷித்தாள். அவள், தன் ஶரங்களை எடுப்பதையும், தொடுப்பதையும், விடுவதையும் பிறர் காண முடியாமல் அதிவிரைவாக யுத்தம் செய்தாள். அரக்கனும் சினங்கொண்டு மிகக் கடுமையாகப் பாணங்களை வர்ஷித்தான். இருவர்களது பாணங்களும் ரீங்காரத்துடன் கிளம்பி ஸூர்யனை மறைத்து ரணகளத்தை இருள் சூழும்படி செய்தன. பாணங்கள் ஒன்றோடொன்று உறைவதால் கிளம்பின தீப்பொறிகள் மின்மினிப் பூச்சிகள் போல் தோன்றின. தேவியினது வாஹனமான ரண கோலாஹலம் என்னும் கரீந்த்ரன் துதிக்கையாலும், கால்களாலும், கூறிய தந்தங்களாலும், வாலாலும், பிளிறுதலாலும் பல பகைவரை மிக ஸமார்த்யமாய்க் கொன்றது. துர்மதன் மிக ஆக்ரஹத்துடன் ஒரு பாணத்தால் ஸம்பத்கரியின் மகுடத்திலுள்ள ஒரு மணியைத் தரணியில் தள்ளினான். கோபத்தால் கண்கள் சிவக்க, உதடு துடிக்கப் பல பாணங்களைத் தேவி அவன் மார்புமீது விட்டாள். அவைகளாலடிபட்ட துர்மதன் அவனிமீது விழுந்து உடனே உயிரை விட்டான். ஶக்தி ஸைன்யங்கள் அஸுர ஸேனைகளிலுள்ள இதர ப்ரமுகர்களைக் கொன்று வீழ்த்தினர். எங்கும் கூக்குரலுண்டாயிற்று. அடிபட்டுத் தப்பிப் பிழைத்த சிலர் ஶூன்யக நகரத்திற்கு ஓடிப் பண்டனிடம் முறையிட்டனர்.

### அஶ்வாரூடை குருண்டனைக் கொல்லுதல்.

அதைக்கேட்ட தாநவேஶ்வரன் கோபங்கொண்டு கத்தியை உதறி அருகிலுள்ள குடிலாக்ஷன் என்னும் ஸேநாதிபதியைப் பார்த்து, "தேவராலும், அஸுரராலும் வெல்ல முடியாத, நமது துர்மதன் கேவலம் அபலையான அத்துஷ்டையால் எப்படிக் கொல்லப் பட்டான்?

இது தெய்வச்செயலே! அவளை ஜயித்து இழுத்துவரும் படி ஸேநாதிபதி குருண்டனை அனுப்பு'' என்றான். அங்ஙனமே, குருண்டன் இருபது அக்ஷௌஹிணீ ஸேனை யுடன் யுத்த ஸந்நத்தனாய்ப் பண்டனையும், ப்ரதம ஸேநாதி பதியையும் வணங்கி உத்தரவு கேட்டான். அவனைப் பார்த்துக் குடிலாக்ஷன், "நீ மாயையிலும் கபட யுத்தத் திலும் மிகச் சிறந்தவன். அந்த ஸ்த்ரீயை விரைவில் ஜயித்து வா'' என்று அரசன் முன்னே கட்டளையிட் டான். துர்மதனது ஸஹோதரனான குருண்டன் மிக தீரனாய்க் கோபத்துடனும் மோகத்துடனும் ரணகளஞ் சென்று, வில்லை வளைத்து நாண் பூட்டி எண்ணிறந்த பாணவர்ஷங்களை சக்திகள் மீது வர்ஷித்தான். அன்றி யும் ஸம்பத்கரியை நோக்கி, "ஏ பாபியே! என் தம்பி யைக் கொன்று வீணே கர்வங்கொள்கிறாய். இந்த நிமிஷத்திலே எனது கூறியபாணங்கள் உன்னை யமலோக மனுப்பப் போகின்றன. அதி ம்ருதுவான உனது உடலிலிருந்து பெருகுகின்றதும், ருசியானதும், ரண களத்தில் அபூர்வமானதுமான ஸ்த்ரீயின் உதிரத்தை ரண பூதனைகள் பருகட்டும். தம்பியைக் கொன்றதற் கேற்ற பயனைப் பெறப்போகின்றாய், எனது பாஹு பலத்தைப் பார்'' என்று கூறித் தனது ஸேனையை உத்ஸாஹப் படுத்தினான். அவனது பரிவாரத்தைக் அழிக்க சக்திகள் கிளம்பும்போது அச்வாரூடா என் பவள் வந்து, "ஸகீ ஸம்பத்கரீ! அன்புடன் எனது சொல் லைக் கேள். இவனோடு நான் யுத்தம் செய்ய எனக்கு உத்தரவுகொடு. ஒரு க்ஷணம் பொறுத்திரு. நானிவனைக் கொல்கிறேன். தோழியான என் வேண்டுகோளை மறுக் காதே'' என்று கூறினாள். இதைக்கேட்டு ஸம்பத்கரீ புன்னகையுடன் தன் படையைத் திருப்பி விட்டாள்.

ஸேனைக் கடலின் அலைபோன்ற அதிவேகமுள்ள குதிரை மீதேறிய சக்திகள் பல சூழ அச்வாரூடை அரக்க னுடன் ஸமர் செய்யக் கிளம்பினாள். அவளது ஸகிகள்

குதிரைகளைத் திருப்புவதிலும், ஓட்டுவதிலும் பற்பல வகையான நடைகளிலும், கை கால்களால் அவைகளைத் தொட்டு உத்ஸாஹப் படுத்துவதிலும், அச்வத்தின் உள்ளத்தை உணர்வதிலும் மிக ஸமர்த்தைகள்.

குருண்டனது தூண்டுதலால் தைத்யர்கள் பூர்ண பலத்துடன் இவர்களை எதிர்க்க, சக்திகளும் அஸுரர்களைத் தாக்க இருவர்களுக்கும் மிகப் பயங்கரமான யுத்தம் தோன்றிற்று. அபராஜிதமெனும் அச்வரத்நத்தின் மீது அமர்ந்து, அச்வாரூடை குருண்டனை எதிர்த்துச் சென்றாள். அவள், பின்னல் அசைய, சந்த்ரகலை சலிக்க, மணிவில்லைக் கையிலெடுத்து பொற்பிடிகளுள்ள சரங்களை வர்ஷித்தாள். கோபங்கொண்ட குருண்டன் தேவிமீது பல பாணங்களை வர்ஷித்தான். தேவியின் குதிரை கூரிய குளம்புகளால் பல சத்ருக்களைக் கொன்றது. தனது கர்ஜனையால் பலர் மூர்ச்சையடையும்படி செய்தது. தேவி தனது திவ்யமான பாச ஆயுதத்தை ப்ரயோகிக்க அதிலிருந்து பாம்புபோல் பல்லாயிரம் பாசங்கள் தோன்றி, பகைவர்களைக் கட்டிக் கட்டி மூர்ச்சை அடையும்படிச் செய்தன. தன் ஸேனை கட்டுண்டதைக்கண்டு குருண்டன் தேவியினது மணிமய வில்லின் நாண் கயிற்றை அறுத்தான். தேவி வில்லை எறிந்துவிட்டு அங்குசத்தினால் அவன் மார்பை பிளந்தாள். இடி வீழ்ந்த மரம்போல் குருண்டன் பூமியில் வீழ்ந்து இறந்தான். அந்த அங்குசத்திலிருந்து தோன்றிய சில பூதங்கள் பாசத்தால் கட்டப்பட்ட பகைவரைப் புஜித்து மறைந்தன. இதில் தப்பிப் பிழைத்த சிலர் இருபது அக்ஷௌஹிணீ ஸேனைகளுடன் குருண்டன் கொல்லப்பட்டதைப் பண்டாஸுரனிடம் தெரிவித்தனர். இதைக் கேட்டு அவன் ஸர்ப்பம்போலப் பெருமூச்சு விட்டான்.

பத்தொன்பதாம் அத்யாயம் முற்றிற்று.

---

## இருபதாம் அத்யாயம் — 101 ச்லோகங்கள்.

### கரங்கன் முதலிய ஐந்து ஸேநாதிபதிகளின் வதம்.

ஹயக்ரீவர்:— குடிலாக்ஷனைப் பார்த்துப் பண்டன் "ஸ்வப்நத்திலும் நினைக்காதது இது! எவரும் எண்ணுதது! முன் கேட்கப் படாதது! மஹா பலிஷ்டர்களான இரு ஸஹோதரர்களும் ஒரு பெண்ணுல் கொல்லப்பட்டார்கள்! மாயாவினியான அவள் மஹிமை இது! நூறு அக்ஷௌஹிணீ ஸேனையுடன் கரங்கன் முதலிய ஐந்து ஸேநாதிபதிகளை அனுப்பு. அவர்கள் யுத்தத்தில் மிகக் கொழுத்தவர்கள். உடலை த்யாகம் செய்பவர்கள். அவளை நிச்சயமாக ஜெயிப்பார்கள்" என்ருன். குடிலாக்ஷன் உத்தரவுபடி அவர்கள் அரசனைப் பணிந்து, அவரது கடாக்ஷத்தால் உத்தரவு இடப்பட்டு, கோபத்தால் ஒன்றுமறியாமல் தீயில் விழுபவர்போல் கிளம்பினுர்கள். கஜங்களது கர்ஜனையும், குதிரைகளின் கோஷமும், வீரவீரர்களது அட்டஹாஸமும், ரத சக்ரங்களது ஶப்தமும் வானையளாவின. தூசு தூளிகள் பரவினதினுல் எவ்வளவு ஸேனை எனக் கணக்கிட முடியாமற்போயிற்று. அரவக்கொடி மத்ஸ்யக்கொடி முதலிய த்வஜங்கள் அசைந்தன. இதைக் கண்ட வானவர், ஶக்தி ஸேனைக்குப் பங்கமுண்டாகுமோ என அஞ்சினர். கரங்காதிகள் ஸர்ப்பிணீ எனும் மாயையைப் படைத்தனர். கறுத்த உருவமும், தொங்கும் உதடுகளுமுள்ள அது பல்லாயிர கணக்கான பாம்புகளை அணிந்து, ஶக்திகள் முன் தோன்றி அவர்கள் மனம் நடுங்கும்படி செய்தது. இரு ஸேனைகளுக்கும் மிகக் கடுமையான பயங்கர யுத்தம் நிகழ்ந்தது. பிணங்கள் மலைப் போல் குவிந்தன. ரக்த ஆறுகள் பல ஓடின. ஆயுதங்களது உராய்தலால் அக்னி தோன்றி, பளீர் பளீரெனப் ப்ரகாஶித்தது. அறுபட்டு பூமியில் வீழ்ந்து கிடக்கும் உடல்களினுலும், தலைகளினுலும் விரைந்து செல்ல முடியாமல் ரதங்கள் அசைவற்று நின்றன. காது செவிடுபட வீரவாதங்கள் எழும்பின.

ஸர்ப்பிணியால் படைக்கப்பட்ட தக்ஷ கார்க்கோடக துல்யர்களான ஸர்ப்பங்கள் தாரதம், வத்ஸநாபம், கால கூடம், ஸௌராஷ்ட்ரம், ப்ரம்ஹ புத்ரம், ப்ரதிபநம், சௌக்லிகேயம் முதலிய கொடிய விஷங்களைக் கக்கின, கரு நாகங்கள் இரு தலைகளுடன் மிகப்பயங்கரமாக ஸர்ப்பிணியின் இரு கண்களிலிருந்து கோடிகணக்காகப் படைக்கப்பட்டன. சில ஸர்ப்பங்கள் பல நிறங்களுள்ள வைகள். நான்கு தலைகள் உள்ளவைகள். அவள் மூக்கி லிருந்தும், காதிலிருந்தும், வாயிலிருந்தும், ஸ்தனங்களி லிருந்தும், நாபியிலிருந்தும், முன்னும் பின்னும் தலையு டன் கூடி, பற்பல வர்ணமுள்ள மிகப் பயங்கரமான கோடி கோடிக் கணக்கான நாகங்கள் தோன்றி, விஷ ஜ்வா லையைக் கக்கிக்கொண்டு, ஶக்திகளின் கை, கால்களைக் கட்டி ஹிம்ஸித்தன. அவைகளை அடிக்கும்போது ஒன்று நூறாகக் கிளம்பின. விஷ ஜ்வாலையால் ஶக்திகள் கொளுத்தப்பட்டனர். என்ன செய்வதென்று தெரியாது தேவிகள் திகைத்து நிற்க, நூறு கழுதைகள் பூட்டிய ரதத்திலிருந்து கரங்கன் ப்ரளயகால மேகம்போல் ஶரங் களை வர்ஷித்தான். காகவாசிதனெனும் மற்றோர் ஸேநாதி பதி கஜத்தின் மீதிருந்து சக்ரத்தால் தாக்கினான். வஜ்ர தந்தனெனும் மற்றொரு ஸேநாதிபதி ஒட்டைமீதிருந்து வஜ்ரங்களால் அடித்தான். வஜ்ரமுகன் கழுதை மீதிருந் தும், வஜ்ரலோமன் கழுகுகள் பூட்டிய ரதத்திலிருந்தும் ஶரங்களால் ஶக்தி ஸேனையை தாக்கினார்கள். ஒரு புறத் தில் ஐந்து ஸேனை தலைவர்களும், மற்றொரு புறத்தில் அரக்கரது நூறு அக்ஷௌஹிணீ ஸேனைகளும், இன்னு மொரு புறத்தில் க்ஷணத்திற்கு க்ஷணம் கோடிக்கணக் கான விஷ ஸர்ப்பங்களைப் படைக்கும் ஸர்ப்பிணியு மாக ஶக்திகளைத் தாக்க, கருடாரூடையான நகுலீ எனும் ஶக்தி ஸ்ரீலலிதையின் தாலுவிலிருந்து தோன்றி ஸர்ப் பிணி முன்னின்றாள். ஸுமேருமலை நடந்து வந்ததுபோல் கருடன் யுத்தகளத்தில் ஸஞ்சரித்தார். கோபத்தால் சிவந்த

கண்களுள்ள நகுலா தேவி வாயைத் திறக்க, முப்பத்தி ரண்டு பற்களிலிருந்தும் முப்பத்திரண்டு கோடி ஸ்வர்ணமயமான நகுலங்கள் (கீரி) தோன் றின. அவை வாலை உதறிக்கொண்டு கூரியநகங்களாலும் பற்களாலும் ஒரு ஸர்ப்பத்திற்கு ஓர் கீரியாகச் சென்று மாய ஸர்ப்பங்களைக் கண்ட துண்டங்களாகக் கடித்தெறிந் தன. ஒன்றுகூட மிகுதியில்லாமற் இறந்துகிடக்கும் அவைகளின் தலைகளில் உள்ள மாணிக்கங்கள் நகுலங்க ளது கோபாக்னிபோல் விளங்கின. கோபத்துடன் ஸர்ப் பிணீ எதிர்த்துவர, நகுலேஶ்வரீ க்ரூரமான காருட அஸ்த்ரத்தை ப்ரயோகித்தாள். அது ஸர்ப்பிணியின் உட லில் புகுந்து, மாயையை அகற்றி ஸர்ப்பிணியையும் லய மாக்கி விட்டது.

இதைக்கண்டு அடங்காக் கோபங் கொண்ட ஐந்து ஸேநாதிபதிகளும் ஒன்று சேர்ந்து ஒரே முகமாக, ஶர வர்ஷங்களை நகுலேஶ்வரி மீது வர்ஷித்தனர். அவள் ஒருத் தியாகவே கருடாரூடையாய் நின்று ஐந்து வீரர்களையும் தாக்கினாள். பட்டஸம், முஸலம் முதலிய ஆயுதங்களால் தைத்யர் நகுலங்களை அடிக்க அவைகள் வஜ்ரம் போன்ற கூரிய பற்களால் அஸுரர்களது மர்ம ஸ்தானங்களில் கடித்தன. ஹாஹாகாரத்துடன் தைத்யர் இதைப்பொறுக்க முடியாமல் சிலர் ஆகாஶத்தில் மறைந்தனர். அங்கும் நகுலங்கள் சென்று காது, மூக்கு, வாய், முதுகு முதலிய இடங்களில் கடித்தன. அவர்கள் தலைமீது திடீர் திடீரென குதித்தன. சிறிய வடிவமெடுத்து மூக்கிலும், காதுகளி லும் புகுந்து கடித்தன. இங்ஙனம் தன் ஸைன்னியர் துன்பப்படுவதைக்கண்டு கரங்கன் முதலியவர் பலபாண வர்ஷங்களால் நகுலங்களின் பற்களை உடைத்தனர். வாலை அறுத்து உடலைப் பிளந்தனர். அஞ்சி ஓடிய நகுலங்கள் நகுலேஶ்வரியைச் சூழ்ந்தன. மஹா கோபத்துடன் அவள் எங்கும் ஜ்வலிக்கும் முகமுள்ள அக்ஷீணநகுலமெனும் அஸ்த்ரத்தைப் ப்ரயோகித்தாள்.

அதிலிருந்து கோடிக்கணக்காக வஜ்ரம்போன்ற சரீரம், நகம், தந்தம், ரோமம், பலம் உள்ளவைகளான நகுலங்கள் பிறந்தன. அவைகள் ராக்ஷஸஸேனையில் புகுந்து கடித்துக் கீறிப் பீறி, மேல் விழுந்து, நூறு அக்ஷோஹிணியில் பலரைக் கொன்று, வெகு சிலரையே மிகுதியாக்கிவிட்டன. மிக்க பயத்துடனும், கோபத்துடனும் ஸேநாதிபதிகள் கடுமையாகப் போர் தொடுத்தனர். கருடனுடன் நகுலேஶ்வரீ வேகமாகவந்து, அஸுர ஸேனையின் மத்தியில் குதித்து பட்டஸத்தால் கரங்கனுடைய ஶிரத்தை அறுத்தாள். அதே போல் தாவித் தாவி மற்ற நால்வர் தலைகளையும் கத்தியினால் அறுத்துத் தள்ளினாள். இத்தகைய பராக்ரமத்தைக் கண்டுகளித்த ஶ்யாமளா தேவி நகுலாதேவியைக் கொண்டாடித் தனது அங்கத்தில் ஒரு தேவதையாக இருக்கும் பாக்யத்தைத்தந்தாள். மிகுதியுள்ள ஸைன்னியர் நடுநடுங்கி ஓடி நடந்ததைப் பண்டனிடம் கூறினர். அதைக் கேட்டு அஸுரேந்த்ரன் அடங்கா கோபங்கொண்டான்.

இருபதாம் அத்யாயம் முற்றிற்று.

## இருபத்தொன்றும் அத்யாயம்— 104 ச்லோகங்கள்.

## வலாஹகாதி ஏழு ஸேநாதிபதிகளின் வதம்

ஹயக்ரீவர்:— சித்தங் கலங்கிய பண்டன் குடிலாக்ஷனை நோக்கி, "ஸேநாபதே! நமக்கு ஏதோ கெட்ட காலமிது. ஸர்ப்பிணீ மாயா பலத்தைக் கொண்டு தேவர்களை வென்ற கரங்கன் முதலிய ஐந்து வீரர்கள் மாயாவினியான அந்தப்பாபியால் கொல்லப்பட்டனர். வலாஹகன் முதலிய ஏழு ஸேநாதிபதிகளை முந்நூறு அக்ஷோஹிணீ ஸேனையுடன் அனுப்பு. லலிதையின் ஸேனையை முறியடித்து விட்டு அவர்கள் திரும்பி வரட்டும். கீகஸையின் கர்ப்பத்தில் பிறந்த இம் மஹா வீரர்கள் ஜயமின்றித் திரும்பாரல்லவா?" என்று

கூறினுன். வலாஹகன், ஸூசிமுகன், விகடாநநன் கராளா க்ஷன், கரடகன், பாலமுகன், விகர்ணன் ஆகிய இவ்வேழு வீரர்களும் ஒரு தாய் வயிற்றில் பிறந்த ஸஹோதரர்கள். அன்யோன்ய அன்புடையவர்கள். முன்னெரு ஸமயம் ஏழு லோகங்களையும் கலக்கினவர்கள். அவர்கள் ராக்ஷஸேச்வரனை வணங்கி ரணகளஞ் சென்றனர். பாஸம், முஸலம் முதலிய ஆயுதங்களைத் தாங்கி, ஶக்திகளும் தைத்யஸேனை எனும் கடலைக் குடிப்பவர்போல் எதிர்த்து வந்தனர். "ஏ பாபிகளே! துஷ்டைகளே! அதமப் பெண்களே! மாயையால் ஏமாற்றும் உங்களை உக்ர பாணங்களால் யமலோகத்திற்கனுப்புகிறேம்" என்று அரக்கர் வீராட்டஹாஸத்துடன் தேவிகள் மீது பாணங்களை எறிந்தனர். ஒரு ஶக்தி சத்ருவின் கழுத்தை அறுத்து, அங்கிருந்து வரும் ரக்த ப்ரவாஹத்தைக் குடிக்க வரும் கழுகுமண்டலங்களால் யமனுக்குக் குடை பிடித்தாள். மற்ருெருத்தி, அரக்கர் அனுப்பிய ஶக்தி ஆயுதத்தை ஶக்தியால் முறித்தாள், கஜாரூடையான ஒரு ஶக்தி அஸுரன் மார்பில் தன் வாஹநத்தைக் கரிமுட்டி விளையாடச் செய்தாள். ஒருத்தி கஜத்தின் மஸ்தகத்தைப் பிளந்தாள். ஒருத்தி யானையின் துதிக்கையை அறுத்துப் பெரும் பன்றிபோலாக்கினுள். ஒருத்தி சத்ருவின் தநுஸ்ஸை முறித்தாள். ஒருத்தி முத்கரத்தால் ரதசக்ரத்தைத் தூளாக்கினுள். பாலும் நீரும்போல் இருஸேனைகளும் ஒன்று கலந்தன. கத்தியோடு கத்தியும், கதையுடன் கதையும் கலந்து மிகப் பயங்கரமாகப் போர் நடந்தது. வலாஹகன் அக்நியிடமிருந்து பிறந்ததும், வஜ்ரம் போன்ற மூக்குள்ளதும், காலதண்டம் போன்ற காலுள்ளதும், ஸம்ஹாரகுப்தனெனப் பெயர் பூண்டதுமான ஒரு பெரிய கழுகுமீதமர்ந்து யுத்தம் செய்தான். அது அரைக்ரோஶமுள்ள சிறகுகளை விரித்துக்கொண்டு, கொள்ளிக்கட்டை போன்ற கண்களால் பார்த்து, அக்நி

குண்டம் போன்ற வாயைத்திறந்து ஶக்தி ஸேனைகளைப் பக்ஷித்தது. தநுஸ்ஸை உதறிக்கொண்டு, அதன் மீதுள்ள வலாஹகன் பர்வதத்தின் மீது அமர்ந்த மேகம்போல் விளங்கினான். ஸூசீமுகன் காக்கை வாஹநத்திலமர்ந்து யுத்தம்செய்தான். அது ஒரு க்ரோஶ தூரம் விஶாலமான சிறகுகளாலும், கூரிய கால்களாலும், முகத்தினாலும் ஶக்திகளை ஹிம்ஸித்தது. பாலமுகன் மலைபோன்ற கழுகுமீதேறி யுத்தம் செய்தான். விகர்ணன் பேரண்டமென்னும் பக்ஷிமீதும், விகடாநநன் கோழிமீதும் அமர்ந்து யுத்தம் செய்தனர். கராளாக்ஷன் தபஶ்மசாந மந்த்ரத்தால் கிடைத்த அதோமுகமான ப்ரேத வாஹநத்தின் மீதமர்ந்து போர் புரிந்தான். கரடகன் வேதாள வாஹநத்திலிருந்து சண்டை செய்தான். ஏழு கடல் போன்ற இவ்வேழு வீரர்களும் தேவி ஸேனைகளைக் கலக்கினார்கள். அவர்கள் முன்னம் ஸூர்யனைப் பல்லாண்டு தவத்தால் ஆராதித்தனர். அவர் ப்ரத்யக்ஷமாகி, யாது வரம் வேண்டுமென்று வினவ, "யுத்தகாலத்தில் நீர் எங்கள் கண்களில் வீற்றிருந்து சத்ருக்களைத் தேஜஸால் கொளுத்தி, அசைவற்றவர்களாகச் செய்யவேண்டும். அவர்களது ஆயுதங்களும் அசைவற்றிருக்கவேண்டும். அவர்களை எளிதில் நாங்கள் ஜயிக்கவேண்டும்" என்று வரம் கேட்டனர். அங்ஙனமே அவர் அளிக்க, அதை இச்சண்டையில் அவர்கள் ஸ்மரித்தனர். இந்தப் பானுவின் ஸாந்நித்யத்தினால் ஶக்திகளும், ஶக்திகளது ஆயுதங்களும் அசைவற்று நின்றன. அஸுரர்கள், ஸந்தோஷமடைந்து எண்ணிறந்த பாணங்களை வர்ஷித்து, அவர்களது உடலிலிருந்து ரக்தம் பெருகும்படி செய்தனர். தேவிகள் சிவந்த துளிர்களுள்ள கொடிபோல் நின்றனர். ஹாஹாகாரம் செய்து ஸ்ரீலலிதா தேவியை ஶரண் புகுந்தனர்.

ஸ்ரீ தேவியின் ஆணையால் தண்டநாதையின் ப்ரத்யங்கரக்ஷிணியான திரஸ்கரிணிகா என்பவள் தோன்றினாள். அவள் தமோலிப்த மெனும் பெயர்கொண்ட

விமாநத்தின் மீதேறி ஶக்திகளுக்கு அபயமளித்தாள். அவள் உடல் கருப்பு. கறுத்த கவசமணிந்து, கருங் குதிரை பூட்டிய விமாநத்திலிருந்து மோஹனமெனும் வில்லை வளைத்து, ஸிம்ஹநாதம்செய்து, கருநாகம் போன்ற பாணங்களை வர்ஷித்தாள். வலாஹகாதிகள் உக்ரமாக யுத்தம்செய்ய, தண்டநாதையின் உத்தரவுபடி அவள் அந்தாஸ்த்ரத்தை ப்ரயோகித்தாள். அதனல் அரக்கர்கள் பார்வையிழந்து, ஶஸ்த்ரங்களை உபயோகிக்க ஶக்தியற்றவர்களாயினர். ஶக்திகள்கூட அவ் வஸ்த்ரத்தின் மஹிமையால் சற்று அசைவற்றிருந்து, பிறகு கோலாஹலத்துடன் சத்ருக்களைத்தாக்கினர். அன்றியும், ஓ "திரஸ்கரிணீ! ஸாது! ஸாது! ஸரியான ஸமயத்தில் சத்ருக்களின் கண்களை மறைத்தாய். எவராலும் ஜயிக்கமுடியாத எங்களையே ஸ்தம்பிக்கும்படி செய்த நீயே இவ்வேழு துஷ்டர்களையும் கொல்வாய். இதைக் கேட்டு ஸ்ரீ லலிதாதேவி உன்மீது ஸந்தோஷமடைவாள். அவ்விதமே மந்த்ரிணீ, தண்டிணீ இருவர்களுங்கூட ஆனந்தமடைவார்கள். நாங்கள் அவர்களுடைய ஸேனைகளை நாஶம் செய்கிறோம்" என்று ஶக்திகள் திரஸ்கரிணிகா தேவியை உத்ஸாகப்படுத்தினர்.

உடனே திரஸ்கரிணி மிகப்போர் ஆவேசங்கொண்டு, வலாஹகனுடன் யுத்தம்செய்து சிறிது நேரத்திற்குள் அவன் தலைமயிரைக் கரத்தால் பிடித்திழுத்துக் கத்தியினல் அவன் ஶிரத்தை அறுத்துத் தள்ளினள். அவனது வாஹநத்தையும் கொன்றாள். அதேபோல், அவனுடன் வந்த ஸஹோதரர்கள் அறுவர்களையும் வாஹநங்களுடன் கொன்று வீழ்த்தினள். ஶக்திகள் அவர்களுடைய ஸேனைகளை அனைத்தையும் கொன்று குவித்து, ரக்த நதிகள் ஓடும்படிச் செய்தார்கள். அந்தத் திரஸ்கரிணீ எனும் மாயையின் செயல் மிக ஆஶ்சர்யமாக இருந்தது.

ஒரு சிலர், உயிர் தப்பிப் பயந்தோடிக் கூச்குரலுடன் பண்டனிடம் சென்று கதறினர். தண்டிநீ, திரஸ்கரிணியை மிகக் கொண்டாடினாள். ஏனைய ஶக்திகளும், தலைகளை அசைத்து ஸாது, ஸாது என்று கூறிப் புகழ்ந்தனர்.

இருபத்தோராம் அத்யாயம் முற்றிற்று.

---

## இருபத்திரண்டாம் அத்யாயம் 110 ச்லோகங்கள்

## விஷங்காதிகள் ஓடுதல்.

ஹயக்ரீவர்:— தபோபலமுள்ள இவர்களும் கொல்லப்பட்டதைக் கேட்டு, பண்டன் க்ருஷ்ண ஸர்ப்பம் போல் பெருமூச்சு விட்டு, தன் இரு ஸஹோதரர்களை ஏகாந்தமாக யோஜிக்க அழைத்தான். யுவராஜனை விசுக்ரன் தன் தம்பி விஷங்கனையும், குடிலாக்ஷன் முதலிய மிக ஆப்த மந்திரிகளையும் அழைத்துக்கொண்டு வந்து சேர்ந்தான். பண்டன் அவர்களை நோக்கி, "ஆஶ்சர்யம்! அஸுர வம்சத்திற்கு அழிவுகாலம் நெருங்கி விட்டது. அதற்கேற்ற முறையில் தெய்வபலமும் இறங்கி விட்டது! இனி தாமதம் கூடாது. நமது கிங்கிரர் பெயரைக் கேட்ட மாத்ரத்தில் வானவர் அனைவரும் பயந்தோடுவர். அத்தகைய நமக்கே பெருங்கேடு விளைந்துள்ளது. விதியின் பயனை யாரால் வெல்லமுடியும்? அது, பலமுள்ளவரை நபும்ஸகமாகவும், தனிகனைத் தரித்ரனாகவும், தீர்காயுஸ்ஸை அற்பாயுஸ்ஸாகவும் செய்கிறது நமது புஜவலிமைக்கு அபலையான இச்சிறுமி ஈடாகுவாளோ! திடீரென்று எதிர்பாராமல் நம்மேல் இடி விழுந்து விட்டது. ஸர்ப்பிணி எனும் மாயாபலம் பொருந்தியவர்களும், எதிரியால் வெல்ல முடியாத பராக்ரமமுடைய நமது ஸேனைத் தலைவர்களும் அப்பெண்ணால் கொல்லப்பட்டனர். ஸூர்யனிடம் அரிய வரம் பெற்று, தேவர்களை விழுங்கிய வலாஹகாதிகள் வீழ்த்தப்பட்டனர். மாயையால் திமிர்பிடித்த ஒருநங்கை

நம்மைக் கொல்வதென்ருல் நமது பராக்ரமம் வீணே யாகும். இதைப்பேச என் நாவும் எழவில்லை. ஸ்த்ரீயா எனது ஸேனைகளை அழிப்பது? அந்த மதங்கொண்ட பெண்ணை வேருடனழிக்க வேண்டும். சாரர்கள் மூல மாய், ஸேனையின் முன் வராமல், பின்னிருக்கும் லலிதையே மூலகாரணம் என்றறிகின்றேன். அவளைக் காக்க பரிமித ஸேனைகள் ஆங்கிருக்கின்றன. சுற்றுப் புறத்திலிருந்து சத்ருவை வெல்வதில் விஷங்கன் மிக ஸமர்த்தன். ஆகையால் அவன் ரஹஸ்யமாக அந்தத் துஷ்டை இருக்கிற இடம் செல்லட்டும். அவன் பின்னுல் பதினைந்து அக்ஷோஹிணீ ஸேனைகள் சென்று ஸமயத்தில் ஸஹாயம் செய்யட்டும். வேர் போன்ற அவள் ஒருத்தி யைக் கொன்ருல் எல்லா ஶக்திகளையும் கொன்றதாகும். அவள் எல்லோருக்கும் பின்னுல் பத்து யோஜனை தூரம் விஸ்தாரமான ரதத்தில், முத்துக்குடை பிடிக்க, நான்கு சாமரங்கள் வீச, இடையில் வீற்றிருப்பாள். அவளுக்கு ஸ்த்ரீகளே ஸஹாயமாயிருப்பதால் எளிதில் அவளை ஜயிக்கலாம். விஷங்கனுக்குத் துணையாக தமநகன், தீர்க்க ஜிஹ்வன், ஹூம்பேகன், ஹூலுமுல்லன், கல் கஸன், கல்கிவாஹனன், புல்கஸன், புண்ட்ரகேது, சண்டபாகு, குக்குரன், ஜம்புகாக்ஷன், ஜம்பனன், தீக்ஷ்ண ஶ்ருங்கன், த்ரிகண்டகன், சந்த்ர குப்தன் என்ற இப் பதினைந்து ஸேனுதிபதிகள் ஒவ்வோர் அக்ஷோஹிணீ ஸேனையுடன் செல்லட்டும். விஷங்க! நீ வருவதைச் சத்ருக்கள் அறியாதபடி ரஹஸ்யமாகச் செல்! உனது பெருமையைக் காட்ட இதே தக்க ஸமயம்! ஜய முண்டாகுக'' என்று கூறி விஷங்கனைப் போருக்கு அனுப்பினன்.

விஷங்கன் ஸ்ரீ தேவியை எதிர்க்கக் கிளம்பினபோது ஸூர்யாஸ்தமனமாயிற்று. அச்சமயம், எருமையின் உடல் போலும், காட்டுப் பன்றியின் உடல்போலும்,

மயிலின் கழுத்துப்போலும், தீபத்தைக்கண்டு ஒளிவது போலும், விஷங்கனுக்கு உதவி செய்ய வந்ததுபோலும், எங்கும் திரண்ட இருள் சூழ ஆரம்பித்தது. இரவுதான் ராக்ஷஸர்களுக்கும், அஸுரர்களுக்கும் பலத்தைக் கொடுக் குங் காலம். மாயா ஶக்தி பெருகுங்காலம். விஷங்க னுடைய பரிவாரங்கள் இருளுடன் ஐக்கியத்தை விரும்பு பவர் போல் கருத்த தலைப்பாகைகளையும், கருத்த கவசங் களையும், நீல வஸ்த்ரங்களையும் தரித்திருந்தனர்.

விஷங்கன் கபடமாகத் தேவியை ஜயிக்கக் கருதி, மேக டம்பர மென்னும் கவசத்தை யணிந்து, யுத்த வாத் யங்களான படஹாதிகளை நிறுத்திவிட்டு, யாதொரு ஶப்தமுமில்லாமல் மிக்க ரஹஸ்யமாக ஆப்தர்களான பரிமித யுத்த வீரர்களை அழைத்துக்கொண்டு அவ்விரவி லேயே புறப்பட்டான். மேற்குத் திக்கை நாடிச்செல்லும் தேவியின் ஸேனையை இவன் எதிர்க்க எண்ணங்கொண்டு, ஶ்வாஸங்கூட விடாமலும், காலடி ஶப்தம் கேளாமலும், மிக ஜாக்ரதையுடன் ரஹஸ்யமாகத் தன் ஸேனையை வடக்கு முகமாக நடத்திச்சென்று ஸ்ரீ லலிதையின் ஸேனையை வளைத்தான். இருட்டில் எவரேனும் வழியில் ஸந்தித்து, யாரென்று கேட்டால், விஷங்கன் தாங்கள் ஶக்தியின் ஸைன்னியர் என ஸூசனை செய்வான். இவ் வாறாக மெதுவாக ஸ்ரீ லலிதா தேவியின் சக்ரராஜ ரதத்தி னருகே வந்து சேர்ந்து, முத்துக்குடையின் கீழ் ஆயிரம் ஸூர்யன்போல் ப்ரகாஶிப்பவளும், தேவியைப் போன்ற காமேஶ்வரீ முதலிய நித்யைகளுடன் ரஸமாகப் பேசுபவ ளும், முன்னே நிற்கும் ஸேனைகளைக் கவனித்துக் கொண் டிருப்பவளுமான ஸாக்ஷாத் ஸ்ரீ லலிதாதேவியை விஷங்கன் கண்டான். அப்போது, தன்னைத் தேவியான வள் கவனிக்கவில்லையென்றெண்ணி, திடீரெனப் பின் புறமாக ஸேனைகளுடன் ஸ்ரீ லலிதையின் ரதத்தைத் தாக்கினான். ஆங்கு, ஒன்பதாவது ஆவரணத்திலுள்ள

அணிமாதி ஶக்திகள் கோலாஹலம் செய்தன. அஸுர ஸேனை பட்டஸம், த்ருகணம், பிண்டிபாலம் முதலிய ஆயுதங்களால் ஶக்தி கணங்களையடித்து நாஶம் செய்த னர். திடீரென்று நேர்ந்த யுத்தத்தாலும், இருளாலும் திகைத்த ஶக்திகள், ஆயுதங்கள் ஒருபுறம், கவசம் ஒரு புறமாகக் கிடக்கின்ற அவைகளைத் தேடி எடுத்துப்போர் செய்வதற்குள் பல ஶக்திகள் சின்ன பின்னமாக்கப்பட் டன. இவர்களது கூக்குரல் ஒவ்வோர் ஆவரணமாகத் தாண்டி கர்ண கர்ணிகையாக ஸ்ரீ லலிதா தேவியின் செவிக் கெட்டிற்று. இதைக்கேட்டு ஸ்ரீ தேவி மிகக் கோபங்கொண்டாள்.

இதற்குள் குடிலாக்ஷன் பத்து அக்ஷோஹிணீ ஸேனை களுடன் முன்புறமாக யுத்தத்திற்கு வந்து, பின்புறம் நடக்கும் யுத்தத்திற்கு ஸஹாயமாக முன்னுள்ள ஸேனை கள் போகாதபடி செய்தான். இருபுறங்களிலும் மிகக் கடும்போர் நிகழ்ந்தது. மாயாபலத்தினாலும், இருளின் உதவியினாலும் விஷங்கன் முதலியவர்கள் ஶக்திகள் மீது அபரிமிதமான பாணங்களை வர்ஷித்தார்கள். விஷங்காதி கள் விட்ட பாணங்களினால் ஸ்ரீ தேவியின் விசிறி ஒன்று முறிந்தது. சக்ரராஜ ரதம் பாணங்களால் மூடப்பட்டது. உடனே ஸ்ரீ லலிதையின் புருவமசைய காமேஶ்வரீ முதலிய நித்யைகள் பரம ஆக்ரஹத்துடன் யுத்த ஸந்நத்தர் களாய்த் தேவியை வணங்கி, "தேவீ! மஹாராக்ஞீ! தண்டிநீ மந்த்ரிணிகளால் நடத்தப்படும் அவர்களுடைய ஸேனைகளைக்கண்டு பயந்த அரக்கர்கள் மாயையால் பின் புறமாக வந்து நம்மைத் தாக்குகின்றனர். வஹ்நிவாஸிநீ, ஜ்வாலாமாலிநீ இருவர்களும் இப்பேரிருளை நீக்கினால் துஷ் டர்கள் இருக்குமிடங்களைக்கண்டு அவர்களின் மதத்தை அடக்கிவிட்டுத் தங்களருகே வந்து விடுகிறோம்" என்ற னர். அவ்வாறே ஸ்ரீ தேவி அனுக்ரஹிக்க, காமேஶ்வரீ நித்யை வில்லை வளைத்து, கோபத்துடன், "துஷ்டர்களே!

நில்லுங்கள்! உங்கள் மாயையை இப்பொழுதே அழிக்கின்றேன்'' என்று அதட்டிக்கொண்டே பர்வாவின் மீதேறினுள். பகமாலினீ முதலியவர்களும் பின் தொடர்ந்தனர். ஜ்வாலாமாலினியும், வந்நிவாஸினியும் இருளை அகற்றி யுத்தகளத்தைப் ப்ரகாமுப் படுத்தினுர்கள். அதனுல் மாயை விலக, தங்களை முக்திகள் கண்டு கொண்டதால் அரக்கர்கள் மிகச் சினங்கொண்டு மிக மும்முரமாகப் போர் புரிந்தனர். கூறிய ஆயுதங்களுடன் கூடிய காமேம்வரீ முதலிய பதினைந்து முக்திகளும் அஸுர ஸேனைகளை ஒரு நொடியில் கலக்கினர். இரு யாமம் வரையில் கடினமாகப் போர் புரிந்து, பல அக்ஷோஹிணீ ஸேனைகளை அழித்தனர். காமேமீ தமநனையும், பகமாலினீ தீர்க்கஜிஹ்வனையும், நித்யக்லிந்நா ஹுமபேகனையும், பேருண்டா ஹுடுமுல்லகனையும், வந்நிவாஸினீ கல்கஸனையும், மஹாவஜ்ரேம்வரீ கல்கிவாஹநனையும், மிவதூதி புல்கஸனையும், த்வரிதா புண்ட்ரகேதுவையும், குலஸுந்தரீ சண்ட பாகுவையும், நித்யா குக்குரனையும், நீலபதாகா ஜம்புகாக்ஷனையும், விஜயா ஜம்பனையும், ஸர்வ மங்களா தீக்ஷணச்ருங்கனையும், ஜ்வாலாமாலினீ த்ரிகண்டகனையும், சித்ரா சந்த்ரகுப்தனையும் உக்ரபாணங்களால் கொன்ருர்கள்.

முக்ய ஸேநாதிபதிகள் அனைவரும் கொல்லப்பட்டதைக் கேட்ட விஷங்கன் கடுஞ்சினங்கொண்டு, இரவின் கடைசி யாமத்தில் இரண்டு முஹூர்த்த காலம் நித்யைகளுடன் போர் செய்தான். இனி தன்னுல் முன்னிற்க முடியாதென்று யோஜித்து காமேம்வரியின் பாணத்தால் நன்ருக அடிபட்டு நொந்து மிகுந்த ஸேனையுடன் ஓடினுன்.

தண்டநாதையினுலேயே அவன் கொல்லத்தக்கவனுதலால் எவரும் அவனைக் கொல்லாமல் விட்டனர். ஓடுபவனைத் துரத்தலாகாதென அவனை எவரும் பின்

தொடரவில்லை. பொழுது விடிந்தது. அஸுரர்களின் ஶஸ்த்ரங்களினுல் அடிபட்டுண்டான காயங்களிலிருந்து பெருகுகின்ற ரக்தம் உடலை நனைத்தது. வாடிய சரீரங்களோடுகூடிய நித்யா தேவிகள் வெற்றியுடனே திரும்பி வந்து லலிதையை வணங்கி நின்றனர். இம்மாதிரி இரவில் மிகக் கடும்போர் செய்த நித்யா தேவிகளை ஸ்ரீ லலிதா தேவி மெச்சி மிகுந்த ஆனந்தத்தை யடைந்தாள்.

இருபத்திரண்டாம் அத்யாயம் முற்றிற்று

---

## இருபத்து மூன்றும் அத்தியாயம் —125 ச்லோகங்கள்.

## வந்நிப்ராகாரம் (அக்நிகோட்டை கட்டுதல்)

**ஹயக்ரீவர்:—** தண்டநாதா தேவியின் பாணவர்ஷத்தால் பத்து அக்ஷௌஹிணீ ஸேனைகளும் அன்றிரவே மடிந்தன. குடிலாக்ஷன் தனியே நிற்க முடியாமல் பயந்தோடினுன். இதைக்கேட்ட பண்டன் மனங்கலங்கினுன். "தண்டநாதையும், மந்த்ரிணியும் முன் புறத்திலிருந்தபோது, விஷங்கன் கபடமாகப் பின்புறம் வந்து விளைவித்த தீங்கைக் கேட்டு, தேவியின் மனம் என்ன நினைத்ததோ! ஆஹா, என்ன கஷ்டம்! மஹாசக்ர ரதத்திற்கு சரியானபடி காவல் வைக்கவில்லை, நாம் தூரத்தில் விலகி இருந்து விட்டோம். இந்த ஸமயம் பாபிகள் அங்குச் சென்றனர். ஸ்ரீ தேவிதான் யுத்தம் செய்தாளோ! வேறெவரேனும் செய்தனரோ! ஆங்கு என்ன நடந்ததோ" என்று பலவாறு ஶங்கித்துக் கொண்டே ஸகல ஶக்திகளும் ஸ்ரீ தேவியின் ரதத்தைச் சூழ்ந்துக் கொண்டனர். தண்டநாதையும் மந்த்ரிணியும் தம்தம் வாஹநத்தை விட்டிறங்கி ஸ்ரீ ரதத்தின் ஒன்பது பர்வாக்களிலும் ஏறி ஆங்குள்ளவர்களால் அறிவிக்கப்பட்டு, ஸ்ரீ லலிதையைக் கண்டு களித்து ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்தனர்.

பிறகு, தண்டநாதையும், மந்த்ரிணியும் ஸ்ரீ தேவியை பார்த்து, "மஹாராக்ஞி! பெருந்தவறு நேர்ந்துவிட்டது. கபடமார்க்கத்தால் நம்முடன் யுத்தம் செய்யலாமெனக் கருதி, அரக்கர்கள் இரவில் நமது ஸேனைகளுக்குப் பெருந் தீங்கிழைத்தனர். தெய்வச்செயலாக ஸ்ரீ தேவியின் மீது சத்ருக்களின் சரங்கள் விழாமல் இருந்தன. தங்களொரு வர் பலத்தைக் கொண்டேதான் நாங்களனைவரும் பிழைத் திருக்கிறோம். மாயாவிகளான அஸுரரிடமிருந்து ஸ்ரீதேவி யின் அங்கத்தைக் காக்க ஒரு உபாயம் தேடவேண்டும். அகாலத்தில் மாயாவிகள் நம் ஸேனையிற் புகுந்து கபட யுத்தம் செய்யாதபடி மஹேந்த்ரமலையின் தென்புறத்தில் நூறுயோஜனை தூரம் விஶாலமான ஒரு சிபிர (கூடார)த் தை நிர்மாணித்து, அதைச்சுற்றி அக்நிகோட்டை அமைக்க வேண்டும். அதற்குத் தென்திசையில் அஸுர நகரம் இருப்பதால் அந்தப்புறத்தில் வாசற்படி அமைத்து, ஆங்குச் சோம்பலில்லாதவர்களும், தூக்கமில்லாதவர் களும், சொற்படிக் கேட்டு நடக்கின்றவர்களுமான பல வில்லாளிகள் காவல் புரியவேண்டும். இல்லையேல் நமது ஸேனையை மாயாவிகள் அழித்துவிடுவார்கள்" என்று கூறினர்.

இதைக் கேட்ட ஸ்ரீ தேவி புன்னகைக்கொண்டு, "ஆஹா! நீங்கள் நன்கு யோஜித்துக் கூறினீர்கள். இதே புத்திசாலித்தனமான நீதி மார்க்கம். ஜயத்தை விரும்பு பவர் சத்ருவிடஞ் செல்வதற்கு முன் தன் ஸேனைகளை நன்கு ரக்ஷித்துக் கொள்ளல் வேண்டும்" என்று கூறி, ஜ்வாலாமாலினியைப் பார்த்து "ஸ்ரீ வத்ஸே! நீ அக்நி ரூபிணியல்லவா? நீ பூமியில் நூறு யோஜனை தூரம் வட்ட மாகவும், ஆகாயத்தில் முப்பது யோஜனை உயரமாகவும் இருந்து, உனது ஜ்வாலையால் ஒரு கோட்டையை அமை. வாயிற்படி ஒரு யோஜனை தூரம் இருக்கட்டும்" என்று உத்தரவிட்டாள். சதுர்த்தசி திதியான

ஜ்வாலாமாலிநீ "அப்படியே" என்று தேவியை வணங்கி, உத்தரவுப்படி ரத்னப்ராகாரம் போல் அக்நிக் கோட்டையை அமைத்தாள்.

இந்த விஶாலமான கோட்டையைக் கண்டு ஸந்தோஷத்துடன் தண்டநாதையும், மந்த்ரிணியும் தத்தம் ஸேனைகளுடன் உள்ளே நுழைந்தனர். சக்ரராஜ ரதத்தை மத்தியில் அமர்த்தி, இடது புறத்தில் தன் தேரையும், தென் புறத்தில் ஶ்யாமளா ரதத்தையும், மேற்கில் ஸம்பத்கரீ ரதத்தையும், எதிரில் ஹயக்ரீவரையும் நிறுத்தினார்கள். வாசற்படியில் இருபது அக்ஷௌஹிணீ ஸேனைகளுடன் ஜ்வலிக்கும் தண்டாயுதத்தைக் கரத்திலேந்திய ஸ்தம்பிநீ என்பவளை வைத்தார்கள். அவள் தண்டநாதையின் விக்ந தேவியென ப்ரஸித்தமானவள். இங்ஙனம் ஸகல ஏற்பாடுகளையும் செய்துவிட்டு ஸூர்யன் நன்கு உதயமான பிறகு யுத்தத்திற்கு ஸன்னத்தமானார்கள்.

## பண்டபுத்ர வதம்.

ஶக்தி ஸேனைகள் மிகுந்த ஆரவாரத்துடன் அக்நி கோட்டையிலிந்து வெளிக்கிளம்பினர். இங்ஙனம் மிக அற்புதமான கோட்டையமைக்கப்பட்டதைக் கேட்ட பண்டனுக்குப் பயம் அதிகமாயிற்று. தன்னிரு ஸஹோதரர்களையும், தன் புத்திரர்களையும், முக்ய ஸேநாதிபதிகளையும் அழைத்து, மந்த்ராலோசனைச் செய்தான். முடிவில் யுத்தம் செய்ய மிக்க ஶக்தியும், ப்ரியமுள்ள தனக்குச் சமமான தனது * முப்பது புதரர்களையும் பண்டன்

---

* சதுர்பாகு, ஸஹோராக்ஷன், சதுச்சிரன், வஜ்ரகோஷன் ஊர்த்வகேசன், மஹாமாயன், மஹாஹனு, மஹாசத்ரு, மஹாஸ்கந்தி, ஸிம்ஹகோஷன், ஸராலகன், அந்தகன், த்ரிநேத்ரன், கூபகன், கூபலோசனன், குஹாக்ஷன், கண்டலன், சண்டவர்மா, யமாந்தகன், லஸ்ஸநன், பண்டஸேனன், ப்ருஜித், பூர்வமாரகன், ஸ்வர்க்கசத்ரு, ஸ்வர்க்கபலன், துர்காக்யன், ஸ்வர்க்ககண்டகன், அதிமாயன். ப்ருஹன்மாயன், உபமாயன்.

அழைத்து, "வீர புத்ரர்களே ! போரில் உங்களுக்கு ஸமமானவர் ஒருவருமில்லே. உங்களது பலத்தைக் கொண்டே இந்த்ரன் முதலிய திக்பாலர்களேயும் நான் ஜயித்தேன். ஸகல அஸ்த்ர, ஶஸ்த்ரங்களேயும் நன்கு உணர்வீர்கள். நீங்கள் விழித்திருக்கும்போது நமது குலத்திற்கு நாஶமேற்படலாமா ? பெண்ணொருத்தி தன்னைப் போன்ற பல பெண்மக்களேயே துணையாகக் கொண்டு நம்மவர்களே அழிக்கிருள். அவளே நீங்கள் உயிருடன் பிடித்து வரவேண்டும். மஹா வீரர்களான உங்களே ஒரு பெண்ணுடன் போருக்கனுப்புவது உசிதமல்ல. ஆயினும் அவளுடன் யுத்தம் செய்ய நேர்ந்தது. இது அபகீர்த்தியை அளிப்பதாயினும், பொறுத்துக்கொண்டு யுத்தத்திற்குச் செல்லுங்கள். இது தெய்வக் கூற்று" என்று கூறி, இருநூறு அக்ஷௌஹிணீ ஸேனேகளுடன் அவர்களே அனுப்பினுன்.

அவ்வமயம் பூமி நடுங்கிற்று. பல அபசகுனங்கள் தோன்றின. உலகெலாம் திகிலடைந்தது. அதை மதியாது செல்லும் அவ்வீரர்கள் மீது வயதான ஸ்திரீகள் பொரியை வாரியிறைத்தனர். வந்திகள் துதிபாடினர். ஒவ்வொரு வீட்டிலும் பெண்கள் ஹாரத்தி சுற்றினர். பூமியைப் பிளப்பவர்கள் போலும், ஆகாயத்தையுலர்த்துபவர்கள் போலும், கடலேக் கலக்குபவர்கள் போலும் இருபது அக்ஷௌஹிணிகளுடன் பண்டனது புத்ரர்கள், "ஶக்தி ஸேனேயை விழுங்கிவிடுவோம்; ஆயுதங்களேப் பொடியாக்கி விடுவோம்; அக்நிக்கோட்டையை அவித்து விடுவோம்; அந்த லலிதையைச் சிறையிலடைப்போம்" என வீராட்டஹாஸம் செய்து கொண்டே கிளம்பினர். அக்நிக் கோட்டையின் அருகேச் சென்று யௌவன கர்வத்தால் மதாந்தர்களாகி ப்ரளயகால இடிபோல் வீர கர்ஜனே செய்தனர்.

இந்த அபூர்வமான த்வனியானது ஶக்திகளது செவிகளைத் துளைத்து மனத்தைக் கலக்கிற்று. எல்லா சக்திகளாலும் பூஜிக்கத் தக்கவளும், ஸ்ரீ லலிதா தேவியின் அருகில் வஸிப்பவளுமான ஸ்ரீபாலாம்பிகை இதைக் கேட்டு மிகவும் சினங்கொண்டாள். அவள் எப்போதும் ஒன்பது வயதுள்ளவள். ஸர்வ வித்யைகளுக்கும் நிதியானவள். சிவந்த நிறமுடையவள். ஸ்ரீ மஹாராக்ஞியின் பாத கமலங்களில் ஸதா வஸிப்பவள். வெளியில் ஸஞ்சரிக்கும் ஸ்ரீதேவியின் ப்ராணனும் அவளே. அவளே நான்காவது நேத்ரம். இப்படிப்பட்ட ஸ்ரீ பாலாதேவி, அவர்களைத் தானே கொல்லக்கருதி, ஸ்ரீ லலிதையைப் பார்த்து, "அம்மா! பண்டபுத்ரர்கள் வந்து அட்டஹாஸம் செய்கின்றார்கள். அவர்களுடன் போர் புரிய நான் மிகவும் அவாக் கொண்டிருக்கிறேன். நான் தங்கள் குமாரியல்லவா! நான் விரும்பும் இவ்விளையாட்டைத் தாங்கள் தடுக்கலாகாது. என்கைகள் துடிக்கின்றன. என் அவாவைப் பூர்த்தி செய்யும் யுத்த க்ரீடையைத் தாங்கள் கண்டு தங்கள் மனம் களிக்கட்டும் என்று விக்ஞாபித்துக் கொண்டாள்.

இதைக் கேட்ட தேவி, "குழந்தாய்! நீ அதி ம்ருதுவான ஶரீரத்தையுடையவள்! ஒன்பது வயதுள்ளவள்; புதியதாகப் போரில் புகுபவள்; நீ எனக்கு ஒரே குமாரி! உன்னை விட்டு ஒரு க்ஷணமேனும் பிரிந்திரேன். நீ பெரும் போருக்கேற்றவளா? இல்லை. தண்டிநீ, மந்த்ரிணீ முதலிய கோடிக்கணக்கான ஶக்திகளிருக்க, நீ ஏன் போக வேண்டும்?" எனத் தடுத்தாள். குழந்தைப் பருவமாதலால் ஸ்ரீபாலாதேவி மறுபடியும் பிடிவாதம் செய்தாள். அவளது த்ருடமான நிச்சயத்தைக் கண்ட தேவி, அவளை இறுகத்தழுவி, தன் கவசங்களிலிருந்து ஒரு கவசத்தையும் ஆயுதங்களிலிருந்து ஆயுதங்களையும் தந்து அனுப்பினாள். ஸ்ரீ பாலாதேவி, ஸ்ரீ லலிதையினுடைய வில் தண்டத்திலிருந்து கிளம்பிய கர்ணீரதம் எனும் பல

ஹம்ஸங்கள் பூட்டிய தேர்மீதமர்ந்து கிளம்பினுள். கின்னரர் பாடினர். ஆவரண தேவதைகள் ஆஶீர்வதித்த னர், சிலர் வணங்கிப் பணிந்தனர். மந்த்ரிணியும், தண்ட நாதையும் பயந்து, "அம்மா! யுத்தஞ்செய்ய நிச்சயித்து விட்டாயோ! அகாலத்தில் தேவியால் நீ அனுப்பப்பட் டாய் நாங்களிருக்கும்போது நீ வருவது உசிதமல்லவே. நீ தேவியின் ஜீவனல்லவா? திரும்பிப்போ; உமக்கு நமஸ் காரம்" என்றனர். இதைக்கேட்டும் சலிக்காத மனதுடன் பாலாம்பிகை போருக்குப் போவதைக் கண்ட இருவரும் ஆஶ்சர்யமடைந்து, அபரிமிதமான ஸேனைகளுடன் அவளை ரக்ஷித்துக்கொண்டு அக்னிக் கோட்டையின் வாசற்படி வழி யாக வெளிக்கிளம்பினர். ஶக்தி ஸேநாதிபதிகள் செய்த அஞ்ஜலிகளையேற்று, அருள்புரிந்தவண்ணமாகப் பாலை யுத்தகளத்தில் நுழைந்தாள். ஆக்ரஹங்கொண்ட அஸுர ஸேனைகள் எண்ணிறந்த ஶரங்களைக் குமாரியின்மீது வர்ஷித்தனர். பாலாதேவியும் சளைக்காமல் அபரிமித மான பாணங்களை வர்ஷித்தாள். ஸுரரும், அஸுரரும் கொண்டாடத் தக்க அந்தச் சிறுமியின் யுத்த சாதுர்யத் தைக் கண்டு பேரானந்தம் பெற்ற பரிவார ஶக்திகள் க்ஷணத்திற்கு க்ஷணம் ஓடி மஹா ராக்ஞியினிடம் விக்ஞா பித்துக் கொண்டிருந்தனர். மந்த்ரிணியும், தண்டநாதை யும் வியந்து போர்புரிவதை விட்டுவிட்டு அவளைக் கவனித்துக் கொண்டிருந்தனர். பாலை யொருத்தியே யாயினும், அவள் ஒவ்வொரு பண்ட புத்ரனெதிரிலும் ஒவ்வொருத்தியாகத் தோன்றி நின்று, சத்ருக்களின் மர்மங்களை அடித்து, அதிவேகமாக யுத்தஞ்செய்யும் சிறப்பானது விண்ணவருக்கு வியப்பைத் தந்தது. ஸாது! ஸாது! என மந்த்ரிணியும், தண்டநாதையும் துதிக்க, இரண்டாம் நாள் யுத்தமனைத்தும் பாலை ஒருத்தி யே போர் புரிந்து ஒப்பற்ற தனது பராக்ரமத்தை உல கிற்குக் காட்டினுள். கோபத்தால் கண்கள் சிவக்க,

அஸுரர்களின் அஸ்த்ரங்களுக்குத் தக்க ப்ரத்யஸ்த்ரங்களை ப்ரயோகித்தாள். அன்றியும் நாராயணாஸ்த்ரத்தால் இருபது அக்ஷோஹிணீ ஸேனைகளை க்ஷணத்தில் பஸ்மமாக்கினாள். இதைக்கண்டு மிகச் சினங்கொண்ட பண்டபுத்ரர் அனைவரும் ஒன்றுகூடி ஏககாலத்தில் பாலாதேவியின் மீது பாய, குமாரியும் ஏககாலத்தில் முப்பது பாணங்களை அவர்களின்மீது விட்டனள். அவைகள் ஒரு நொடியில் முப்பது பண்ட புத்ரர்களின் ஶிரங்களையும் அறுத்து அவர்களை யமலோகமனுப்பின. விரைந்து வந்து மந்த்ரிணியும், தண்டநாதையும் பாலையை இறுகத் தழுவிக் கொண்டாடினார்கள். மற்ற ஶக்திகள் தங்களுக்குண்டான ஆனந்தத்தால் கூத்தாடிக் குதித்து, ஸாது! ஸாது! என ஜய கோஷங்களால் மூவுலகையும் கலக்கினார்கள். இந்த ஆஶ்சர்யத்தை மஹா ராக்ஞியிடம் விக்ஞாபிக்க விரைந்தோடினார்கள். ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கும் தேவியைப் பணிந்து இவ்வத்புதத்தைக் கூறித் திரும்பினர். இதைக்கேட்ட தேவியும் பரம ஸந்தோஷத்தை யடைந்து, ஸ்ரீபாலையை மடிமீதமர்த்தி உச்சி மோந்து தனது கரத்தால் தடவிக் கொடுத்துக் கொண்டாடினாள். ஶக்திக் கூட்டமனைத்தும் குமாரியின் வெற்றியைக் கண்டு வியந்தன.

இருபத்துமூன்றாம் அத்யாயம் முற்றிற்று.

---

## இருபத்திநான்காம் அத்யாயம் — 105 ச்லோகங்கள்.

## பண்டாஸுரன் புலம்பல்.

ஹயக்ரீவர்:— புத்ரர்களிறந்ததைக் கேட்டு, சோகாக்னியால் வாட்டப்பட்ட பண்டாஸுரன் தனது குலமே அழிந்ததெனக் கருதி, "ஹா! என் புத்ரர்களே! குணம் நிறைந்தவர்களே! எனது கண்மணிகளே! எனது குல வ்ருத்திக்காக உதித்தவர்களே! தேவர்களின் கர்வத்தை அழித்தவர்களே! என்னோடு ஒரு வார்த்தை

சொல்லுங்கள் ! மடிமீது அமருங்கள் ! தந்தையைவிட்டுப் போகலாமா ? நீங்களில்லாமல் ராஜ்யமே ஶோபிக்க வில்லையே ! வீடும், ஸபையும் ஶூன்யமாக இருக்கின்றனவே ! ஐயோ ! ஒருவர்கூட மிச்சமில்லாமற் பாபியால் கொல்லப்பட்டீர்களே ! என் குலத்திற்கு அங்குரமான உங்களை எப்படி ஒருத்தியே ஒரே காலத்திற் கொன்ருள் ? இனி நமக்கேது ஸுகம் ? நமது வம்ஶ ஶோபையே அழிந்தது. உங்கள் புன்சிரிப்புள்ள முகங்களை இனி நான் எப்போது காண்பேன் ? எனது ஜன்மாந்தர புண்யத்தால் கிடைத்த உங்களை அந்யாயமாக இழந்துவிட்டேனே ! ஹா ! கொல்லப்பட்டேன் ! பேராபத்தையடைந்தேன் ! மஹா மந்தபாக்யனுனேன் !'' எனப் பலவாறு கதறி, கண்ணீர் சொரிந்து, மூர்ச்சையாகி ஆஸனத்திலிருந்து திடீரெனக் கீழே விழுந்தான்.

விசுக்ரன், விஷங்கன் முதலியவர்கள் அவனை ஆஶ்வாஸப்படுத்தி, ''தேவ ! தாங்கள் ஸர்வ ஸாதாரண மானவர்களைப்போல் இப்படிப் புலம்பலாமோ ? மஹா யுத்தத்திலிறப்பது மஹா வீரர்களது தர்மமன்ருே ? அத்தகைய மரணத்திற்காக வருந்தலாகாது. ஒரு பெண் வந்து நமது வீரர்களைக் கொல்கிருளாளென்பதைப் பற்றித்தான் வருந்தவேண்டும்'' என்று கூற, அவர்களின் சொற்களைக்கேட்டவுடன் புத்ர ஶோகத்தை விட்டு தைத்யேந்த்ரன் காலாக்நிபோல் கோபங்கொண்டான். கண்கள் துடிக்கக் கோபக்கனல் எழும்ப உக்ரமான கத்தியையுதறி, '' இப்பொழுதே இந்தக் கத்தியினுல் அந்தத் துஷ்டையைத் துண்டு துண்டாக வெட்டி எறிந்து மனச் சாந்தியை யடைவேன்'' என்று கூறி, மதோன்மத்தனுய்க் கிளம்பினுன். அருகிலுள்ள அஸுரர்கள் அவனைத் தடுத்து, ''ஸ்வாமின் ! ஒரு ஸ்த்ரீயின் நிமித்தமாகவா தங்களுக்கு இத்தகைய பரபரப்பு ! எங்களைக்கொண்டே இந்தக் கார்யத்தைச் செய்யலாகாதா ? உமது கட்டளையின்

பலத்தைக் கொண்டு ஸமஸ்த உலகையுமழிப்போமே! இந்தப் பெண் எந்தமட்டில்? ஏழ்கடலேயும் உலர்த்தவேண்டுமா? மலேகளே விழுங்கவேண்டுமா? முவ்வுலகையும் தலேகீழாகப் புரட்டவேண்டுமா? தேவர்களே வெட்டவேண்டுமா? ஸ்வர்க்கத்தை பிளக்க வேண்டுமா? திக்பாலர்களேப் பொடியாக்கவேண்டுமா? உத்தரவு கொடுங்கள்!'' எனக் கூறினர்.

### விசுக்ரன் செய்த ஜயவிக்நயந்த்ரம்.

இதைக்கேட்ட பண்டன் மூகஞ்சிவக்க, கண்கள் துடிக்க, "விசுக்ர! நீ மாயையால் மறைந்து சத்ருக்கள் ஜயம்பெருதபடி அவர்களின் கூடாரத்தில் ஒரு விக்ந யந்த்ரத்தை ஸ்தாபனம் செய்வாய்'' என்று உத்ரவிட்டான். "அப்படியே செய்கிறேன்'' என்று விசுக்ரன் கூறிப் புறப்படும்போது ஸூர்யன் அஸ்தமனம் ஆனுன். புருஷனே நாடிப் போகத்தை விரும்பிச் செல்லும் பெண்மணிபோல் ஸூர்யனே ஸந்த்யாதேவி பின் தொடர்ந்தாள்.

விரைவாகச் செல்லும் பானுவின் அங்கஸங்கத்திஞல் எழுந்த கடலின் திவலேகள்போல் ஆகாயத்திலே பல நக்ஷத்திரங்கள் தோன்றின. விசுக்ரனுக்கு உதவி புரிவது போல் மை போன்ற இருள் தோன்றிற்று. அப்போது அவன் மாயா ரதத்திலேறி மறைந்து, மிக விஶாலமான அக்நிக் கோட்டையையும், தக்ஷிண த்வாரத்தில் ஜாக்ரதையாக ஆயுதமேந்தி கவசந்தரித்து, எந்த க்ஷணத்திலும், யுத்த ஸந்நத்தர்களாக நிற்கும் இருபது அக்ஷோஹிணீ ஸேனைகளேயும், அதனருகே நிற்கும் ஸ்தம்பிநீ முதலிய ஶக்திகளேயும் கண்டான். ஆஶ்சர்யங்கொண்டு உள்ளே நுழையமுடியாமல் விசுக்ரன் வெகுநேரம் யோஜித்துக் கோட்டைச் சுவருக்கு வெளியிலிருந்தபடியே விக்நயந்த்ரத்தைச் செய்தான். இரண்டு க்ரோஶம் அகலமும் நீளமுமுள்ள அழகிய சிலா பட்டத்தில் எட்டுத் திக்குகளிலும்

ஶூலத்தை அமர்த்தி, அதில் ஸம்ஹார அக்ஷரத்தை எழுதி, அலஸா, க்ருபணு, தீநா, நித்ரா, தந்த்ரா, ப்ரமீலிகா, க்லீபா, நிரஹங்காரா முதலிய எட்டுத் தேவதைகளையும் ப்ரதிஷ்டை செய்தான்.

பிறகு அதற்குரிய மந்த்ரத்தை ஜபித்து, பூஜை செய்து ஆடு முதலிய பலிகளைத் தந்து, வெளியிலிருந்தபடியே தேவியின் கூடாரத்தில் அந்த யந்த்ரத்தை எறிந்தான். அதனுல் ஶக்திகள் தங்கள் ஆயுதங்களை நழுவ விட்டுத் தீநர்களாகி, "சண்டை போதும்! அரக்கர்களை கொல்வதால் யாது பயன்! ஜயத்தினுல்தான் என்ன பயன்? ஜீவஹிம்ஸை பாபமல்லவா? தேவர்க்கு உதவி புரிவதால் நமக்கென்ன லாபம்? வீண் சண்டை வேண்டாம். யஜமானி யார்? மந்த்ரிணீ யார்? தண்டினி யார்? என்ன வேலைக்காரப் பிழைப்பு? ஒருத்தியை யஜமானியாகக் கொண்டு நாமெல்லோரும் அடையும் பயன்தான் என்ன? சத்ருவை அடித்து நாமும் இறப்பதேன்? சண்டையிலிறந்தால் வீரஸ்வர்க்கமென்பதற்கு ப்ரமாண மென்ன? உத்ஸாஹத்தினுல் பயனென்ன? தூக்கத்திற்கு ஸமமான ஸுகமுண்டோ? சோம்பல் ஒன்றுதான் மனதிற்கு ஓய்வைக் கொடுப்பது. இப்படிப் பட்ட நம்மைக் கண்டு தேவி என்ன செய்ய முடியும்? நாமெல்லோரும் ஒன்று சேர்ந்தால்தானே அவள் ராக்ஞீ. நாம் விலகிவிட்டால் அவளுக்கேது பலம்? பலமில்லையேல் நம்மை எப்படி ஶிக்ஷிப்பாள்?" எனப் பலவாறு கூறிக்கொண்டு ஶக்திகள் சண்டை செய்வதை விட்டு, தூக்கம் கண்ணைச் சொருக அனைவரும் அயர்ந்து விட்டனர்.

இதைக்கண்ட விசுக்ரன் இரண்டாம் நாள் நள்ளிரவில் தன் நகரஞ்சென்று மறுபடியும் முப்பது அக்ஷோஹிணீ ஸேனைகளுடன் ஶக்திகளது கோட்டைக்கருகே வந்து அட்டஹாஸம் செய்தான். இதைக்கேட்டும் எந்த

ஶக்தியும் உறக்கத்தை விட்டு யுத்தத்தில் விருப்பம் கொள்ளவில்லை. மஹாநுபாவைகளான மந்த்ரிணியும், தண்டநாதையும் இந்த விக்நயந்த்ரத்தினுல் பீடிக்கப்படாமலிருந்தனர், " அஹோ மஹா கஷ்டம்! எவர் செயலால் இப்படி நமது ஸேனைகள் அயர்ந்திருக்கின்றன! ஆயுதங்களை நழுவ விட்டுச் சுணங்கி இருக்கின்றனர்! நமதுச் சொற்களை மதிக்க வில்லையே! மஹாராக்ஞியை, பூஜிக்கவில்லையே! அலக்ஷ்யமா யிருக்கின்றனர்களே! என்று யோஜித்து, ஸ்ரீ மஹாராக்ஞியிடம் விக்ஞாபித்துக் கொண்டனர்.

"தேவீ! இது எவர் செயல்? உலகமனைத்தும் பரிபாலிக்கப்படும் தங்களது ஆக்ஞையை எவரும் கேட்கவில்லையே! வெறுப்புள்ளவர்களாய் ஸகல கார்யங்களிலும் ஊக்கமற்றவர்களாய்த் தூக்க மயக்கங்கொண்டு "தண்டினி யார்? மந்த்ரிணி யார்? ராக்ஞிதான் யார்? சண்டை ஏன்? எனப் பல ஆக்ஷேபங்களைச் சொல்கின்றனரே? இச் சமயத்தில் சத்ரு பெருஞ் சேனைகளுடன் வந்திருக்கிறுன்! அவர்களது முழக்கம் வானைப்பிளக்கின்றது! இனி செய்ய வேண்டியதை மஹாராணி செய்யட்டும்" என்று கூறி தண்டநாதை வணங்கி நின்ருள்.

இதைக்கேட்ட ஸ்ரீ லலிதாதேவி ஸ்ரீ காமேஶ்வரர்பால் கடைக்கண் செலுத்தி, பற்கள் அதிகமாகத் தெரியாமல் சிறிது புன்னகை புரிந்தனள். அந்தச் சிரிப்பின் காந்திக் கூட்டத்திலிருந்து யானை முகத்தோடு கூடிய ஒரு தேவர் கிளம்பினுர். அவர் மாதுளை, கதை, கரும்புவில், ஶூலம், ஸுதர்ஶநம், தாமரைப்பூ, பாஶம், நெய்தல்பூ, நெற்கொத்து, தனது தந்தம் முதலியவைகளைத் தம் பத்துக் கரங்களிலேந்தி, துதிக்கையில் ரத்ன கும்பத்துடன், பெருத்த வயிருேடு, சந்த்ரசூடராயும், மதங் கொண்டவராயும், ஸித்த லக்ஷ்மியால் ஆலிங்கனம் செய்துக்கொள்ளப் பட்டவராயுமிருந்து, ஸ்ரீ தேவியைப் பணிந்து நின்ருர்.

## கணேசரது பராக்ரமம்.

ஸ்ரீ தேவியின் ஆஶீர்வாதத்தைப் பெற்ற கணேஶர், விக்ந யந்த்ரத்தை அழிப்பதற்காக அதிவேகத்துடன் கிளம்பி, அக்நிக் கோட்டையினுள்ளே அலைந்து திரிந்து, ஒரு மூலையில் பதிந்து கிடந்த விக்ந யந்த்ரத்தைத் தேடிக் கண்டுபிடித்தார். மிக உக்ரமான தமது தந்தங்களால் அந்த யந்த்ரத்தைத் ஒரு நொடியில் பொடியாக்கி ஆகாயத்திலெறிந்தார். ஆங்குள்ள துஷ்ட தேவதைகளும் அழிந்தனர். உடனே ஶக்தி ஸேனைகள் அனைத்தும் ஆரவாரத்துடன் எழுந்து யுத்தத்திற்குத் தயாரானார்கள். கணேஶரும் தம்மைப்போல் பலரைப் படைத்தார். அவர்கள் அழகிய துதிக்கையை ஆட்டிக் கொண்டு ஸுந்தர வடிவத்துடன் போர்க்களத்திற் தோன்றினர். ரித்தி முதலிய ஶக்திகளால் ஸேவிக்கப்பட்ட ஆமோதர், ப்ரமோதர், ஸுமுகர், துர்முகர், விக்னர், விக்னகர்த்தா என ஆறு ஸேநாதிபதிகள், ஏழுகோடி ஹேரம்பர்களுக்குத் தலைவர்களாய்ப் போர்க் கோலத்துடன் வீராட்டஹாஸஞ் செய்துகொண்டு தீக்கோட்டையிலிருந்து வெளிக்கிளம்பினர். முப்பது அக்ஷௌஹிணியுடன் வந்திருக்கும் விசுக்ரன்மீது பாண வர்ஷங்களை வர்ஷித்தனர். உலகெலாம் செவிடு படும்படி வீறிட்டுக்கொண்டு, தைத்யர் படைமீது கணேஶ கணங்கள் பாய்ந்தன. இக்கணங்களால் தைத்யரின் படையில் பலர் அழிந்தனர். இதைக்கண்டு சினங்கொண்ட விசுக்ரன் வில்லை வளைத்துக் கணேஶருடன் போர் செய்தான். வில்லின் ஶப்தமும், வீரநாதமும், ஶஸ்த்ரங்கள் ஒன்றோடொன்று உராய்வதால் உண்டாகும் த்வனியும், யானை, குதிரை, தேர் முதலியவைகளின் ஶப்தமும், திக்குகளெல்லாம் பரவின. கணநாதரது ரதங்கள் தைத்ய ஸேனையைச் சூழ்ந்து கொண்டன. கணேஶ கணங்கள் ஶத்ருக்களைத் துதிக்கைகளால் வளைத்துப் பிடித்து

கூறிய தந்தங்களால் குத்திக் கொன்றன. புஷ்கலம், ஆவர்த்தகமெனும் மேகக் கூட்டங்கள் போன்ற காதுகளின் காற்றுகளினுலும், மூச்சுக் காற்றினுலும் சத்ருக்களைச் சிதற அடித்தன. மலைபோன்ற மார்பினுலும், தூண்கள் போன்ற கால்களாலும், ஶூலம், சக்ரம் முதலிய ஆயுதங்களாலும் பகைவரைக் கொன்றன. புழுதி மாத்திரம் மிகுந்த தனது ஸேனையைக் கண்டு சினங்கொண்ட விசுக்ரன், கணேஶருடன் போர் புரிய, கஜாஸுரனை ஏவினுன். ஏழு அக்ஷோஹிணீ ஸேனைகளுடன் வரும் கஜாஸுரனேடு கணேஶர் கடும்போர் செய்தார். தனது வலிமை குறைவதையும் உத்ஸாஹத்துடன் போர் செய்யுங் கணேஶருடைய பலம் மேன்மேலும் அதிகரிப்பதையும் கண்ட விசுக்ரன் ரணகளத்தை விட்டோடினுன். மூஷிக வாஹனத்திலமர்ந்த விநாயகர் ஒருவரே கஜமுகாஸுரனை ஏழு அக்ஷோஹிணியுடன் கொன்றழித்தார். எதிரில் எவருமில்லாமையால் உடனே கணபதி தேவியிடஞ் சென்ருர். அஸுரர்களுக்குக் காளராத்திரியான அந்த இரவுங் கழிந்தது. ஸ்ரீ லலிதாதேவி மிக ஸந்தோஷமடைந்து ஸகல தேவதைகளையும் பூஜிப்பதற்கு முன்பு விநாயகருக்கு முதல் பூஜையை நடத்தும்படி வரம் அளித்தனள்.

இருபத்து நான்காம் அத்யாயம் முற்றிற்று.

---

## இருபத்தைந்தாம் அத்யாயம். 121 ச்லோகங்கள்

## விசுக்ர விஷங்க வதம்.

ஹயக்ரீவர் :— பண்டாஸுரன் தனது ஸஹோதரன் முறியடிக்கப்பட்டதைக் கேட்டுச் சிந்தை நொந்து, ஸமஸ்த ஸேனைகளுடன் விசுக்ரன் விஷங்கனெனுமிருவர்களையும் யுத்தத்திற்கு அனுப்பினுன். இருவர்களும் மிக ஆக்ரஹத்துடன் நூற்றுநான்கு அக்ஷோஹிணிகள் புடைசூழ,

வீராட்டஹாஸஞ் செய்துகொண்டு கிளம்பினர். உலூகஜித் முதலிய பத்து மஹா வீரர்கள் அவர்களைப் பின் தொடர்ந்தனர். அவர்கள் பண்டனது ஸஹோதரியான தூமிநீ என்பவளுக்குப் பிறந்து மாமனிடமே அஸ்த்ர ஶஸ்த்ரங்களைப் பயின்றவர்கள். அவர்கள் கோதண்டங்களின் கோஷத்தால் பத்துத் திக்குகளையும் நடுங்கச் செய்து மாமனது ப்ரீதியை ஸம்பாதித்தனர். யுவராஜனுக்குரிய ராஜ பிருதுகள் சூழ, விசுக்ரன் வில்லின் கோஷத்தினுலும், ஸிம்ஹ நாதத்தினுலும், ஶக்திகளுடைய மனதைக் கலக்கினன். மின்னலோவென எண்ணும்படி பளபளவென்று ப்ரகாஶிக்கும் கத்தி முதலிய ஆயுதங்களை ஏந்தி, ஶக்திகள் யுத்தரங்கத்திற்கு வந்து சேர்ந்தனர். ஸ்ரீ லலிதையின் உத்தரவுப்படி, மந்த்ரிணியும், தண்டநாதையும் தங்கள் ரதத்தின்மீதேறி அப்ஸரஸ்ஸுகள் ஆட, விசுக்ர விஷங்கர்களை எதிர்த்து யுத்தஞ்செய்ய வந்தனர். ஸ்ரீ சக்ரராஜ ரதத்தை ரக்ஷிக்க நூறு அக்ஷோஹிணீ ஸேனைகளை வைத்துவிட்டு மற்றெல்லா ஸேனைகளையும் அழைத்துக்கொண்டு தண்டநாதை ஸேனைகளின் முன்நின்று ஒரு கைவிரலில் கலப்பையையும், மற்ருென்ருல் உலக்கையையும் சுற்றிக்கொண்டு இங்குமங்கும் ஸஞ்சரிக்கும் ஸேனைகளைக் கவனித்து யுத்தத்திற்குத் தயாராக நின்ருள். அவளைப் பின் தொடர்ந்து மந்த்ரிணியும் அம்பைக் கரத்திலெடுத்துச் சுழற்றினுள். தேவரிஷிகள் "ஜயம் பெறுக! மேன்மையடைக!" என ஆஶீர்வதித்து ஆனந்தத் தாண்டவமாடினர்.

ரத சக்ரங்களின் ஶப்தம் தைத்யர்களின் மனத்தையும் பூதலத்தையும் பிளந்தது. பல ஶக்திகள் பாடிப் போற்றினர். எண்ணுயிரம் அக்ஷோஹிணீ ஶக்திகள் தேவியைச் சூழ்ந்தனர். அதில் சிலர் பசுமை நிறமுள்ளவர். சிலர் சிவந்தவர். சிலர் கறுத்தவர். சிலர் மரகதப் பச்சை வர்ணமுள்ளவர். சிலர் நிலாப் போன்றவர்.

மந்த்ரிணியைச் சுற்றியும் இதேபோல் திவ்யாபரணம் பூண்டு, மிக உக்ரமான பற்பல ஆயுதங்களைத் தாங்கிப் பல வர்ணமுள்ள ஶக்தி ஸேனைகள் சூழ்ந்தன. ஸ்ரீ மஹாராக்ஞியின் ஆக்ஞா முத்ரா ரூபமான அங்குலீயகம் (மோதிரம்) ஒன்றுதான் அதிகமாக மந்த்ரிணியிடம் காணப்பட்டது. இங்ஙன மிருவரது ஸேனைகளும் கடல் போல் புரண்டு வரும்போது பூமி பாரந்தாளாமல் சிறிது ஊசலாடிற்று. ஶக்தி ஸேனைகளும், சத்ரு ஸேனைகளும் யுத்தத்தில் கிளப்பிய புழுதி ஏழு கடலையும் சேருக்கி விட்டது. குதிரைப்படை குதிரைப் படையுடனும், ரதம் ரதத்துடனும், யானை யானையுடனும், காலாள் காலாளுடனும் கலந்து யுத்தந் துவங்கின. தண்டநாதை விஷங்கனுடனும், ஶ்யாமளா விசுக்ரனுடனும், அஶ்வாரூடை உலூகஜித்துடனும், ஸம்பத்கரீ புருஷேணனுடனும், நகுலீ விஷேணனுடனும், மஹா மாயை குந்திஷேணனுடனும், ஒரு தேவி குரூஷகனுடனும், உன்மத்தபைரவி மலதனுடனும், லகுஶ்யாமா குருசனுடனும், ஸ்வப்நேசீ மங்களனுடனும், வாக்வாதிநீ த்ருக்ஷணனுடனும், சண்டகாளி கோல்லாடனுடனும், ஶக்தி அக்ஷோஹிணீ தைத்ய அக்ஷோஹிணியுடனும் கலந்து கோபத்துடன் கடுமையாகப் போர் செய்தனர்.

விசுக்ரன் தன் ஸேனை பலங்குன்றி வாடுவதையும், ஶக்திகள் உத்ஸாஹத்துடன் யுத்தஞ் செய்வதையுங் கண்டு, ஆக்ரஹத்துடன் வில்லை வளைத்து, தாஹத்தையுண்டு பண்ணும் தர்ஷாஸ்த்ரக்தைப் ப்ரயோகித்தான். காட்டுத் தீப்போல் அது ஶக்திகளை வாட்டிற்று. மூன்றுவது நாள் யுத்தத்தில் ஒரு யாம காலமானபோது தாஹாஸ்த்ர ஜ்வாலையால் உதடு உலர்ந்து, இந்த்ரியங்கள் சோர்ந்து, கரங்களிலுள்ள அஸ்த்ர ஶஸ்த்ரங்களும் கீழே விழுந்து, ஶக்திகளினுடல்கள் அவ்னியிற் சாய்ந்தன.

இங்ஙனம் தோன்றிய மஹாதாபத்தைக் கண்டு மந்த்ரிணி யானவள் தண்டிநியைப் பார்த்து, "இஃதென்ன தெய்வத் தின் விபரீதச்செயல்? தர்ஷாஸ்த்ரத்தால் ஶக்திகள் ஆயுதங் களை விட்டு, உத்ஸாஹமின்றி, போரை மறந்து தவிக்கின்ற னர்களே! வாய் உலர்ந்தால் பேசவும் முடியாமல் வருந்து கின்றனரே! இந்த நிலைமையைக் கேட்டால் தேவி என்ன சொல்வாளோ? இந்தத் துஷ்டைதைத்யர்களது செயலுக்கு என்ன உபாயம்? யோஜனை செய்! பதினாறு அக்ஷோஹிணி ஸேனைகளில் ஒருத்தி கூட இதனால் பீடிக்கப்படாமலில்லையே! இப்படி நாம் தபிக்கும்போது ஸமயம் பார்த்து அஸுரர்கள் பாணத்தால் நம்மவர்களைத் தாக்குகின்றனரே! இதுகாலை நீயும் நானும் கலந்து ஒரு உபாயந்தேட வேண்டும். உனது ரதபர்வாவிலுள்ள மதுஸமுத்ரத்தை ஶக்திகளின் தாஹத்தை அடக்கும்படி கட்டளையிடு. ஸ்வல்பமான ஜலத்தால் இவர்களது தாஹம் அடங்காது. அந்தக் கடலே ஸக்திக் கூட்டத்தை ஸந்தோஷப்படுத்தும், ஆதலால் எல்லோருடைய தாஹத் தையும் அடக்கி, பலத்தையளித்து, ஸமரில் உற்சா கத்தை ஊட்டுவதுமான மதுக்கடலை ஏவுவாயாக" என்று கூற, தண்டநாதை ஸந்தோஷங்கொண்டு அக்கடலை அழைத்துத் தாஹத்தை அடக்கும்படி உத்தரவிட்டாள். மதத்தினால் சிவந்த கண்களுள்ளதும் ஸ்வர்ணத் தாமரை மாலையணிந்ததுமான அந்தக்கடல், சில விடத்தில் ஸூர்ய க்ரணம் போல் சிவப்பாகவும், சிலவிடத்தில் மயில் தோகை யின் வர்ணமாகவும், சிலவிடத்தில் வெண்மையாகவும், யானைத் துதிக்கையளவு மது தாரைகளைக் கோடி கோடி யாக வர்ஷித்தது. புஷ்கலாவர்த்தகம் முதலிய ப்ரளய கால மேகங்களால் பெருக்கப்பட்ட மத்யக்கடல் ஶக்தி ஸேனைகளினிடையே பெருகிற்று. அதன் நறுமணமானது இறந்தவரைப் பிழைப்பிக்கும்; பலமற்றவனைப் பலவா னாகச் செய்யும்.

அபரிமிதமான மத்ய தாரைகளால் தாஹமடங்க, ஶக்திகள் மிக உற்சாகத்துடன் எழுந்தனர். இந்தத் தாரையானது தைத்ய ஸேனையினருகே செல்லாதபடி கதம்ப வநவாஸிநீ எனும் ஶக்தி அழகிய ஒரு கோட்டையை அமைத்தாள். இதைக் கண்டு எல்லோரும் வியந்தனர். யார் யாருக்கு எங்கெந்த வகையான மதுவில் விருப்பமோ அந்தந்த விதமான கௌடீ, பைஷ்டீ மாத்வீ, வல்கி காதம்பரீ, ஹைந்தாலீ, லாங்கலேயா, தாளஜாதம், கல்பவ்ருக்ஷோத்பலா முதலிய பலவகையான மதுக்களை அக்கடல் வர்ஷித்தது. அவைகள் மிக ருசிகரமாயும், நல்ல மணமுள்ளதாயும், மதத்தையும் உத்ஸாஹத்யையும்மளிக்க வல்லதாயும், பல வர்ணமுள்ளதாகவும், சிறிது புளிப்பு, துவர்ப்பு, கசப்பு, தித்திப்பு முதலிய ருசியுள்ளதாயுமிருந்தன. ஐராவதத்தின் துதிக்கைபோல் விழும் அத்தாரைகளை ஒரு முஹூர்த்தகாலம் அண்ணுந்து நின்று ஶக்திகள் பருகினர்.

பின்னர் மதுக்கடல் பழையபடி திவ்ய வடிவமெடுத்துத் தண்டநாதையை வணங்கி, "தேவி! மஹாராக்ஞியின் ஸேனைகளைப் பார்! தாஹமற்றுக் களைப்பு நீங்கிச் சிலர் ஆடுகின்றனர்; சிலர் பாடுகின்றனர்; சிலர் கைகளால் தாளம் போடுகின்றனர்; சிலர் மார்புகுலுங்கச் சிரிக்கின்றனர். ஆநந்தத்தால் ஒருவர் மேலொருவர் விழுகின்றனர். மதத்தால் வஸ்த்ரம் நழுவச் சிலர் தட்டுத்தடுமாறி நடக்கின்றனர். சிலர் தங்களது ஆயுதங்களைச் சுழற்றிக்கொண்டு யுத்த ஸந்நத்தர்களாகின்றனர்" என, இங்ஙனம் குறிப்பிடப்பட்ட ஶக்திகளைப் பார்த்து மிக ஸந்தோஷமடைந்த தண்டிநீ மதுக்கடலைப் பார்த்து, "ஓ மதுக்கடலே! மிக்க ஸந்தோஷமடைந்தேன்! நீ பரம ஸஹாயஞ் செய்தாய்; தேவகார்யத்தை நிர்விக்நமாகச் செய்தாய். அதனாலும், எனது ப்ரஸாதத்தினாலும் வாஜபேயம் முதலிய யாகத்தில் நீ ஸோமபாநம்போல்

அத்யந்த உபயோகமுள்ளவனாய். மந்த்ரத்தினால் பூத்த மான உன்னை யாகத்தில் ஸமஸ்த தேவதைகளும் பருகு வார்கள். யாகங்களில் மந்த்ர பூக்தியை யடைந்த உன்னைப் பருகி ஸித்தி, ரித்தி, பலம், ஸ்வர்க்கம், மோக்ஷம் முதலியவைகளை ஸாதுக்கள் பெறட்டும். மஹேஸ்வரீ, மஹாதேவன், பலதேவர், பார்க்கவர், தத்தாத்ரேயர் முதலிய மஹநீயர்கள் உன்னைப் பருகுவர். யாகத்தில் உன்னை அர்ச்சிப்பவருக்கு நீ ஸர்வஸித்தியை யும் அளிப்பாய்" என்று வரமளித்தாள்.

மறுபடியும் மந்த்ரிணியை விரைவாக யுத்தத்திற்குத் தயார் செய்யும்படி தூண்டினாள். பூக்திகளுக்கும், தைத் யர்களுக்கும் யுத்தம் ஆரம்பமாயிற்று. ஆங்குத் தோன்றிய மஹா அட்டஹாஸமானது எட்டுத்திசைகளிலு முள்ள மலைகளைப்பிளந்தது.

புதிய மதுபானத்தால் மதங்கொண்டு கண்கள் சிவக்க பூக்திகள் சத்ரு ஸேனையின்மீது விளையாட்டாக விழுந்தனர். மதுவினால் சிவந்த பூக்திகளது கண்களும், சத்ருக்களின் ரக்தத்தினால் சிவந்த பூக்திகளது பூஸ்த்ரங் களும் மிக அழகாக விளங்கின. யமதர்மராஜனும் பயந் தோடும்படி அவ்வளவு கடுமையாகப் போர் நிகழ்ந்தது. மதத்தால் தடுமாடும் பாதங்களை உடையவர்களும், சிவந்த கண்களையுடையவர்களும் வீர வாதஞ் செய்யும்போது பொருத்தமில்லாத சொற்களைச் சொல்பவர்களும், ஸந்தோஷத்தால் கதம்ப மொக்குகள் போல் சிலிர்த்த ரோமங்களுடன் கூடிய பூரீரங்களை யுடையவர்களுமான பூக்திகள் யுவராஜனது ஸேனைகளை நாபூஞ்செய்தார்கள். ஓர் அக்ஷோஹிணீ ஸேனையைத் தண்டிநீ ஒருத்தியே கொன்றாள். நூற்றைம்பது அக்ஷோ ஹிணீ ஸைன்யங்களை மந்த்ரிணீதேவி கொன்றாள். மதத் தால் சிவந்த கண்களையுடைய அஸ்வாரூடை முதலிய தேவிகள் நூற்றைம்பது அக்ஷோஹிணீ ஸைன்யங்களை

யமனுக்கு விருந்தினர்களாக அனுப்பினுர்கள். அஸ்வாரூடை மிக்க தீக்ஷ்ணமான அங்குமத்தால் உலூகஜிதனைக் குத்தி யமலோகத்திற்கு அனுப்பினுள். ஸம்பத்கரீ முதலிய ஶக்தி ஸேநாநாயிகைகள் புருஷேணன் முதலிய ஒன்பது பேர்களைக் கொன்ருர்கள். ஸூர்யன் அஸ்தமனமாகும்போது ஸமஸ்த சத்ரு ஸேனைகளும் அழிக்கப்பட்டன. கோபமுள்ள ஶ்யாமளா விசுக்ரனுடன் போர் புரிந்தாள். தேவர்களுமஞ்சும்படி அஸ்த்ரங்களுக்கு ப்ரத்யஸ்த்ரங்களை ப்ரயோகித்து மந்த்ரிணீ பெரும்போர் நிகழ்த்தினுள். மிக உக்ரமான விசுக்ரனது ஆயுதங்களையும், கொடியையும், ஸாரதியையும், வில்லின் நாணையும், தண்டத்தையும் துண்டு துண்டுகளாகக் கண்டித்தாள். அக்னிபோல் ஜ்வலிக்கும் ப்ரம்ஹஸிரஸ் எனும் அஸ்த்ரத்தை விசுக்ரன்மேல் ப்ரயோகிக்க, அதனுல் அவனுடல் அறுக்கப்பட்டு, அவன் பூமியில் விழுந்திறந்தான். மதத்தினுல் கம்பீரமான தண்டநாதை தன் உக்ரமான முஸலாயுதத்தால் அடித்து விஷகங்கனுடன் யுத்தஞ்செய்தாள். அந்தத் துஷ்ட தானவனும் யம தண்டம்போன்ற கதையைத் தூக்கி எல்லோரும் நடுங்கும்படி யுத்தஞ்செய்தான். கதையால் ஒருவருடலை ஒருவர் தாக்கிக்கொண்டும், வீராட்டஹாஸம் செய்தும், இடம் வலமாகச் சுற்றிப் பல வகையாகக் கதைகளைச் சுழற்றிக்கொண்டும், ஒருவரையொருவர் மூர்ச்சையாகும்படி அடித்தும், பலமாகத் தாக்கும்போது யார் ஏமாறுவார் என்று ஸமயம் பார்த்தும், முஸலமும், கதையும் ஒன்ருேடொன்று உராய்வதால் ஆகாயத்தைக் கலக்கித் தண்டநாதையும், தைத்யேமனும் யுத்தஞ்செய்தனர். பாதி இரவு வரையில் யுத்தஞ்செய்து தேவி மிகக் கோபங்கொண்டு விஷங்கனைக் கொல்லக் கருதினுள். உடனே அவன் தலைமீது ஆழப்பதியும்படி கலப்பையை எறிந்து அவனை அதன்மூலமாக இழுத்து முஸலத்தால் ஓங்கி அறைந்தாள். உடனே மஹாஸுரனது தலை சுக்கல் சுக்கலாகி, அவன் உயிரற்றுப் பூமிமீது

விழுந்தான். இத்தகைய பெருங்கார்யத்தைச் செய்துவிட்டு மந்த்ரிணியும், தண்டநாதையும் மற்ற ஶக்திகளுடன் கூட மீதி இரவுப்பொழுதை அங்கேயே கழித்தார்கள். அன்றிரவுப் பொழுதானது பண்டாஸுரனது ஆயுளுடன் கூடவே கழிந்தது. யுத்தத்தால் மிகக் களைப்படைந்த தன் ஸேனையைத் தண்டிநீயும், மந்த்ரிணீயும் தம் கூடாரத்திற்கழைத்துச் சென்றனர்.

இருபத்தைந்தாம் அத்யாயம் முற்றிற்று.

## இருபத்தாரும் அத்யாயம் —174 ச்லோகங்கள்.

## ஸ்ரீலலிதை பண்டாஸுரனுடன் போர்புரிதல்.

அகஸ்த்யர் :— ஹே அஸ்வாநந! மஹா மேதையுள்ளவரே! மந்த்ரிணியின் பலம், தண்டநாதை செய்த விஷங்கனின் வதம் இவற்றை நன்கு வர்ணித்தீர்கள். ரணகளத்தில் ஸ்ரீ தேவியின் பராக்ரமத்தைக் கேட்க விரும்புகிறேன். ஸஹோதரர்கள் இறந்ததைக் கேட்டு பண்டன் என்ன செய்தான்? ரணத்தில் உத்ஸாஹம் எப்படியிருந்தது? எவரோடு அவன் யுத்தஞ்செய்தான்? ஸஹோதரர்களையும், புத்ரர்களையும் பறிகொடுத்த அவ்வஸுரனுக்கு உதவி புரிந்தவர்கள் யாவர்?

ஹயக்ரீவர் :— அறிவிற்சிறந்தவனே! ஸர்வ பாபங்களையுமகற்றுவதும், அணிமாதி ஸித்திகளைத் தருவதும், புண்யமுமான ஸ்ரீ லலிதாதேவியின் சரிதத்தைக் கேள்! விஷுவ அயநாதி புண்யகாலங்களிலும், *பஞ்ச பருவங்களிலும் இதைப் பாராயணம் செய்தால் ஸர்வ பாபங்களையுமகற்றி ஸகல ஸித்திகளையுமளிக்கும்.

ரணத்தில் உத்ஸாஹமுள்ள தனது இரு ஸோதரர்களும் கொல்லப்பட்டதைக் கேட்டு, பண்டாஸுரன் கதறினன். அவிழ்ந்த ஶிகையுடன் மூர்ச்சையாகி மண்மீது

[*மாஸ ஸங்க்ரமணம், அமாவாஸை, பௌர்ணமி, க்ருஷ்ணாஷ்டமி, க்ருஷ்ண சதுர்த்தசி.]

விழுந்தான். வ்யஸனத்தால் வாடி, யாரென்ன சொல்லியும் அவன் மனம் ஶாந்தியடையவில்லை. அவர்களையே நினைத்து, நினைத்துப் பலமுறை வாய்விட்டு கதறி அழுதான். குடிலாக்ஷன் பலவகையாகப் பலமுறை ஸமாதானப் படுத்தினன். அதைக்கேட்டுப் பண்டன் ஶோகத்தை விட்டுக் கோபங் கொண்டு, புருவத்தை நெறிக்க, நெற்றி சுருங்கி மிகக் குரூரமாக மாற, கட்டழல் போல் கண்கள் சிவக்க கருநாகம்போல் பெருமூச்சு, விட்டுக்கொண்டு, அடிக்கடி கத்தியை உதறி உதறி, கோபத்தால் ஹுங்காரஞ் செய்து, உத்பாத மேகம்போல் கர்ஜித்து ஸமஸ்த ஸேனைகட்கும் பதியான குடிலாக்ஷனைப் பார்த்து, "எந்தத் துஷ்டையின் மாயா பலத்தால் யுத்தத்தில் ப்ராதாக்களும், புத்ரர்களும் ஆயிரக்கணக்கான ஸேனாதிபதிகளும் கொல்லப்பட்டார்களோ, அந்த மிக்க துஷ்டையின் கழுத்திலிருந்து வரும் ரக்தத்தால் ஸஹோதரர், புத்ரர் இவர்கள் இறந்ததால் உண்டான ஶோகாக்நியை அவிப்பேன்! ரே குடிலாக்ஷ! நீ போ! ஸேனைகளைத் தயார் செய்!" என்று பண்டன் கூறி, வஜ்ரம் விழுந்தால் கூட அதை லக்ஷ்யம் செய்யாத பெரிய கடினமான கவசத்தை மார்பிலணிந்தான். இரு பாணப் பெட்டிகளைப் பின்புறமணிந்து, கம்பீரமான நாண் கயிற்றினது ஶப்தத்தோடு கூடிய மிகக் கடினமான வில்லை யேந்தி, காலாக்நிபோல் கோபங்கொண்டு தன் நகரத்திலிருந்து கிளம்பினன்.

நான்கு த்வாரங்களிலும் காவலாக வைக்கப் பட்டிருந்த தாளஜங்கன் முதலியவர்களும் எண்ணிறந்த அஸ்த்ர ஸஸ்த்ரங்களுடன் அவனைப் பின்தொடர்ந்தனர். முப்பத்தைந்து ஸேனாதிபதிகளும் கோபங்கொண்ட குடிலாக்ஷனும் நாற்பது ஸேநா வீரர்களும் சேர்ந்துவர, இரண்டாயிரத்து நூற்றெண்பத்தைந்து அக்ஷௌஹிணீ ஸேனைகளும் சத்ருக்களையழிக்க விளையாட்டாக அஸுரனுடன் சென்றன. ஸர்வ ஸேனைகளுடனும் பண்டாஸுரன் ஊரை விட்டு

கிளம்பும்போது ஶூன்யக நகரம் ஶூன்யமாகவே இருந்தது. பெண்கள் மாத்திரமே அங்குதங்கி இருந்தனர். மஹாரதனான தைத்யேந்த்ரன் ஆபிலம் எனும் சிறந்த ரதத்திலமர்ந்தான். அதை ஆயிரம் ஸிம்ஹங்கள் இழுத்துச் சென்றன. அவன் கையில் நிலாப்போல் காந்தியுள்ளதும், காலாக்நிபோல் ப்ரகாஶிப்பதுமான யாதனை எனும் பெயருள்ள கத்தி ஜ்வலித்தது. இங்குமங்கும் ஸேனைகள் நடக்கும்போது உண்டான தூளிகள் ஆகாயத்தில் பறந்து அந்த ஸேனையும் பாரத்தை சுமக்க முடியாமல் பூமியே மேலே கிளம்பி விட்டாளோ என்ற எண்ணத்தை உண்டு பண்ணிற்று. பூமியின் மீது இடம் போதாமல் சிலர் ஆகாய மார்க்கமாய்க் கிளம்பினர்! சிலர் பூமியில் நடப்பவரது தோள் மீது நின்றவண்ணமாய்ச் சென்றனர். திக்குகளிலும், பூமண்டலத்திலும், ஆகாயத்திலும் அந்த ஸைன்யங்கள் அடங்கவில்லை. ஒருவர்மீதொருவர் உராய்ந்துக் கொண்டே மிக சிரமத்துடன் அந்த ஸேனைகள் கிளம்பின. மிக்க நெருக்கமாய் இருந்ததால் சிலர் தேர் சக்ரங்களிலும், சிலர் யானையின் கால்களிலும் அகப்பட்டு விழுந்தனர்.

இப்படி ஸைன்யங்கள் கிளம்பும்போது பேரிடிபோல்ஒரு ஸிம்ஹநாதம் கேட்டது. பண்டாஸுரனது முகத்திலிருந்து கிளம்பினதும், மிகக் கடோரமாயுள்ளதுமான அது ஜகத்தையே பிளந்தது. ஸமுத்ரங்கள் உலர்ந்தன, சந்த்ர ஸூர்யர்கள் பயந்தோடினர். நக்ஷத்ரங்கள் ஆகாயத்திலிருந்து உதிர்ந்தன. பூமி ஊசலாடிற்று. திக்கஜங்கள் திகைத்தன; வானவர் மூர்ச்சித்தனர்; ஶக்திகளது கூடாரமும் திடீரெனப் பயத்தால் வாடிற்று; யானை குதிரைகள் மிக ஶ்ரமபட்டு ப்ராணனை விடாது பிழைத்தன; பயத்தால் நழுவிய ஆயுதங்களை ஶக்திகள் மறுபடியும் கையிலேந்தினர்; அக்நி கோட்டையும் அவிந்து மறுபடியும்

ஜ்வலித்து நின்றது. தைத்யேந்த்ரனது ஸிம்ஹநாதத்தாலும், ஸேநாதிபதிகளது வில் ஶப்தத்திலும், யோதர்களுடைய கூக்குரலாலும் ஜகத்தானது ஶப்தமயமாக இருந்தது. அந்தப் பெரும் ஶப்தத்தினுல் பண்டாஸுரன் தானே வருகிருனென நிச்சயித்து ஸ்ரீலலிதா தேவியும் தானே யுத்தத்திற்குக் கிளம்பினுள். மற்ற ஶக்திகளால் அவனுடன் பெரும்போர் புரிய முடியாதென்றெண்ணி, துஷ்ட பண்டனுடன் சண்டை செய்ய தேவியே ஆரம்பித்தாள்.

ஸ்ரீ சக்ரராஜ ரதமானது கிளம்பிற்று. அது ருக், யஜுஸ், ஸாம, அதர்வ வேதங்களையே சக்ரங்களாக உடையது. தர்ம, அர்த்த, காம மோக்ஷமாகிய நால்வித புருஷார்த்தங்களே அதற்குக் குதிரைகள். ஆனந்தமே அதற்கு த்வஜம். அதில் ஒன்பது பர்வாக்களிருக்கின்றன. அந்தந்த பர்வாக்களிலுமுள்ள ஶக்திகள் மிகப்பெரிய விற்களைக் கைகளிலேந்திப் பதினுயிரக்கணக்கான பரிவாரங்களால் சூழப்பட்டு, அந்த ஸ்ரீ ரதத்தை நான்கு புறங்களிலும் காப்பாற்றி வருகின்றனர். அது பத்து யோஜனை உயரமும், நான்கு யோஜனை அகலமுமுள்ளது. மஹாராக்ஞியின் திவ்யமான சக்ரராஜ ரதேந்த்ரம் மெதுவாகச் சலிக்கும்போது, அதற்கு முன்னே கேய சக்ரமும், பின்னல் கிரிசக்ரமும் சென்றன. மற்ற ஶக்திகள் வாஹனங்களின் மீது அமர்ந்து அதன் பின் சென்றனர். ஸிம்ஹம், ஒட்டை, மனிதன், பாம்பு, ம்ருகம், பக்ஷி, குதிரை, யானை, * பேரண்டம், * ஶரபம், புலி, வாதம்ருகம், ( ஒருவித மான் ) இவைபோன்ற பற்பல வாஹனங்களிலமர்ந்து ஶக்திகள் பண்டாஸுர யுத்தத்தில் ஊக்கமுள்ளவர்களாகக் கிளம்பினுர்கள். ஒரு யோஜனை தூரம் வன்னி ப்ராகார வாசற்படி விஶாலமாக இருந்தாலும், மிகப் பெரிய ஶக்தி ஸேனைகளின் கூட்டத்திற்கு அது போதாததாக இருந்தது. இதைக்கண்ட ஜ்வாலா

---

* * இவ்விரண்டும் இப்போது காணப்படவில்லை, யெனினும் சில ஆலயங்களில் வாஹனமாகவும், பிம்பமாகவும் காணப்படுகின்றன.

மாலிநீ ஶக்தி ஸேனைகள் நெருக்கமில்லாமல் ஸுகமாக வெளிகிளம்பட்டுமென்ற எண்ணத்தால் வாசற்படியை இன்னும் அதிக விஸ்தாரமாகச் செய்தாள். உலக க்ஷேமத்திற்காகவே உதயமான ஶ்ரீஜகன்மாதா அதி உக்ரமான ப்ரதாபத்துடன் அக்நிக்கோட்டை வாசற்படி வழியாகச் கிளம்பினாள். அச்சமயம் தேவ துந்துபிகள் முழங்கின. புஷ்ப வர்ஷங்கள் வர்ஷித்தன. ஶ்ரீ ரதத்தின் மீதுள்ள முத்துக்குடை மிக ப்ரகாஶமாக விளங்கிற்று. ஶ்ரீ தேவியின் ஜயத்தைக் காட்டக்கூடிய பற்பல ஶுப ஶகுனங்கள் ஶக்தி ஸேனையில் காணப்பட்டன. அஸுர ஸேனையிலோ பற்பல அப ஶகுனங்கள் தோன்றின. பிறகு இரண்டு ஸேனைகளுக்கும் மிகப் பயங்கரமான யுத்தம் ஆரம்பமாயிற்று. பாணக்கூட்டத்தால் உலகெலாம் இருள் சூழ்ந்தது. யானைக் கூட்டங்கள் அறுபட, ஆங்கிருந்து ரக்த ஆறு ஓடிற்று. ஶக்திகளது ஶரங்களால் தைத்யர்களுடைய வெண்குடைகள் அறுபட்டுப் பூமியிலே விழுந்தன. ஆகாயமோ, பூமியோ, திக்குகளோ ஒன்றுங் காணப்படவில்லை. எங்கும் ஸேனைகள் கிளப்பிய ஒரே புழுதிதான் காணப்பட்டது.

இரு ஸேனைகளும் கடுமையாகப் போர் புரிந்தபோது இரு கரைகளும் ப்ரவாஹம் புரள ஒரு பெரிய ரக்த நதி ஓடிற்று. தலைகள் அறுபட்டவுடன் பழைய வேகத்தால் தாண்டவமாடும் கபந்தங்களே அந்நதிக்கரைகளில் உள்ள மரங்கள் போலிருந்தன. தைத்யர்களது தலைமயிரோ பாசிபோலிருந்தது. அறுந்து விழுந்த வெண்குடைகளோ வெண்தாமரைப் போலிருந்தன. சக்ரத்தால் அறுபட்ட பெரும் யானைக் கூட்டத்தினது கால்கள் ஆமைகள் போலிருந்தன. ஶக்திகளாலறுக்கப்பட்ட மதகஜங்களது தலைகள் மலைகள்போல் ப்ரகாஶித்தன. காம்பறுந்து வீழ்ந்து கிடக்கும் சாமரங்கள் நுரைபோல் விளங்கின. கத்திகள் கரைகளிலுள்ள மரங்களில் படர்ந்துள்ள

கொடிகள்போல் காணப்பட்டன. தைத்ய வீரர்களது கண்களின் வரிசைகள் முத்துச் சிப்பிகள்போல் தோன்றின.

இங்ஙனம் யமனுக்கும் பயத்தைத் தரும்படியான யுத்தம் நிகழ்ந்தது. நான்காவது தினம் காலை முதல் இரண்டு யாமங்கள் வரையில் இரு ஸேனைகளுக்கும் நடந்த போர் மிகக் கடுமையாகவும் பயங்கரமாகவும் இருந்தது. பின்னர் ஸ்ரீ லலிதா தேவிக்கும், பண்டனுக்கும் யுத்தம் ஆரம்பமாயிற்று. அஸ்த்ரப்ரத்யஸ்த்ரங்களின் உராய்தலால் உண்டான ஶப்தம் திக்குகளெல்லாம் பரவிற்று. வில்லின் நாணோசையாலும்,ஹுங்காரத்தினாலும் ரணகளம் மிகப்பயங்கரமாயிருந்தது. அச்சண்டையில் ஸ்ரீ தேவியின் கரங்கள் எப்போதும் அம்பறாதூணியிலிருந்து பாணத்தை எடுப்பதும் ,வில்லில்தொடுப்பதும், விடுவதுமாகவே காணப்பட்டது. அதிவேகமாகக் கைகள் சுறுசுறுப்பாக அந்தந்த வேலையிலீடுபடும்போது வேறொன்றும் செய்வதாகத் தெரியவில்லை. ஸ்ரீ மஹாராக்ஞியின் பாணமானது, வில்லுடன் சேர்க்கும் போது ஒன்றாகவும், வில்லிலிருந்து கிளம்பும் போது பத்தாகவும், ஆகாயத்தில் செல்லும்போது நூறாகவும், தைத்ய ஸேனையினருகே செல்லும்போது ஆயிரமாகவும், தைத்யரின் அங்கத்தில் தைக்கும்போது கோடியாகவும் பெருகிற்று. பாணங்களால் ரணகளத்தை ஒரே இருளாக்கி, ஆகாயத்தையும் மறைத்து மஹாராக்ஞியானவள அஸுரனது மர்மங்களைப் பிளந்தாள்.

## ஸ்ரீலலிதையும், பண்டனும் திவ்யாஸ்த்ரம் விடுதல்.

பிறகு கோபத்தால் கண்கள் சிவக்க பண்டாஸுரன் லலிதா பரமேஶ்வரியின்மீது பெரும் பாணவர்ஷத்தை வர்ஷித்தான். அன்றியும் அந்ததாமிஸ்ரம் என்னும்

இருளை யுண்டுபண்ணும் மஹாஸ்த்ரத்தை ப்ரயோகித்தான், மஹாதரணீ எனும் ஸூர்யாஸ்த்ரத்தால் மஹேஸ்வரீ அதை அகற்றினுள். பாஷண்டாஸ்த்ரத்தைப் பண்டன் ப்ரயோகிக்க, அதை அகற்ற ஜகதம்பிகை காயத்ரி அஸ்த்ரத்தை நினைத்தாள். ஶக்திகளது கண்களை மறைக்கும் அந்தாஸ்ரத்தைப் பண்டன் ஸ்ருஷ்டித்தான். அம்பிகை சக்ஷுஷ்மதீ எனும் மஹாஸ்த்ரத்தால் அதை அடக்கினுள். ஶக்திநாஶம் எனும் அஸ்த்ரத்தை அப்பெருஞ் சண்டையில் பண்டன் விட்டான். விஶ்வாவஸு என்பவருடைய அஸ்த்ரத்தால் அதன் திமிரை தேவி அகற்றினுள். மிக்க கோபங்கொண்ட பண்டன் மிக உயர்ந்த அந்தகா (யமா)ஸ்த்ரத்தை உண்டுபண்ணினுன். தேவீ மஹாம்ருத்யுஞ்ஜயாஸ்த்ரத்தால் அதன் பலத்தை நாஶஞ்செய்தாள். எல்லா அஸ்த்ரங்களையும் மறக்கும்படி ஸர்வாஸ்த்ர ஸ்ம்ருதிநாஶம் எனும் அஸ்த்ரத்தை பண்டன் ப்ரயோகித்தான். சக்ரேஶியான தேவீ தாரணாஸ்த்ரத்தால் அந்தப் பயத்தை நாஶஞ்செய்தாள், ஶக்திகளுக்குப் பயத்தைத் தரும் பயாஸ்த்ரத்தைப் பண்டன் உண்டுபண்ண, ஜகதம்பிகை அபயத்தை அளிக்கவல்ல ஐந்த்ராஸ்த்ரத்தை விட்டாள். தாநவன் மஹாரோகாஸ்த்ரத்தை ஶக்தி ஸேனை மீது ப்ரயோகித்தான். அதிலிருந்து ராஜயக்ஷ்மா முதலிய ஆயிரக்கணக்கான நோய்கள் உண்டாயின. அவற்றைப்போக்க ஸ்ரீ லலிதா பரமேஶ்வரீ நாமத்ரய மஹாமத்ரமெனும் மிகப்பெரிய அஸ்த்ரத்தை விட்டாள். அதிலிருந்து அச்யுதன், அநந்தன், கோவிந்தன் எனும் மூவர்கள் தோன்றி ஹுங்காரத்தினுல் ஸகல ரோகங்களையும் அழித்துவிட்டு, தேவியை வணங்கி, அவளுத்தரவுப்படி உலகில் தேவீ பக்தர்களது வ்யாதியை அழிப்பதற்காக அவர்கள் தம்மிருப்பிடஞ் சென்றனர்.

பண்டன் ஆயுர்நாஶநம் என்னுமஸ்த்ரத்தை விட்டான். ராக்ஞீ, காலஸங்கர்ஷிணீ ரூபமான ஓர் அஸ்த்ரத்தை

அதற்குப் பதிலாக ப்ரயோகித்தாள். கட்டிலடங்காத மஹாஸுராஸ்த்ரத்தைப் பண்டாஸுரன் ப்ரயோகித்தான்.

அதிலிருந்து மஹத்தான ஶரீரமுள்ள மதுகைடபன், மஹிஷாஸுரன், தூம்ரலோசநன், சண்டமுண்டாதிகள், சிக்ஷுரன், சாமரன், ரக்தபீஜன், ஶும்பன், நிஶும்பன், காலகேயன் முதலிய அஸுரர்களும், தூம்ரன் மற்றும் பற்பல மஹாஸுரர்களும் தோன்றி, க்ரூரமான ஆயுதங்களால் ஶக்தி ஸேனைகளை நாஶம் செய்தனர்.

தைத்யர்களாலடிக்கப்பட்ட ஶக்திகள் ஹா ஹாவென்று கதறிக்கொண்டு " காப்பாற்று! ஶீக்ரம் காப்பாற்று " என லலிதா தேவியைச் சரணமடைந்தனர். பிறகு தேவி மிகக் கோபங்கொண்டு ரோஷத்தால் அட்டஹாஸஞ் செய்தனள். அதன் காரணமாக ஸகல தேவர்களது தேஜஸ்ஸாலும் படைக்கப்பட்ட மிகுந்த யஶஸ்ஸுள்ள துர்க்கை எனும் ஒரு ஶக்தி தோன்றினள். அந்த தேவிக்கு ஶூலத்தை ஶிவனளித்தார். விஷ்ணு சக்ரத்தைத் தந்தார். வருணன் ஶங்கத்தையும், அக்நி ஶக்தியையும் வாயு வில்லையும், அழிவற்ற அம்பறு தூணிகளையும், இந்த்ரன் வஜ்ராயுதத்தையும், ஐராவதம் மணியையும், காலன் மஹாதண்டத்தையும், வருணன் பாஶத்தையும் ப்ரம்ஹா குண்டிகா எனும் பாத்ரத்தையும், குபேரன் சஷகமெனும் பான பாத்ரத்தையும், ம்ருத்யு கத்தி கேடயங்களையும், ஸமுத்ரராஜன் முத்துமாலையையும் தந்தனர். விஶ்வகர்மா அரிய ஆபரணங்களையும் அளித்தான். இவை யாவற்றையும் துர்க்கை அணிந்து கொண்டாள். பிறகு, ஸூர்ய கிரணம்போல் ஒளிபொருந்திய அங்கங்களால் ஸகல ஆயுதங்களையும் ப்ரகாஶப்படுத்திக் கொண்டு, மற்றவர் அளித்த இதர பொருள்களையும் ஏற்றுக்கொண்டு ஸிம்ஹவாஹநத்திலமர்ந்து, நாராயணீ எனும் அத்துர்க்கை யுத்தஞ்செய்தனள். மஹிஷாஸுரன்

முதலிய பல அரக்கர்களை மாய்த்தனள். * சண்டிகா ஸப்தஶதி என்னும் நூலில் எப்படி வர்ணிக்கப் பட்டிருக் கிறதோ அப்படியே மஹிஷன் முதலியவர்களது மதத்தை அடக்கி அற்புதமாக அவள் போர் புரிந்தனள். மிகக் கடினமான அந்தக் கார்யத்தைச் செய்து அவள் ஸ்ரீலலிதா தேவியை நமஸ்கரித்தாள். பின்னர், அந்த பண்டன் மூகாஸ்த்ரமெனும் ஊமையாக்கும் ஒரு பாணத்தைப் படைத்து, ஶக்தி ஸேனைமீது அனுப்பினான். ஜகதம்பிகை யானவள் மஹாவாக்வாதினீ எனும் பாணத்தால் அதை அகற்றினள். பண்டாஸுரன் வித்யாவடிவமான வேதத் தைக் கொள்ளை கொள்ளும் கொடிய அஸுரர்களைப் படைத்தான். மஹாராக்ஞியின் வலது கைப் பெருவிரல் நகத்திலிருந்து தோன்றிய மஹாமத்ஸ்ய வடிவங்கொண்ட ஸ்ரீமந் நாராயணன், வேதத்தை அபகரித்தவர்களான ஸோமகன் முதலியவர்களைக்கொன்று சென்றார். போரில் பண்ட தைத்யன் ஸமுத்ராஸ்த்ரத்தைப் படைத்தான். அதி லிருந்து கிளம்பிய பெரும் ப்ரவாஹத்தில் ஶக்தி ஸேனை கள் மூழ்கிவிட்டன. பின்னர் ஸ்ரீலலிதா தேவி தனது வலது கை ஆள்காட்டி விரலின் நகத்திலிருந்து ஆதிகூர்மத்தைப் படைத்தாள். அது பத்தாயிரம் யோஜனை தூரம் விஶால மான தனது முதுகுஓட்டினால் ஶக்திகளைத்தாங்கி நின்றது. அதனால் ஸந்தோஷமடைந்த ஶக்திகள் ஸமுத்ராஸ்த்ரத்தா லுண்டான பயத்தை விட்டனர். பிறகு பண்டன் ஹிரண் யாக்ஷ மஹாஸ்த்ரத்தை விட்டான். அதிலிருந்து ஆயிரக் கணக்காக கதைகளைக்கொண்டு யுத்தஞ்செய்யும் பல அஸுரர்கள் தோன்றினர்கள். அவர்களால் அடிக்கப் பட்ட ஶக்தி ஸேனைகள் பயத்தால் நடுங்கி, இங்குமங்கும் ஓடி, யுத்தஞ்செய்ய முடியாமல் தவித்தன. அதற்குள் ஸ்ரீலலிதா தேவியின் வலது கை நடுவிரல் நகத்திலிருந்து

* மார்க்கண்டேய புராணத்தில் இதைக் காணலாம்.

கைலாஸம்போல் வெண்மையான மஹாவராஹம் தோன்றிற்று. வஜ்ரம் போன்ற அவ்வராஹத்தால் கோடிக் கணக்கான ஹிரண்யாக்ஷர்கள் நாஶஞ்செய்யப்பட்டு அழிந்தனர்.

பிறகு, பண்டன் அதிக கோபங்கொண்டு புருவத்தை நெறிக்க, அதிலிருந்து கோடிக்கணக்கான ஹிரண்ய கசிபுகள் தோன்றினர்கள். ஜ்வலிக்கும் ஸூர்யனைப் போல் ப்ரகாஶிக்கும் அவர்கள் மிக ப்ரகாஶமுள்ள ஆயுதங்களைக் கரங்களிலேந்தி ஶக்தி ஸேனைகளை நாஶஞ் செய்தார்கள். ப்ரஹ்லாதனையும் பீடித்தார்கள். பரமாநந்த லக்ஷணமான ஶக்திகளின் சந்தோஷமே ப்ரஹ்லாதன் என்னும் சிறுவனாகி, த்ரிபுரையை ஶரணமடைய, தேவிக்குக் கருணையுண்டாயிற்று. அதனால் ஶக்திகளின் ஆநந்தமே உருவெடுத்து வந்த அப்ரஹ்லாதனைக் காப்பாற்றத் தனது வலது கை மோதிரவிரல் நுனியை ஜகதம்பிகை உதறினள். அதிலிருந்து, பிடரியைச் சிலுசிலுத்துக்கொண்டு, மூன்று கண்களும் ஜ்வலிக்க, ஸிம்ஹ முகமும், கழுத்திற்குக் கீழே மனித வடிவமுங் கொண்ட ஸ்ரீ ஜனார்த்தனர் தோன்றினர். அவர், நகங்களையே ஆயுதங்களாகக்கொண்டும். காலருத்ர ரூபமாய், கோரமான அட்டஹாஸம் செய்துகொண்டும், ஆயிரக் கணக்கான கைகளுள்ளவராய், ஸ்ரீ லலிதையின் ஆக்ஞையின்படி பண்டனது புருவத்திலிருந்து தோன்றிய ஸகல ஹிரண்ய கசிபுகளையும், ஒரு க்ஷணத்திற்குள் மிக க்ரூரமாயுள்ள தம் நகங்களால் கிழித்தெறிந்தார். ஸர்வ தேவதைகளையும் நாஶஞ்செய்வதும், மஹா கோரமானதுமான மஹாபலீந்த்ராஸ்த்ரத்தை ஸ்ரீ லலிதையைக் குறி வைத்துப் பண்டன் ப்ரயோகித்தான். அதன் கர்வத்தை அடக்க, ஸ்ரீ காமேஶ்வரியினது வலதுகைச் சுண்டுவிரலின் நகத்திலிருந்து தோன்றிய நூற்றுக்கணக்கான வாமனர்கள் மஹாபலிஷ்டர்களாகவும், உத்ஸாஹத்துடன் பாஶங்களைக் கரங்களிலேந்தி. ஒவ்வொரு க்ஷணத்திலும்

வ்ருத்தியாகியும், அந்த அஸுராஸ்த்ரத்திலிருந்து தோன்றியவர்களைப் பாஶங்களால் கட்டினார்கள். பின்னர், பண்டதைத்யன் ரணகளத்தில் ஹைஹயாஸ்த்ரத்தை யுண்டுபண்ணினான். அதிலிருந்து கார்த்தவீர்யார்ஜுனர்கள் கோடி கோடியாகத் தோன்றினர். பிறகு ஸ்ரீ த்ரிபுரா தேவியின் இடது கைப் பெருவிரலின் நகத்திலிருந்து தோன்றியவரும், கோபத்துடன் கூடியவரும், ஸிம்ஹநாதம் செய்பவருமான பரசுராமர், கடோரமான கோடரியின் நுனியால் அந்த அர்ஜுனக்கூட்டத்தை ஒருநொடியில் நாஶஞ்செய்து அழித்தார். கோபங்கொண்ட பண்டன் ஒரு ஹுங்காரம் செய்தான். அதிலிருந்து சந்த்ரஹாஸமெனும் கத்தியை யுடையவனும், ஆயிரம் அக்ஷௌஹிணீ ராக்ஷஸ ஸேனைகளுடன் கூடியவனும், இருபது கைகளுள்ளவனுமான ராவணனென்னும் ராக்ஷஸன் மிகுந்த கோபத்துடன் தோன்றினான். அவன் இளைய ஸஹோதரனான கும்பகர்ணனுடனும், புத்ரனான மேகநாதனுடனுங்கூடி, ஶக்தி ஸேனைகளை வெகுதூரம் நாஶஞ்செய்தனன். பிறகு, ஸ்ரீ த்ரிபுரா தேவியின் இடதுகை ஆள்காட்டி விரலின் நகத்திலிருந்து லக்ஷ்மணப் பெருமானுடன்கூட ஸ்ரீ கோதண்டராமர் தோன்றினார். தலையில் ஜடையும், இடையில் மரவுரியும், முதுகில் அம்பறுத்தூணிகளும் விளங்க நீலோத்பலம் போன்ற கறுத்த திருமேனியுள்ளவருமான அவர், அடிக்கடி தனுஸ்ஸை உதறிக்கொண்டு ஒரு க்ஷணத்திற்குள் ராக்ஷஸ ஸேனைகள் அனைத்தையும் திவ்யாஸ்த்ரங்களால் நாஸஞ்செய்தார். அன்றியுமவர் ராவணனையும் அவன் தம்பி கும்பகர்ணனையும் கொன்றார். லக்ஷ்மணன் மேகநாதனை வதைத்தான். பண்டன் மஹா பயங்கரமான த்விவிதாஸ்த்ரத்தை ப்ரயோகித்தான். அதிலிருந்து சிவந்த கண்களுள்ள அநேக குரங்குகள் தோன்றின. கோபத்தினால் சிவந்த முகங்களையுடையதும், பலத்தில் ஹநுமானுக்கு ஸமமானதுமான ஒவ்வொன்றும்

க்ரூரமான கீச்சலுடன் ஶக்தி ஸேனையை நாஸஞ்செய்தன. பிறகு ஸ்ரீ லலிதா தேவியின் இடதுகை நடுவிரல் நகத்தி லிருந்து கோபத்தாலும், மதுவினாலும் சிவந்த கண் களுள்ளவரும், கறுப்பு வஸ்த்ரமுடுத்தியவரும், கைலா ஸம் போல் வெண்மை நிறம் வாய்ந்தவருமான பலராமர் தோன்றி, த்விவிதாஸ்த்ரத்திலிருந்து உண்டான ஸமஸ்த வானரங்களையும் நாஶஞ் செய்தார்.

பிறகு, அந்தப்பண்டாஸுரன் பெரிய ராஜாஸுராஸ் த்ரத்தை ப்ரயோகித்தான். அதிலிருந்து, அரசர்போல் ரூபங்கொண்ட ஶிஶுபாலன், தந்தவக்த்ரன், ஸால்வன், காஶீபதி, பௌண்ட்ரவாஸுதேவன், ருக்மீ, ஹம்ஸகடிம் பகர்கள், ஸம்பரன், ப்ரலம்பன், பாணாஸுரன், கம்ஸன், சாணூரமல்லன், முஷ்டிகன், உத்பலஶேகரன், அரிஷ்டன், தேநுகன், கேஶீ, காளீயன், யமளார்ஜுநர்கள், பூதனை, ஶகடன், த்ருணாவர்த்தன் முதலிய பல அரக்கர்கள், அநேக ஸேனைகளுடன் கூடி, ஶஸ்த்ர பாணிகளாகக் கிளம்பினார் கள். அவ்வெல்லோரையும் அழிக்க, ஸ்ரீ வாஸுதேவன் ஸ்ரீ தேவியின் இடது கை மோதிர விரல் நகத்திலிருந்து தோன்றினார். அவர் தம்மை நான்கு *வ்யூஹங்களாகப் பிரித்துக்கொண்டார். வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன் என்ற அந்த நால்வரும் ஆயுதங்களை ஏந்தி, துராசாரமுள்ளவர்களும், ராஜ வேஷத்தால் தமது ராக்ஷஸ ஶரீரத்தை மறைத்துக் கொண்டவராயுமுள்ள அவர்கள் எல்லோரையும் நாஶஞ் செய்தார்கள். அவர்களுமிறந்த பின்னர், கோபங் கொண்ட பண்டாஸுரன் தர்மத்தை யழிக்குபடியான கலி அஸ்த்ரத்தை ப்ரயோகித்தான். அதிலிருந்து ஆந்த்ரர், புண்ட்ரர், மூர்த்திஜர், கிராதர், ஶபரர், ஹூணர், யவநர் முதலிய பாபிகள் தோன்றி, வேதத்தை அழித்து, தர்ம த்ரோஹஞ் செய்து ப்ராணிகளை ஹிம்ஸை செய்தனர்.

---

* ஒருவித பகுதி

வர்ணாஶ்ரமங்களை யழித்து,‡ வர்ணஸாங்கர்யத்தை உண்டு பண்ணிக்கொண்டு அழுக்கடைந்த ஶரீரங்களை யுடையவர்களாய்த் திரிபுரையின் ஶக்திஸேனைகளை மர்த்தனஞ் செய்தனர். பின்னர் தாமரைபோல் மிக அழகாய் ப்ரகாஶிக்கும் ஸ்ரீ லலிதா தேவியின் இடதுகைச் சுண்டு விரல் நகத்திருந்து கல்கி என்ற பெயருடன் ஜநார்த்தநன் அவதரித்தார். மிக ப்ரகாஶமும், அழகுமுள்ளவரான அவர், குதிரை மீதமர்ந்து, ஓர் அட்டஹாஸஞ் செய்தார். இடி விழுந்ததுபோலுள்ள அவருடைய அந்த த்வனியினால் கிராதர் முதலியோர் மூர்ச்சையுற்று இறந்தனர். ஶக்திகளதைக்கண்டு மிக்க ஆனந்தமடைந்தனர்,

இங்ஙனம், தசாவதார நாதர்கள் அரிய கார்யங்களைச் செய்தபிறகு, ஸ்ரீ லலிதாம்பிகையைப் பணிந்து கைகூப்பிக்கொண்டு, நின்றூர்கள். ஸ்ரீ தேவி அவர்களை நோக்கி, "இவ்வாறு ஒவ்வொரு கல்பத்திலும் மத்ஸ்யாதி அவதாரங்களால் தர்மத்தை ரக்ஷியுங்கள்" என்று கூறி அநுமதியளிக்க அனைவரும் வைகுண்டத்திற்குக் கிளம்பினர்.

இவ்விதம் ஸமஸ்த அஶுரர்களும் நாஶஞ்செய்யப்பட்ட பின், மிக்க கடின ஹ்ருதயமுள்ள பண்டன் மஹாமோஹாஸ்த்ரத்தை ப்ரயோகித்தான். அதனால் ஶக்திகள் யாவரும் மூர்ச்சையடைந்தார்கள். உடனே அம்பிகை ஶாம்பவாஸ்த்ரத்தை ப்ரயோகித்து மஹாமோஹாஸ்த்ரத்தை அழித்தனள். அஸ்த்ர ப்ரத்யஸ்த்ர தாரைகளால் இங்ஙனம் பெரிய யுத்தம் நிகழ்ந்துகொண்டிருக்கையில் ஸூர்யன் சிவந்து அஸ்தகிரியை அடைய ஆரம்பித்தான்.

---

‡ ஒரு ஜாதி மற்றொரு ஜாதியிடம் ஸந்ததியுண்டு பண்ணுதல்.

## பண்டாஸுர வதம்.

பிறகு ஸ்ரீ லலிதாம்பிகை நாராயணாஸ்த்ரத்தால் பண்டாஸுரனுடைய எல்லா அக்ஷோஹிணீ ஸேனைகளையும் யுத்தத்தில் அக்நிக்கு இரையாக்கி, சாம்பலையே மிகுதியாகும்படி செய்தனள். அன்றியும், மஹாராக்ஞியானவள் ப்ரளயகாலாக்நிபோல் ஜ்வலிக்கும் பாசுபத அஸ்த்ரத்தால் நாற்பது ஸேநாதிபதிகளையுங் கொன்றுள். தனித்து ஏகாங்கியாய் நிற்பவனும், துஷ்டனும், ஸமஸ்த பந்துக்களையு மிழந்தவனும், கோபத்தால் ஜ்வலிப்பவனும், உலகிற்குத் துன்பத்தையே விளைவிப்பவனும், மஹாபலமுள்ளவனும், அதியுக்ர பராக்ரமம் வாய்ந்தவனுமான பண்டமஹாஸுரனை ஜகன்மாதாவான ஸ்ரீ லலிதா பரமேஸ்வரி ஆயிரம் ஸூர்யர்போல் ப்ரகாசிக்கும் மஹா காமேசவராஸ்த்ரத்தால் கொன்றனள். அந்த அஸ்த்ரத்திலிருந்து கிளம்பிய ஜ்வாலையானது ஸூன்யகமென்னும் அஸுர பட்டணத்தினுள்ளே புகுந்து, ஆங்குள்ள பெண்கள், சிசுக்கள், பசுக்கள், தனம், தான்யமாகியஎல்லாவற்றையும் எரித்து இடத்தைமாத்ரம் மிகுதியாகச் செய்தது, பண்டன் இறந்ததால் மூவுலகும் ஆநந்தத் தாண்டவம் செய்தது. விஜயலக்ஷ்மியுடன் விளங்கும் தேவியை சக்திகள் கண்டு, பேரி, மத்தளம், காஹளம் முதலிய மங்களவாத்யங்களை முழக்கினர். ஸந்தோஷங்கொண்டஅமரர்கள் ஆகாயத்திலிருந்து புஷ்ப வர்ஷத்தை வர்ஷித்தனர். தேவதுந்துபிகள் முழங்கின. தென்றற்காற்று மந்தமாகவும், வாஸனையுடனும் வீசிற்று. திக்குகள் தெளிந்தன. ஆகாயம் நிர்மலமாக விளங்கிற்று. தேவ கந்தர்வ ஸ்த்ரீகள் மங்கள ஹார்த்தி எடுத்தனர். ஊர்வசீ, மேனகை முதலிய அப்ஸரஸ்ஸுகள் நர்த்தனம் செய்தனர். தேவ கந்தர்வ கின்னரர்கள் ஸந்தோஷத்தால் குதித்தனர். ஸ்ரீ மஹாராக்ஞியின் பராக்ரமத்தை நினைத்து நினைத்து, ஸகல சராசரங்களும்,

"இஃதென்ன! இஃதென்ன!" என்று ஆச்சர்யமடைந்து மயிர்க்கூச்சலடைந்தன. தேவலோக நாயகர்களான கந்தர்வர்களும், தும்புருவும், நாரதரும், ஸாக்ஷாத் ஸரஸ்வதீ தேவியும் இனிய கானங்களால் ஜயமங்கள பத்யங்களைப் பாடினார்கள். ஸந்தோஷ மிகுதியால் மலர்ந்த முகங்களுள்ளவர்களும், மயிர்க்கூச்சலையே ஆபரணமாகப் பூண்டவர்களும், அடிக்கடி ஜய ஜயவென்று ஸ்ரீ லலிதாதேவியைத் துதிப்பவர்களும், ஸந்தோஷத்தால் மெய்மறந்தவர்களுமாகி மதோன்மத்தர்களாய் அடிக்கடி கூத்தாடினார்கள். வஸிஷ்டர் முதலிய உத்தமர்களான ஸப்தரிஷிகள் ரிக், யஜுஸ், ஸாம, அதர்வ ரூபமான மந்த்ரங்களாலும், ஹவிஸ்ஸால் அத்யந்த பாவநமான மஹாக்நி ஜ்வாலையைப்போன்ற மஹத்தான ஆசீர்வாதத்தாலும் ஜயஸ்ரீயை வ்ருத்திசெய்தார்கள். அவர்களால் துதிக்கப்பட்ட ஸ்ரீ லலிதை வெட்கத்தால் சிறிது தலை குனிந்து பண்டாஸுர ஜயத்திற்குப்பின் தன்னிருப்பிடஞ் செல்ல ஆரம்பித்தாள். தன் ஸேனையுடன் ஸம்பத்கரீ தேவியும், பரதேவதையின் பாசாயுதத்திலிருந்து தோன்றியவளும், பராக்ரமமுள்ளவளுமான அச்வாரூடையும் தம்ஸேனையோடு அசைகின்ற கொடிகளால் மேக மண்டலத்தைப் பிளப்பவள்போல் முன்னே சென்றாள். மந்த்ரிணியும், தண்டநாதையும் தத்தம் சிறந்த ரதங்களிலமர்ந்து ஸ்ரீ மஹாராக்ஞியின் இருபுறங்களிலும் நெருங்கிச் சென்றார்கள். இங்ஙனம் தேவகார்யத்தைச் செய்துமுடித்து, குற்றமற்ற ரூபமுள்ளவளும், ஸ்ரீ சக்ர ராஜ ரதமண்டலத்திற்கு அலங்கார ஸ்ரீயாயுள்ளவளும், மூவுலகிற்கும் மாதாவாயுமுள்ள ஸ்ரீ காமேஸ்வரீதேவி, ஸகல விபவங்களும் சிறந்து விளங்க விஜயஸ்ரீயுடன் நிறைந்திருந்தனள். யுத்தத்தில் கஷ்டப்பட்டவர்களும், பண்டனது ப்ரபல பாணாக்நியால் அதிக தாபமடைந்தவர்களுமான தனது ஸமஸ்த ஸைன்யங்களையும், ஸூர்யன்

அஸ்தமித்தபின் ஸ்ரீ தேவி ப்ரஸித்தமான ப்ரபாவமுள்ள தனது கூடாரத்திற்கு அழைத்து வந்தாள்.

ஓ தபோமஹிமையுள்ள அகஸ்த்யரே! ஸ்ரீ லலிதையால் செய்யப்பட்ட பண்டாஸுர ஸம்ஹார சரித்ரத்தை எவன் ஒருமுறை படிக்கிறானோ அவனுடைய பாபங்களனைத்துமழியும். அவன் அஷ்டஸித்திகளையுமடைவான். அவனுக்கு முக்தியும் ஸ்வாதீனமாக இருக்கிறது. பவித்ரமானதும், ஸமஸ்த பாபங்களை அகற்றக்கூடியதும், ஸமஸ்த ஸித்திகளை அளிக்க வல்லதுமான இந்த லலிதா பராக்ரமத்தைப் புண்ய தினங்களில் படிக்கின்றவர்கள் உத்தமமான பாக்ய ஸம்ருத்யை அடைகின்றனர்.

இருபத்தாறும் அத்யாயம் முற்றிற்று.

---

## இருபத்தேழாம் அத்யாயம்—105 ச்லோகங்கள்.

## ப்ரம்ஹாதிகள் செய்த ஸ்ரீ லலிதா ஸ்துதி.

அகஸ்த்யர்:— ஹே ஹயக்ரீவ! மஹாப்ராக்ஞ! உத்தமமான கதையைக் கேட்டேன். ஸ்ரீ லலிதா தேவியின் விசேஷமான விக்ரமத்தை வர்ணிக்கும் மிகச்சிறந்த சரிதங்களால் யான் மிக்க ஸந்தோஷமடைந்தேன். மந்த்ரிணீ, தண்டநாதைகளுடைய அபரிமிதமான சக்தியையும் கேட்டு மகிழ்ந்தேன். ஸ்ரீ ஹயாநந, நான்காவது தினமிரவு கழிந்தபின் யுத்தம் முடிந்த பிறகு அம்பிகை யாதுசெய்தனள்? திருவாய் மலர்ந்தருளவேண்டும்.

ஹயக்ரீவர்:— புத்தியிற் சிறந்த கும்பஸம்பவ! பண்டாஸுரனைக் கொன்றபின் அந்த ஜகன்மாதாவினால் என்னகார்யம் செய்யப்பட்டது என்பதைச் சொல்லுகிறேன் கேளும்.

தைத்யாது யுத்தத்தில் பாணத்தினால் பீடிக்கப்பட்ட சக்தி ஸேனைகளனைத்தையும், அம்ருதத்தைப் பெருக்கும்

தனது கருணை கடாக்ஷ வீக்ஷண்யத்தினுல் அடிக்கடி அம்பிகை ஸந்தோஷப்படுத்தினுள். ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியினது கடாக்ஷ அம்ருதத்தாரைகளால் பரமஸந்தோஷமடைந்த ஶக்திகள் யுத்தத்தினுலடைந்த களைப்பை அகற்றிக் கொண்டார்கள். இந்த ஸமயத்தில், பண்டாஸுரனைத் தேவி கொன்றதினுல் ஸந்தோஷமடைந்த ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், இந்த்ரன், திக்பாலர்கள், ஆதித்யர்கள், வஸுக்கள், ருத்ரர்கள். மருத்துக்கள், ஸாத்யர் தேவதைகள், ஸித்தர், கிம்புருஷர், யக்ஷர், நிருருதி முதலிய நிஶாசர்கள், ப்ரஹ்லாதன், முதலிய மஹாதைத்யர்கள், அண்டத்தில் வஸிக்கும் மற்ற எல்லோரும் அங்குவந்து, ஸிம்ஹாஸநத்தில் அமர்ந்துள்ள மஹேஸ்வரியை மிகுந்த பக்தியுடன் ஸ்தோத்ரம் செய்தார்கள்.

ப்ரம்ஹா முதலிய தேவர்கள் ;—

"ஜகத்திற்கெல்லாம் ஏகநாயகியே! த்ரிபுரை என்னும் திருநாமமுள்ளவளே! பண்ட மஹாஸுரனைக் கொன்றவளே! காமேஸ்வரரது இடது பாகத்திற்கு அதிபதியே! உனக்கு நமஸ்காரம்!

நினைத்ததைக் கொடுக்கவல்ல சிந்தாமணியே! சிந்தைக்கு எட்டாதவளே! சிதாகாரமான அலையின் மாலையே! சித்ரமான ஆகாரவடிவமானவளே! சித்ரவர்ணமான உடையைத் தரித்தவளே! விசித்ரமான உலகை ஈன்றவளே! சித்ரா எனும் நித்யா தேவியால் சூழப்பட்டவளே! உனக்கு நமஸ்காரம்!

மோக்ஷத்தையளிப்பவளே! அழகிய சந்த்ரனை ஸிரத்திலணிந்தவளே! அழகிய புன்சிரிப்புள்ளவளே! மோஹத்தை யகற்றுவதில் மிக்க ஸாமர்த்யம் வாய்ந்தவளே! முத்ரேஸ்வரி எனப்படும் மந்த்ரிணீ தேவியால் ராஜ்ய தந்த்ரத்தை நடத்துபவளே! ஸம்க்ஷோபிணீ முதலிய முத்ரைகளில் ப்ரியமுள்ளவளே! உனக்கு நமஸ்காரம்!

க்ரூரமான அஸுரர்களை த்வம்ஸம் செய்யுங் கோமளாங்கியே! கோபம்வந்தபோது காளியின் உருவத்தை ஏற்பவளே! வராஹமுகியால் காக்கப்படும் மஹாஸைன்ய சக்ரமுள்ளவளே! அன்பெலாந்திரண்டு ஒருருவமானவளே! உனக்கு நமஸ்காரம்!

[1] ஷடங்கதேவி பரிவாரங்களால் ரக்ஷிக்கப்படுபவளே! ஆறு [2]அங்கங்களுடன் கூடிய வேத வாக்யங்களால் தேடத்தக்கவளே! ஆறு [3]சக்ரங்களில் வஸிப்பவளே! [4]ஆறுவிதமான வ்யஸனங்களை அகற்றுபவளே! [5]ஆறு விகாரங்களின் வடிவமானவளே! ஸ்ரீ லலிதையே! உனக்கு நமஸ்காரம்!

காமேஶ்வரீ முதலிய ஸமஸ்தமான நித்யாதேவிகள் வடிவான அழகிய ஆஸநத்தில் அமர்ந்தவளே! தாமரை இதழ்களைப்போன்ற நேத்ரங்களை உடையவளே! ஸர்வ காமனைகளையும் பூர்த்தி செய்பவளே! காமேஶ்வரரால் விரும்பப்படுபவளே! ஸகல கலைகளுக்கும் நாயகியே! உனக்கு நமஸ்காரம்!

---

1. ஹ்ருதயதேவி, சிரோதேவி, சிகாதேவி, கவசதேவி, நேத்ரதேவி, அஸ்த்ரதேவி.

2. சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்ப ஸூத்ரம்.

3. மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுக்தி, ஆக்ஞை.

4. பசி, தாகம், சோகம், மோஹம், ஜரை (கிழத்தனம்), மரணம்.

5. பிறத்தல், இருத்தல், வளர்த்தல், திரிதல், குறைதல், வசித்தல்.

திவ்ய, ஸித்த, மானவ ஓக (கூட்ட்) மென்னும் குருமண்டல ஸ்வரூபமாயுள்ளவளே! ஸ்வயம் ப்ரகாஶ வடிவமானவளே! ஆயிரம் ஸூர்யர்களைப்போல் ப்ரகாஶ முள்ளவளே!

மிக ப்ரகாஶமானவளே! தயையுடன் கூடியவளே! தேவர்களுக்கு ஆதி தேவனான மஹாதேவன் மனைவியே! உனக்கு நமஸ்காரம்!

எப்போதும் அணிமா முதலிய அஷ்ட ஸித்திகளால் ஸேவிக்கத்தக்கவளே! ஸதாஶிவ ஸ்வரூபமாய் ப்ரகாஶிக்கும் மஞ்சத்தில் விளங்குபவளே! அழகானவளே! ஸத்துக்களால் பூஜிக்கப்பட்ட ஒப்புமுயர்வுமற்ற பாதங்களை யுடையவளே! உலகைப் படைத்தவளே! உனக்கு நமஸ்காரம்.

ப்ராம்ஹீ முதலிய மாத்ரு கணங்களால் ஸேவிக்கப்படுபவளே! ப்ரம்ஹனுக்கு ப்ரியமானவளே! ப்ராம்ஹணியே! பந்தத்தை அறுப்பவளே! ப்ரம்ஹாநந்தஸரஸின் ராஜஹம்ஸமே! ப்ரம்ஹேஶ்வரீ எனப்படும் ஸ்ரீ லலிதா தேவியே! உனக்கு நமஸ்காரம்!

ஸம்க்ஷோபிணீ முதலிய ஸமஸ்த முத்ரா தேவிகளாலும் ஸேவிக்கப்படுபவளே! ஸம்ஸார துக்கத்தை அகற்றுபவளே! ஸம்ஸார லீலையைச் செய்பவளே! தாமரை இதழ்களைப்போன்ற நேத்ரங்களையுடையவளே! ஆதிநாதையே! ஸ்ரீ லலிதே! ஸதா உனக்கு நமஸ்காரம்!

காமாகர்ஷிணீ முதலிய பதினாறு நித்யாகலாதேவிகளால் ஸேவிக்கப்படுபவளே! அழிவற்றவளே! தங்குதடையின்றி ப்ரவஹிக்கும் கருணை ப்ரபஞ்சமே! கறுத்த முன்மயிருள்ளவளே! உனக்கு நமஸ்காரம்!

மதங்கொண்ட அநங்ககுஸுமா முதலிய அநங்க தேவதைகளால் எப்போதும் ஸேவிக்கப்படுபவளே!

அமங்கலத்தைத் தொலைப்பவளே! மாத்ருகா ஸ்வரூப மானவளே! சத்ரு வர்க்கத்தை அழிப்பவளே லலிதே! உனக்கு நமஸ்காரம்.

ஸம்க்ஷோபிணீ முதலிய பதினன்கு கிரணங்கள் வடிவ மான ஶக்திக்கூட்டத்தினல் சூழப்பட்ட, உதாரமாய் ப்ரகாஶிக்கும் உடலைப் பரிப்பவளே! விளையாட்டு நிறைந்தவளே! ஶுப்ரமான எண்ணமுள்ளவளே! ஶுத்தமான பாதமுள்ளவளே! உனக்கு நமஸ்காரம்.

ஸர்வஸித்திப்ரதை முதலிய ஶக்திக் கூட்டத்தை உடையவளே! ஸர்வக்ஞரால் அறியப்படும் பாதார விந்தமுள்ளவளே! எல்லாவற்றிற்கும் அதிகமான வளே! எங்குமிருப்பவளே! எல்லாஸித்திகளையும் அளிப்பவளே! ஸ்ரீ லலிதே! உனக்கு நமஸ்காம்.

ஸர்வக்ஞதா ஶக்தி முதலிய மற்ற (பத்து) தேவி களாலும் ஆஶ்ரயிக்கப்பட்ட சக்ர பூமியை யுடையவளே! ஸமஸ்த தேவர்களது விருப்பத்தையும் பூர்த்திசெய்ப வளே! எல்லா உலகிற்கும் தாயே! என்னை ரக்ஷிப்பாயாக.

நமஸ்கரிக்கத் தக்கவளே! வசினீ முதலிய வாக் விபூதிகளை வ்ருத்திசெய்யும் சக்ரகாந்தியை வஹிப்ப வளே! மேகம்போல் கறுத்த முன்மயிர் உள்ளவளே! வாக்கின் கடலே! வரமளிப்பவளே! ஸுந்தரீ! உலகை ரக்ஷிப்பாயாக.

பண்டாஸுரனது ஸேனையாகிய காட்டிற்குக் காட் டுத் தீப்போன்ற பாணம் முதலிய ஆயுதேந்த்ரங்களால் பாதுகாக்கப்பட்டவளே! புதிய தேஜஸ்ஸால் கடலை ஜ்வலிக்கும்படி செய்பவளே! நாற்புறமும் உனக்கு நமஸ்காரம்.

காமேஶ்வரீ, வஜ்ரேஶ்வரீ, பகமாலினீ யென்னும் மூன்று வடிவமாயுள்ளவளே! திறமையுள்ளவளே!

கலாவடிவமானவளே! அழிப்பதில் ஸாமர்த்யமுள்ள வளே! தைத்ய ஸேனைகளைப் பேர் மாத்ரமிருக்கும்படி அழித்தவளே! காமேஶ்வரன் மனைவியே! கமலையே! உனக்கு நமஸ்காரம்.

பிந்துவிலிருப்பவளே! பிந்து கலைகளின் ஐக்ய வடிவ மானவளே! ப்ரம்ஹஸ்வரூபியே! சித் ப்ரகாஶத்தைப் பெருக்குபவளே! பெரிய ஸ்தநங்களிடையே ஒளிக்கும் ஹாரமுடையவளே! பெரிய ப்ரபாவமுள்ளவளே! வரதே! உனக்கு நமஸ்காரம்.

காமேஶ்வரனது மடியின்மீது ஸதா வஸிப்பவளே! காலவடிவமானவளே! தயை நிறைந்தவளே! கல்பம் முடியும் போது காளியின் ரூபத்தை எடுப்பவளே! ாமத்தை அளிப்பவளே! கற்பக வல்லியே! உனக்கு நமஸ்காரம்.

எங்கும் சிவந்த நிறமுடையவளே! கனமான அம்ரு தம்போல் ஶீதளமாயிருப்பவளே! குட்டி மானின் கண் களைப் போன்ற கண்களையுடையவளே! தாமரைபோன்ற முகமுள்ளவளே! ஸாரமான ஒவ்வொன்றுக்கும் இருப் பிடமானவளே! ஸமஸ்த வித்யைகளுக்கும் ஈஸ்வரியே! உனக்கு நமஸ்காரம்.

சிதக்னியிலிருந்து தோன்றியவளும், ஸ்ரீ ஸம்புநாத ரால் ப்ரகாஶப்படுத்தப்பட்டவளுமான உனது ப்ரபாவத் தினால் லோக கண்டர்களாயும் உக்ர வீர்யமுள்ளவர்களா யுமுள்ள பண்டாஸுரன் முதலியவர்கள் போரில் கொல்லப்பட்டனர். வித்வான்களால் அடையத்தக்க ஸுந்தரமான தேவியே! உனது பரிபூர்ண கர்ணாம்ருதத் தால் நனைக்கப்பட்டுப் புதிய உடல்களைப் பெற்றோம். உன்னால் ஸமஸ்த புவனங்களும் ஸந்தோஷத்துடன் பிழைப்பிக்கப்பட்டன. உயர் மனமுள்ளவளே! ஸ்ரீ ஶம்புநாதருடைய தேஜஸ்ஸால் 2-வது வடிவமாகக்

கிளம்பிய பரமசிவன், ஸ்தாணு ஆஸ்ரமத்தில் ஸதீ தேவி யினது பிரிவால் வைராக்யங்கொண்டு போகங்களைத் துறந்து தவம் செய்கிறார். மலையின் வம்சத்திலே பர்வத ராஜ குமாரியாகத் தோன்றிய உமை எனும் கன்யகை யுடன் அச்சிவனைச் சேர்க்க முயன்றோம். அதன் பொருட்டு நாங்கள், மிகக் கடுமையாகத் தவம் புரியும் சிவனிடம் மன்மதனை அனுப்பினோம். தமது வைராக்ய திற்கும், தவத்திற்கும் விக்நம் நேரிட்டதால் கோபங் கொண்டு ருத்ரன் தமது நெற்றிக் கண்ணின் தீயினால் மன்மதனைச் சாம்பலாக்கினார். அந்தச் சாம்பலிலிருந்து தோன்றியவனல்லவா இந்தப் பண்டாஸுரன்! பிறகு தாங்கள் சண்டையில் மதங்கொண்ட அந்தப் பாபியைக் கொன்றீர்கள். எங்களுக்காகத் தனது உடலை நீத்த மன்மதனைத் தாங்கள் விரைவில் எழுப்பவேண்டும். பர்த்தாவின் பிரிவினால் பரிதவிக்கும் இந்த ரதீதேவி பொறுக்கமுடியாத வைதவ்ய துக்கத்தை அடைந்திருக் கிறாள். ஓ லலிதே! தாங்கள் மன்மதனை எழுப்பினால் அவனது சேர்க்கையால் ரதி புருஷனோடு கூடியவளாவாள்; அன்றியும் தங்களால் எழுப்பப்பட்ட காமனால் முன்போல் மோஹமடைந்த சந்த்ரமௌளீஸ்வரன் வெகு காலமாய் அவரை அர்ச்சித்துவரும் உமையவளைச் சீக்கிர மாய் மணப்பார். அவ்விருவர்களிடமிருந்தும் ஜனிக்கும் குமாரன் ஸமஸ்த தேவஸேனைகளுக்கும் நாயகனாக ஆவார். அவராலேயே அஸுரத் தலைவனான தாரகன் எனுமரக்கன் கொல்லத்தக்கவன். கெட்ட எண்ணமுள்ள அந்தப்பண்டனுக்கு நண்பனாய் மூன்று லோகங்களுக்கும் தூமகேதுவாயுள்ள அந்தத் தாரகன் நீலகண்டனது புத்ர னால் கொல்லப்பட்டால்தான் எங்கள் உயிர் நிலைத்து நிற்கும். ஆதலால் அன்னையே! “ஹே த்ரிபுரையே! நீ ஜனங்களுக்கு ஆநந்தத்தை யளிக்கும் வீரரில் சிறந்த

மன்மதனைப் பிழைப்பித்து, தலைவிரித்துக் கதறும் ரதியினது வைதவ்ய துக்கத்தை அகற்றுவாயாக. இவள் அநாதை. உன்னையே ஶரண்புகுந்தவள். பர்த்தாவை இழந்ததால் இளைத்த ஶரீரமுள்ளவள். ஹே த்ரிபுராதிநாதே! அந்த ரதி உம்மை நமஸ்கரிக்கின்ருள். அவளிடம் நீ உனது கருணையின் லவலேசத்தை வைப்பாயாக!''

ஹயக்ரீவர் :— ப்ரம்ஹா முதலிய தேவோத்தமர்கள் இங்ஙனம் மஹேஸ்வரியைத் துதித்து ஶோகத்தாலும், துக்கத்தாலும் தவித்து வாடியவளாயுள்ள ரதியைத் தேவிக்குக் காண்பித்தனர்.

## மறுபடி மன்மதன் தோன்றல்.

வைதவ்யத்தினுல் ஸகல ஆபரணங்களையும் களைந்து கண்ணீர் பெருக, முன்மயிர் புரள, தூளியால் அழுக்கடைந்த ரதி, ஜகதம்பிகையை நமஸ்கரித்தாள். அவளைப் பார்த்தமாத்ரத்திலுலேயே கருணை ததும்பியவளும், குற்றமற்றவளுமான பரமேஶ்வரீ தனது காந்தனுன காமேஶ்வரனைக் கடைக்கண்ணுல் பார்த்தனள். அந்தக் கடாக்ஷத்திலிருந்து மலர்ந்த முகாரவிந்தமுள்ளவனும், முன்னிருந்த ஶரீரத்தைவிடப் பன்மடங்கு அதிக அழகுள்ளவனும், மதமுள்ளவனும், இருகரங்களுள்ளவனும், ஸர்வாபரணங்களையுமணிந்தவனும், புஷ்ப பாணங்களையும் கரும்புவில்லையுங் கொண்டவனுமான மன்மதன் உண்டானுன். முற்பிறவியிலும் மனைவியான ரதியைக் கடாக்ஷத்தினுல் ஆநந்தப்படுத்தினுள். பேராநந்தக் கடலில் முழுகிய ரதீதேவி தன் கணவனை வணங்கி ஸந்தோஷமடைந்தனள். கந்தர்ப்பனெனும் அந்த வீரனும் பக்தி நிறைந்த மனமுள்ளவனுய் மஹேஶ்வரியை நமஸ்கரித்து கீழ்வரும் இந்த வாக்யத்தை விக்ஞாபநம் செய்துகொண்டான்—

ஹே லலிதாம்பிகே! ஈஶ்வரனது நேத்ரத்தால் பஸ்மம் செய்யப்பட்ட எனது இந்த உடலானது உமது கடாக்ஷ ப்ரஸாதத்தினுல் மறுபடியும் உற்பத்தியாயிற்று; ஆதலால் யான் உமது புத்ரனே: உமது தாஸன் யான்: உமக்கு ஏதேனும் ஒரு கைங்கர்யம் செய்ய எனக்கு உத்தரவு அளிக்கவேண்டும். இங்ஙனம் வேண்டப்பட்ட பரமேஶ்வரீ மகரத்வஜனுன மன்மதனைப் பார்த்துக் கூறினுள்.

ஸ்ரீ தேவி:—மனோவ்யாபாரத்தால் பிறந்த குழந்தையே! நீ செல்வாயாக. உனக்கு இனி பயங்கிடையாது. எனதருளால் ஸகல ஜகத்தையும் மோஹமடையும்படிச் செய்; உனது பாணம் எங்கும் தடைபடாது; உன் பாணம் வீழ்ந்ததால் தைர்யத்தை இழந்த ஈஶ்வரன் விரைவில் பர்வத குமாரியான கௌரியை மணப்பார். என தருளால் ஆயிரங்கோடி காமர்கள் உன்னிடம் தோன்றி எல்லோருடைய உடல்களிலும் புகுந்து உத்தமமான ரதியை யளிப்பார்கள். வைராக்யத்தால் பரமகோபங் கொண்டவராயினும் ஈஶ்வரன், மற்றொரு முறை உனது உடலை எரிக்க ஸாமர்த்யமற்றவராவார். அது மாத்ர மல்ல; பயந்தவராய் உனது பாணத்தாலிழுக்கப்பட்ட மனமுள்ளவராகித் தமது மனைவியின் விரஹம் வந்து விடுமோ என்ற அச்சத்தால் தம்முடலிற் பாதியைக் கௌரிக்கு அளிப்பார். ஓ கந்தர்ப்பனே! இன்று முதல் எனது மஹா ப்ரஸாதத்தினுல் ஸகல ப்ராணிகளுக்கும் கண்ணில் தோன்ருமலிருந்தே மோஹத்தை உண்டு பண்ணுவாய். உன்னை நிந்திப்பவர்களும், உன்னிடத்தில் வெறுப்பான எண்ணமுள்ளவர்களும் ஒவ்வோர் பிறவியிலும் நபும்ஸகராகப் பிறப்பார்கள் என்பது நிச்சயம். பாபிகளும், துராத்மாக்களும் எனது பக்தர்களுக்கு த்ரோஹம் செய்பவர்களுமான மனிதர்களைச் சேரத்தகாத பெண்களிடம் தள்ளி நாஶஞ்செய். எவர் மனம் நமது

பூஜையிலும், நமது பக்தர்களிடமும் ஆதரவுள்ளதாயிருக்கிறதோ அவர்கள் விரும்பும் ஸகல காமஸுகங்களையுமளிப்பாய்.

இங்ஙனம் ஸ்ரீ லலிதாதேவி ஆக்ஞையிட மன்மதன் அஞ்சலி செய்து, "அப்படியே" என்று அதை ஶிரஸால் வஹித்துப் பணிந்து சென்றான். அந்த அநங்கனது ஸகலமான மயிர்கால்களிலிருந்தும் அனேக மன்மதர்கள் தோன்றினர். அவர்கள், எல்லோரையும் மோஹிக்கும்படி செய்யத் தக்க அழகு வாய்ந்தவர்கள். மன்மதன் அவர்களைக்கொண்டு, ஸமஸ்த ஜகத்தையும் மயக்கிச் சந்த்ரமௌளீஶ்வரனையும் ஜயிக்கவேண்டுமென்ற ஆசையால் மறுபடியும் ஸ்தாணு ஆஸ்ரமத்திற்குச் சென்றான். நண்பனான வஸந்தனும், ஸேநாதிபதியான சந்த்ரனும், விதூஷகனுயுமுள்ள ராகனு (ஆசையு)ம், மந்தமாருதமெனும் மஹாரதமும், கோகிலத்தின் அழகிய கானமெனும் காஹளீ வாத்யமும் காமனைப் பின்பற்றிச் சென்றன. ஶ்ருங்கார வீர்யத்துடன் கூடியவனும், ரதியால் ஆலிங்கனம்செய்து கொள்ளப்பட்டவனுமான அவன் ஜைத்ரமெனும் வில்லை உதறி வீராக்ரேஸரனாய்த் தபோ நிஷ்டராயுள்ள சந்த்ரமௌளியைத் தன் பாணங்களால் அடித்தான்.

மன்மத பாணங்களாலடிக்கப்பட்ட அந்த சந்த்ர ஶேகரன் வைராக்யத்தைக் கைவிட்டார்: கடுந்தவத்தையும் விட்டார். ஸகல நியமங்களையும் விட்டார். அவரது தைர்யமுமழிந்தது. அந்தப் பார்வதியையே த்யானம் செய்துகொண்டு மேன்மேலும் மன்மதனால் பீடிக்கப்பட்டார். பெருமூச்சு விட்டார். விரஹத்தால் அவரது கன்னங்கள் வெளுத்தன. தைர்யமிழந்ததால் விரஹ தாபம் பொறுக்காது கண்ணீர் சொரிந்தார். முன் கண்ட கௌரியை அடிக்கடி நினைத்தார். மன்மத ஶராக்நியால்

தஹிக்கப்பட்ட ஶூலபாணியினது தேஹதாபத்தைச் சந்த்ர க்ரணங்களும், கங்கையும் போக்கடிக்கவில்லை. நந்தி, பிருங்கி, மஹாகாலர் முதலிய கணங்கள் கொண்டு வந்த புஷ்ப ஶயநத்தில் படுத்து அடிக்கடி புரண்டார். நந்தியின் கையைப் பிடித்துக்கொண்டு ஒரு புஷ்ப ஶயநத்திலிருந்து மற்றொரு புஷ்ப ஶயநஞ்சென்று படுத்துப் புரண்டார். அவர் உடலிலுண்டான மன்மத ஜ்வரம் புஷ்ப ஶயநத்தினாலோ, சந்த்ரனிடமிருந்து பெருகிய அம்ருதத்தினாலோ, பனிஜலத்தினாலோ நீங்கவில்லை; அவர் உடலிலுண்டான அதிக தாப ஜ்வாலையை அகற்றுவதற்காகக் கல்போல் உறைந்து கிடக்கும் பனிக்கட்டிகள் மீதமர்ந்தார். அடிக்கடி பார்வதியின் உருவத்தைச் சித்ரப் படத்தில் நகங்களால் எழுதினார். அதைப் பார்த்தவுடன் முன்னிலும் பன்மடங்கு மன்மததாபம் வ்ருத்தியாயிற்று. வெட்கத்தினால் குனிந்த ஶிரமுள்ளவளாகவும், கடைக் கண்ணால் தன்னைப் பார்ப்பவள்போலவும் சித்ரம் வரைந்து, அதைக்கண்டவுடன் மயிர்கூச்சலெடுத்த தமது அங்கத்தின் மீது அந்தச் சித்ரத்தை வைத்துக்கொண்டார். மஹத்தான சித்ர ஸங்கத்தாலும், அதிகமான ரதி ஸம்பத்தாலும், மிக அதிகமான மன்மத தாபத்தாலும் முக்கண்ணன் மிகவும் துன்பமடைந்தார். எங்கும் அந்தப் பார்வதியையே பார்த்துக்கொண்டு, அவளிடமே மனத்தைவைத்து உன்மாதாவஸ்தையால் அருகில்வந்த அவளுடனே பேசிக்கொண்டு, பார்வதீ மயமான மனமுள்ளவராய் அதே சிந்தையாய், அதே பற்றுள்ளவராய்த் தேவியினது கதாம்ருதத்தால் இரவையும் பகலையும் கழித்துக்கொண்டிருந்தார்.

அவளது ஸீலத்தை வர்ணிப்பதில் ஊக்கமுள்ளவராகவும், அவளது ரூபத்தைக் காண்பதில் கவலையுள்ளவராகவும், அவளுடன் போகங்களை ஸங்கல்பித்து, அந்த ஸங்கல்ப மாலையைத் தொடுக்கும் மாலாகாரனாகவும்

ஆன ஶிவன், பார்வதி மயமாகி மிகவும் விரஹதாபத்தை அடைந்தார். இந்த மன்மத தாபத்திற்கு வேறு சிகித்ஸை யில்லை யென்றுணர்ந்த பரமஶிவன் பார்வதியை மணந்து கொள்வதற்குத் தக்க முயற்சி செய்தார்.

ஸ்ரீ லலிதையின் ஆக்ஞையால் மஹாதேவனை இங் ஙனம் மோஹமடையும்படிச் செய்துவிட்டுப் பிறகு, மன் மதன் பர்வத ராஜகுமாரியையும் தனது புஷ்ப பாணங் களாலடித்தான். அதிகமான விரஹஜ்வாலையால் தேவி பெருமூச்சுவிட, அதனுல் அவளுடைய அழகிய உதடுகள் உலர்ந்தன; கன்னம் வெளுத்தது; உண்பதிலோ, உறங்கு வதிலோ, படுப்பதிலோ அவளது மனஞ்செல்லவில்லை. ஆயிரந்தோழிகள் இரவும்பகலும் ஶைத்யோபசாரம்செய் தும்மேலும்மேலும் தாபமடைந்து வாடினுள். ஓங்கிவளர்ந்த காதற்கனலுக்கு எதுவும் ஶாந்தியைத் தரவில்லை. விரஹ தாபத்தால் பார்வதி உறங்கவுமில்லை. இதனுல் அவளது உடல் இளைக்க, அதைக்கண்டு அவள் தந்தை மிக வருந்தி னுர். ஶிவனிடத்தில் தன் மகள் கொண்ட விரஹத்திற்கு வேறு பரிஹாரம் செய்யமுடியாதென்று கண்ட பர்வத ராஜன் மஹா துக்கத்தையடைந்தார். பெண்ணைப் பார்த்து "பத்ரே! நீ தவத்தினுல் அந்த மஹாதேவனை ஸந்தோஷப்படுத்தி, அவரைக் கணவனுக அடைவாயாக" என்று பிதா தூண்டினுர். பார்வதியும் அங்ஙனமே ஹிமாசலத்தின் ஶிகரத்தில் கௌரீ ஶிகரம் என்னும் இடத்தில் பரமனைப் பதியாகப்பெறக் கடுந்தவம் புரிந் தாள். அவள் குளிர்காலத்தில் ஜலத்திலிருந்தும், வேனிற் காலத்தில் பஞ்சாக்னி மத்தியிலிருந்தும், ஸூர்யனிடத் தில் கண்களைச் செலுத்தியும் கோரமான தவத்தைச் செய்தாள். அந்தத் தவத்தினுல் ஸந்தோஷமடைந்த ஶிவன், பார்வதியின் முன்னே தோன்றி, விவாஹ விதியி னுல் அவளைப் பார்யையாக (வாக்கினுல்) ஏற்றுக்கொண் டார். பிறகு ஹிமவானுல் கொடுக்கப்பட்டவளும்

தாமரைமலர் போன்ற கண்களையுடையவளும், முன்னமே யே ஸப்தரிஷிகள் மூலமாக ப்ரார்த்திக்கப்பட்டவளு மான அந்தத் தேவியை ஶிவன் மணந்துகொண்டார். அந்தத் தேவியுடன் கூடப் பரமஶிவன் அநேக காலம் ஓஷதிப்ரஸ்த மென்னும் மாமனுரது நகரத்திலே ரமித்துக்கொண்டிருந்தார். மறுபடி கைலாஸத்திற்கு வந்து ஸமஸ்த ப்ரமத கணங்களுடன்கூட அழகிய வேஷ மணிந்து ஹிமவானுக்கு ஸந்தோஷத்தை யளிக்கப் பார்வதியைத் தம்மிருப்பிடத்திற்கு அழைத்துச் சென் ருர். பிறகு கைலாஸம், விந்த்யம், மந்தரம், ஹேமஶை லம், மலயம், பாரியாத்ரகம் முதலிய நானுவிதமான பற்பல இடங்களில் தேவியுடன்கூட மஹாதேவன் ரமித்து ஸந்தோஷமடைந்தார்.

பின்னர், தேவன் தேவியிடம் உக்ரமான தமது வீர் யத்தை விடுத்தார். அதை வஹிக்க முடியாமல் தேவி அவனியில் விட்டுவிட்டாள். பூமி அக்நியிடமும், அக்நி க்ருத்திகைகளிடமும், அவர்கள் கங்காஜலத்திலும், கங்கை ஶரவணத்திலும் முறையே அதைப் பரிக்கமுடியா மல் விட்டனர். அங்கு மஹா வீரனுய் ஆறுமுகங்களு டன் கூடியவனுன மஹாஸேநன் தோன்றினர். கங்கை அவரை ஶிவனருகே கொண்டுவிட்டாள். அவர் அவ ரிடத்தில் நாளொரு மேனியாக வளர்ந்து வந்தார். தீவ்ர மான பராக்ரமமுள்ள ஷடானனருக்கு அவரது தந்தையே ஸகல வித்யைகளையுங் கற்பித்தார். தந்தையின் உத்தரவு பெற்று அவர் தேவ ஸைன்யங்களுக்குப் பதியானர். அநேக தானவர்களுடன் சென்று தாரகாஸுரனை அவர் ஸம்ஹரித்தார். தாரகவதத்தால் ஸந்தோஷமடைந்த தேவேந்த்ரன் தனது புத்ரியான தேவஸேனையை அவ ருக்குத் தர, குஹன் அவளை மணந்துகொண்டார். மிக்க யஶஸ் உள்ளவளான தேவஸேனை ஸ்கந்தனைக் கணவ னுகப் பெற்றுப் பேரானந்தமடைந்தாள்.

இங்ஙனம் மன்மதன் ஸகல ஜகத்தையும் மோஹிக்கச்செய்து தேவ கார்யத்தையும் முடித்துவிட்டு ஸ்ரீபுரத்திற்கு மறுமடியும் வந்து சேர்ந்தான். புண்யமான அந்த ஸ்ரீ நகரத்தில் ஸ்ரீ லலிதா பரமேஶ்வரீ ஜகத்தின் க்ஷேமத்திற்காகவே வஸிக்கின்ருள். அங்கு அந்தத் தேவியை ஸேவிப்பதற்காகவே காமனும் சென்ருன்.

**இருபத்தேழாம் அத்யாயம் முற்றிற்று.**

---

## இருபத்தெட்டாம் அத்யாயம்–184 ச்லோகங்கள்.

### ஸ்ரீநகர நிர்மாணம்.

*அகஸ்தியர்* :— ஸ்ரீபுரம் என்பதென்ன? அது எந்த வடிவமாக இருக்கிறது? அது யாரால் முன்னர் நிர்மாணம் செய்யப்பட்டது? அஃதெல்லாவற்றையும் தெரிவியுங்கள், ப்ரபோ! அது எவ்வளவு அளவுள்ளது? என்ன வர்ணமுள்ளது? என்பதையும் எனக்குக் கூறுங்கள், தாங்களே ஸந்தேஹமென்னும் சேற்றை உலர்த்தும் ஸூர்யன்.

*ஹயக்ரீவர்* — முற்கூறிய லக்ஷணங்களுடன் கூடிய ஸ்ரீசக்ரரதத்தை யடைந்து. மஹாயாகாக்கியால் தோன்றிய ஸ்ரீ லலிதாபரமேஸ்வரி, எப்போது லோக கண்டகனை பண்டனென்னும் அஸுரனை ஜயித்தாளோ, அப்பொழுதே மஹேந்த்ரன் முதலிய தேவர்கள் மிக்க ஸந்தோஷமடைந்தனர். பிறகு காமேஶ்வரருக்கும், குமாரியான லலிதாதேவிக்கும், மிக்க ஸுந்தரமாயும், நித்யம் போகானுபவத்திற்கு உசிதமாயுமுள்ள ஒரு ஆலயத்தை அமைக்க, ப்ரம்ஹ விஷ்ணு ஈஶ்வரர்கள் ஆசைகொண்டார்கள். சிற்ப ஶாஸ்த்ரத்தில் மிக ஸமர்த்தனை விஶ்வகர்மா எனும் தேவத் தச்சனையும், மாயையில் ஸமர்த்தனை மயனெனும் அஸுர சிற்பியையுமழைத்துத் தக்கபடி அவர்களைப் புகழ்ந்து, லலிதையின் ஆக்ஞையின்படி கீழ் வருமாறு கூறினர்.

காரண புருஷர்கள் :— "ஓ சில்பமறிந்த விஶ்வ கர்மாவே! ஓ மஹோதயரான மயரே! நீங்களிருவர் களும் ஸர்வ ஶாஸ்த்ரங்களையு முணர்ந்தவர்கள்; ஒரு கார்யத்தை முடித்துவைக்கும் விஷயத்தில் திறமை வாய்ந்தவர்கள். ஸங்கல்ப்பத்தினாலேயே மஹா சில்பங் களைச் செய்வதில் ஸமர்த்தர்கள். நீங்கள் நித்ய க்ஞானக் கடலான லலிதாதேவிக்குப் பதினாறு க்ஷேத்ரங்களி னிடையே அந்த க்ஷேத்ரங்களுக்கு ஸமமான ஸங்க்யை யால், பலவகையான ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீநகரங்களை நிர்மித்தல் வேண்டும். பதினாறு விதமாகப் பிரிந்தொளிரும் லலிதாபரமேஶ்வரி உலகைக் காக்க எப் போதும் அங்கு வஸிப்பாள். இது எங்களுக்கும் ப்ரிய மானது; தேவர்களுக்கும் ப்ரியமானது; ஸர்வ லோகங் களுக்கும் ப்ரியமானது. ஆதலால் சிறிதும் தாமதித்தல் கூடாது" என்று காரண தேவர்கள் கூற, அவ்வார்த்தை களைக் கேட்டு அந்த விஶ்வகர்மாவும் மயனும் அவர்களை நமஸ்கரித்து, "அங்ஙனமே ஆகட்டும்" என்று கூறினார் கள். அன்றியும், அவர்கள் காரண தேவர்களை மறுபடி யும் பணிந்து, "ஓ மஹோதயர்களே! எந்த எந்த க்ஷேத்ரங்களில் ஸ்ரீ நகரங்களை நிர்மிக்கவேண்டும்" என வினவினர். அதைக்கேட்டு ஸந்தோஷமடைந்த அந்த ப்ரம்ஹாதி தேவர்கள் உசிதமாக க்ஷேத்ரங்களைப் பகுத் துச் செய்து சில்பிகளைப் பார்த்துக் கூறினதாவது:—

"காரண புருஷர்கள் :— முதலில் மேருமலையிலும், இரண்டாவது நிஷத மலையிலும், மூன்றாவது ஹேமகூடத் திலும், நான்காவது ஹேமகிரியிலும், ஐந்தாவது கந்த மாதநத்திலும், ஆறாவது நீலமேஷத்திலும், ஏழாவது ஶ்ருங்கத்திலும், எட்டாவது மஹேந்த்ரத்திலும், ஒன்பதா வது மஹாகிரியிலும் ஆக அவனியில் ஒன்பது க்ஷேத்ரங் களும், உப்புக்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், ஸுரைக் கடல், நெய்க்கடல், தயிற்கடல், பாற்கடல், ஶுத்த ஜலக் கடல் ஆகியவைகளில் ஏழு க்ஷேத்ரங்களும், இங்ஙனம்

மலைகளில் ஒன்பதும், கடல்களில் ஏழுமாகப் பதினறு க்ஷேத்ரங்கள் அன்னைக்கு ஸ்ரீபுரம் அமைப்பதற்கேற்ற வனவாகும். இவைகளில், மிக்க தேஜஸ்வாய்ந்த லலிதைக்கு, ஏற்றபடி திவ்யமான புரம் அமைப்பதில் பண்டிதர்களான நீங்களிருவரும் அழகிய அரண்மனைகளை அமையுங்கள். இந்த க்ஷேத்ரங்களில் அமைக்கப்பட்ட ஸ்ரீதேவியின் மஹாபுரங்களுக்குப் பதினறு நித்யா தேவிகளது பெயர்களே இடப்பட்டு ப்ரஸித்தமாக விளங்கும். அந்தத் தேவியே நித்யா ஸ்வரூபத்தினுல் காலத்தை வ்யாபித்துக் கொண்டு சிறந்தவளாய் ஸகல ஜகத்தையும் ஸ்ருஷ்டி கலையால் படைக்கின்ருள். நித்யைகளுக்கும் மஹாராக்ஞியாகும் மஹாநித்யைக்கும் பேதமில்லை. ஆதலால் அவள் பெயராலேயே ஸ்வநாமாக்களுக்குள்ள பட்டணங்களுக்கு ப்ரஸித்தி ஏற்படுவது உசிதமே. காமேஶ்வரீ புரி, பகமாலிநீபுரி, நித்யக்லிந்நாபுரி முதலிய பெயர்கள் ப்ரஸித்தமாக விளங்குவதும் உசிதமே. ஆதலால் நாமாக்களின் ஆதி அக்ஷரத்திற்குப் பொருந்தியதான புண்யதரமான தினங்களில் மஹாசில்ப ப்ரகாரத்தால் சுபமான புரி அமைக்கப்படட்டும்.''

இங்ஙனம் காரண க்ருத்யேந்த்ரர்களான ப்ரம்ஹ விஷ்ணு மஹேஶ்வரர்களால் வேண்டப்பட்ட அவ்விரு சில்பிகளும் அந்த க்ஷேத்ரங்களில் ஸ்ரீபுரங்களைப் படைத்தனர். ஓ லோபாமுத்ரையின் பதியே! ஸ்ரீபுரத்தின் விஸ்தாரத்தையும், அப்புரத்திலுள்ள அதிஷ்டான தேவதைகளையும் சொல்கிறேன்; கவனமாகக்கேளும்.

மேருமலை ஸகலத்திற்கும் ஆதாரமானது; உயரமானது. ஆயிரம் யோஜனை விஸ்தாரமுள்ளது. பதினன்கு உலக சக்ரத்திலும் கோக்கப்பட்ட தன் உடலையுடையது. அதன் கிழக்கில் ஒன்றும், நிருருதி திக்கில் ஒன்றும், வாயு திசையில் ஒன்றும், இடையே ஒன்றுமாக

நான்கு சிகரங்கள் உண்டு. அதன் உயரங்களைக் கூறுகின்றேன், கேளும். முற்கூறிய மூன்று சிகரங்களும் நூறு*யோஜனை நீளமும், நூறு யோஜனை அகலமும் உள்ளவை. அம்மூன்றிலும் முறையே ப்ரம்ஹலோகம், விஷ்ணு லோகம், ஶிவ லோகமென்னும் மூன்று லோகங்களிருக்கின்றன. இவைகளிலுள்ள வீடுகளின் அமைப்பை மற்றொரு ஸமயங் கூறுகின்றேன், கேளும். மத்தியிலுள்ளது நானூறு யோஜனை நீளமும், நானூறு யோஜனை அகலமும் உள்ளது. மிகப் பெரியதான அந்த ஶ்ருங்கத்தில் இரு சில்பிகளாலும் ஸ்ரீபுரம் அமைக்கப் பட்டது. ஓ அகஸ்த்யரே!

அந்நகரத்தின் முதல்ப்ராகாரம் இரும்பினுலாகியது. அது ஆயிரத்து அறுநூறு யோஜனை தூரம் சுற்றளவுள்ளது. நான்கு திசைகளிலும், நான்கு வாயிற்படிகள் உள்ளன. நான்கு யோஜனை தூரம் உயரமுள்ளது. கடலைக் குடித்த அகஸ்த்யரே! அந்த ப்ராகாரத்தின் அடிப்புறம் ஒரு யோஜனை தூரம் விஶாலமானது. வாதாபியைத் தப்பிக்கும்படி செய்தவரே! அதன் தலைப் பாகம் ஒரு மைல் விஸ்தாரமானது. ஆங்குள்ள வாயிற் படிகள் ஒரு யோஜனை தூரம் உயரமானவை. ஒவ்வோர் வாயிற்படியிலும் ஒரு யோஜனை உயரமும், ஒரு மைல் அகலமுமுள்ள இரண்டு இரும்புக் கதவுகள் இருக்கின்றன. ஒவ்வொன்றின் இரு தாழ்பாள்களும் அரைமைல் நீளமானது. இங்ஙனம் நான்கு வாயிற்படிகளிலும் கதவு முதலியவை ஸமானமாயிருக்கின்றன.

கும்பஸம்பவரே! கோபுரத்தின் அமைப்பைக் கூறுகிறேன் கேளும். முன் சொன்ன இரும்புக் கோட்டையின் ஒரு யோஜனை விஸ்தாரமான மூலபாகத்தில் இரண்டு பக்கங்களிலும் இரண்டு இரண்டு யோஜனை தூரம் ஆக்ரமித்து அமைக்கப்பட்டது. வாயிற்படிகள் இடையே

* யோஜனை என்பது எட்டு அல்லது ஒன்பது மைல்களாம்.

அமைந்துள. அவைகள் இரண்டு இரண்டு யோஜனை முன்னும் பின்னும் விஸ்தாரமுள்ளவை. இரு பக்கங்களிலுமுள்ள இரண்டு யோஜனைகளுக்கிடையிலுள்ள ப்ராகாரத்தின் அளவு ஒரு யோஜனை. இவைகளைச் சேர்த்துக் கணக்கிடின் கோபுரமுள்ள விடத்தில் கோட்டை ஐந்து யோஜனை விஸ்தாரமுள்ளதாகிறது. முனிவரே! இங்ஙனமாகக் கோபுரம் அமைக்கப்பட்டுள்ளது. ஆதலின் ஒரு கோபுரத்தின் அடிச்சுற்றளவு இருபது யோஜனையாகிறது. உயர, மேலே போகப்போக அளவு குறைகிறது. கோபுரத்தின் உயரம் இருபத்தைந்து யோஜனையாகும். ஒவ்வொரு யோஜனை உயரத்திலும் அழகிய கதவுடன் கூடிய வாயிற்படி உள்ளது. மேலே போகப் போகக் குறுகியதான இருபத்தைந்து பூமிகைகள் (தட்டுகள்) அமைந்திருக்கின்றன. கோபுரத்தின் நுனி ஒரு யோஜனை விஸ்தாரமும், ஒரு யோஜனை நீளமுமுள்ளதாகும். அங்கு மூன்று மகுடங்களிருக்கின்றன. ஹே கடோத்பவ! மகுடம் ஒவ்வொன்றும் இரண்டு மைல் விஸ்தாரமும், நான்கு மைல் உயரமுமுள்ளவை. அதுவே ஒரு கோபுரம்போல் அடி பருத்துப் போகப்போகச் சிறுத்து விளங்குகின்றது. மகுடத்தின் இடை ஒருமைல் உள்ளது. தென் கோபுரத்திலுள்ள மகுடங்கள் கிழக்கு மேற்காக அமைக்கப்பட்டன. மேற்குக் கோபுரத்தில் தெற்கும் வடக்குமாக இருக்கின்றன. வடக்குக் கோபுரத்தில், தென் கோபுரத்திலுள்ளது போலவும், கிழக்குக் கோபுரத்தில் மேற்குக் கோபுரத்திலுள்ளது போலவும் கிரீடங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இரும்புக் கோட்டைக்கு ஏழாவது யோஜனை தூரத்தில் முன்போல் நான்கு த்வாரங்களும் மகுடங்களும் அமைந்த வெண்கலக் கோட்டை உளது. அதன் ப்ராகார மூல அளவுகள் முற்கூறிய வண்ணமே இருக்கின்றன. ஒவ்வோர் வாயிற்படியிலும் முற்கூறிய லக்ஷணங்கள்

அமைந்த கோபுரங்களிருக்கின்றன. கும்பஸம்பவரே! இரும்புக் கோட்டைக்கும் வெண்கலக் கோட்டைக்கு மிடையிலுள்ள இடங்கள் பலவகையான மரங்களுடன் கூடிய நாநாவ்ருக்ஷ மஹோத்யாநமாகும். உலகில் எவ்வளவு செடி கொடிகளுண்டோ அவ்வனைத்துமங்கே இருக்கின்றன. எப்போதும் அழகிய தளிர்களையும், வாஸனை நிறைந்த புஷ்பங்களையும், இனிய பழங்களையுமுடைய லக்ஷக்கணக்கான மரங்களங்கு விளங்குகின்றன. மா, கங்கேலய, வெள்ளாத்தி, மகிழை, கர்ணிகாரம், ஶிம்ஶுபா, காட்டுவாகை, தேவதாரு, நமேரு, புன்னுகம், பத்ரநாகம், முசிளந்தம், கர்பரம், ஏலம், லவங்கம், தக்கோலம், கர்ப்பூரம், பீலு, காக துண்டம், நகலம், ஆஸநம், காஞ்சநாரம், எலுமிச்சை, பாரஸம், ஹிஞ்ஜுலம், பாடலம், பலிநீ, ஜகன்யா, ஜகனே பலா, கணிகா, குருண்டா, பந்துஜீவ, மாதுளை, அச்வகர்ண, ஹஸ்திகர்ண, சாம்பேய, கநக, யூதிகா, தாளபர்ணீ, லாங்கலீ, ஸதாபலா, பனை, தமாலம், ஹிந்தால, ஈச்சை, ஶரபர்பர, கரும்பு, க்ஷீரீ, ச்லேஷ்மாதக, விபீதக, கடுக்காய், அவாக்புஷ்பீ, கோண்டாலீ, ஸ்வர்ண புஷ்பிகா, பல்லாதக, காதிர, சாகோடா, சந்தந, அகில், காலஸ்கந்தா, சிஞ்சா, தவா, அத்தி, அச்வத்த, வன்னி, த்ருவ, ருசகம், குடைமல்லி, இவை முதலிய ஆயிரக்கணக்கான மரங்களிருக்கின்றன. தேவியினது சிருங்காரத்திற்குக் காரணமாக, எல்லா ருதுக்களும் ஒன்று சேர்ந்து எல்லாப் புஷ்பங்களையுமளிக்கும். உயர்ந்த அடர்ந்த புஷ்ப வ்ருக்ஷங்கள் அந்த உத்யாநத்திலிருக்கின்றன. வெண்கலக் கோட்டைக்கு ஏழு யோஜனை தூரத்தில் ஏழு யோஜனை உயரமுள்ள சதுரஶ்ரமான தாம்ரக்கோட்டை இருக்கிறது. வெண்கலக்கோட்டைக்கும் தாம்ரக் கோட்டைக்கு மிடையில் உள்ள பூமி கல்பவாடிகை எனப்படும். அங்குள்ள மரங்கள் கர்ப்பூரத்தை உள்ளே ரஸமாக உடையவை. அழகிய ரத்நங்களையே விதையாக உடையவை ஸ்வர்ணத்தோலால்

அழகிய பழங்களோடு கூடிய மரங்கள் தங்கள் கிளைகளின் மீது திவ்யமான சீனவஸ்த்ரங்களையும், பவழங்களையும் பூத்திருக்கின்றன. அதன் தேன் அம்ருதமாம். புஷ்பங்கள் ஆபரணங்களாம். இத்தகைய கல்ப வ்ருக்ஷமெனப் படும் மரங்கள் அநேகமிருக்கின்றன. இந்த இரண்டாவது அங்கணத்திற்கு கல்பவாடீ என்று பெயர்.

தாம்ரக்கோட்டைக்கு அடுத்தாற்போல் ஈயக் கோட்டை இருக்கிறது. இவ்விரண்டிற்கும் இடையி லுள்ள ப்ரதேசம் ஏழு யோஜனை தூரமுள்ளது. அவ் விடம் கல்பவாடிகைக்கு ஸமமானது. இது ஸந்தாநவாடி கை என்றழைக்கப்படுகிறது.

ஈயக்கோட்டைக்கு ஏழு யோஜனை தூரத்தில் முற் கூறிய கோட்டைகளைப்போல் அமைந்துள்ள பித்தளைக் கோட்டை ஒன்றிருக்கிறது. அவ்விரண்டிற்குமிடையி லுள்ள ப்ரதேசம் ஹரிசந்தநவாடிகை எனப்படும். இங் குள்ள ஹரிசந்தந வ்ருக்ஷங்கள் கல்பக மரங்களைப்போல் பல புஷ்பங்கள் நிறைந்தவைகளாகும். இந்தக் கோட்டை களெல்லாம் முதலிற் கூறிய கோட்டையைப்போல் அழகிய நான்கு த்வாரங்களும், ஒவ்வோர் வாயிற்படியி லும் கோபுரங்களும், மகுடங்களும் அமையப் பெற்றவை கள். பித்தளைக் கோட்டைக்கு ஏழு யோஜனை தூரத்தில் முன் கோட்டைகளுக்கு ஸமமான பஞ்சலோஹக்கோட் டை ஒன்றுண்டு. அவ்விரண்டிற்குமிடையிலுள்ள பூமி மந்தாரத்ருமவாடிகை யெனப்படும்.

பஞ்சலோஹக் கோட்டைக்கு ஏழு யோஜனை தூரத் தில் முற்கூறிய ஸகல லக்ஷணங்களும் பொருந்திய வெள்ளிக்கோட்டை ஒன்றிருக்கிறது. அவ்விரு கோட்டை களுக்கு மிடையேயுள்ள இடம் பாரிஜாதத்ருமவாடிகை யெனப்படும். அது திவ்யமான வாஸனையுள்ளது புஷ்பங்களாலும், பழங்களாலும் பரிமளிப்பது. வெள் ளிக் கோட்டைக்கு ஏழு யோஜனை தூரத்திலே அழகிய

வாயிற்படிகளும், கோபுரங்களும், சிகரங்களும் உள்ள ஸ்வர்ணக் கோட்டை இருக்கிறது. அதற்கும், வெள்ளிக் கோட்டைக்குமிடையிலிருப்பது கதம்பவன வாடிகை, ஆங்குள்ள அழகிய கடம்ப மரங்கள் இரண்டு யோஜனை உயரம் வளர்ந்திருக்கின்றன. எப்போதும் அவை மது வைக் கக்கிய வண்ணமாயுள்ள மலர்ந்த மலர்களால் ப்ரகாஸிக்கின்றன. இவைகளிலிருந்துதான் போகத்தை யளிக்கும் காதம்பரீ எனும் யோகினீ தோன்றினுள்.

மதுவிலிருந்து தோன்றிய மிகச் சிறந்த காதம்பரீ மந்த்ரிணீ தேவிக்கு எப்போதும் ப்ரியமானவள். நல்ல நிழலைத்தரும் நீப மரங்களும், தளிர் நிறைந்த மகிழ மரங்களுமங்கு இருக்கின்றன. வாஸனையில் ஆசை கொண்ட வண்டுகள் ஜங்காரம் செய்துகொண்டு அந்த மரங்களைச் சூழ்ந்திருக்கின்றன. அங்கேயே மந்த்ரி நாதைக்கு மனோஹரமான ஆதி அரண்மனை இருக்கிறது. கதம்பவனவாடியின் அக்நிமூலை முதலிய நான்கு மூலை களிலும் ஆதி சில்பியால் பெரிய நான்கு வீடுகள் கட்டப் பட்டுள்ளன. ஒவ்வோர் வீட்டின் அகலமும் நீளமும் ஐந்து ஐந்து யோஜனை தூரமாகும். ஆங்கு ஏழு ஆவரணங்களமைந்திருக்கின்றன. இங்ஙனமே மற்ற மூலைகளிலுமுள்ள வீடுகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன, ஆங்கு எல்லாவிடத்திலும் மிக அழகான வ்ருக்ஷங்களும் நிறைந்திருக்கின்றன. ஶ்யாமளையெனும் மந்த்ரிணீ தேவி அந்த நகரத்தில்தான் வஸிக்கிருள்.

ஆனுல், தேவியை ஸேவிப்பதற்காக மந்த்ரிணிக்கு மஹா பத்மாடவியின் மத்தியில் மற்ருேர் நகரமுண்டு. இந் நகரிலேயே இருந்தால் வெகு யோஜனை தூரத்தி லுள்ள தேவியை ப்ரதிதினம் ஸேவிக்க முடியாதென் றெண்ணி தேவத்தச்சனும், மயனும் தேவி வஸிக்கும் சிந்தாமணி க்ருஹத்தின் வெகு ஸமீபத்தில் மந்த்ரிநாதைக் கொரு வீடும் ஏற்படுத்தினர். ஸ்ரீபுரத்தில் மந்த்ரிணீ தேவிக்கமைக்கப்பட்ட அரண்மனையின் சிறப்பை

ஆயிரம் நாவு படைத்திருந்தாலும் எவரால்தான் வர்ணிக்க முடியும்? காதம்பரீ என்னும் மதுவால் சிவந்த நேத்ரமுள்ளவர்களும், மிகக் கொண்டாடத் தக்கவர்களு மான மாதங்க கன்யகைகள் அழகிய வீணையுடன் பாடிக் கொண்டு விளையாடுகிறார்கள்.

அகஸ்தியர்:—மதங்கர் என்பவர் யார்? கன்யகை கள் அவரிடம் எப்படித் தோன்றினர்? மதுவின் மதத் தால் சோம்பலுள்ள அவர்கள் எப்பொழுது எப்படி மந்த்ரிநாதையை ஸேவிக்கின்றனர்?

ஹயக்ரீவர்:— தபோநிதியான மதங்கரென்பவர் தபஸுக்கெல்லாம் ஒரே இருப்பிடமானவர். மஹா மஹிமை வாய்ந்தவர். உலகைப் படைக்க வல்லவர். உக்ரமான தபஸின் ஶக்தியால் எல்லோருக்கும் ஆக்ஞை யிடும் வல்லமையுள்ளவர். அவருடைய புத்ரரான மாதங்கர் ஸ்திர புத்தியுள்ளவராய் முத்ரிணியான மந்த்ர நாயகியைக் கோரமான தவத்தினால் மிகவும் ஆராதித் தார். மாதங்கமுநிபுத்ரரால் நீண்டகாலமாய் உபாஸிக்கப் பட்டவளான மந்த்ரிணீ அவர்முன் தோன்றி, “வேண்டிய வரத்தைக் கேள்” என்றாள். தபோநிதியும், முநிவர் களில் சிறந்தவருமான அந்த மாதங்கமுநி, தன்னெதிரே தோன்றிய ஶ்யாமளாம்பிகையைப் பார்த்துக்கூறினார்.

மாதங்கமுநி:— ஓ தேவி! உன்னை நினைத்த மாத்ரத் திலேயே அணிமாதி ஸித்திகளும் எனக்குக் கிட்டிவிட்டன. அன்னையே! உனது திருவடியை நினைத்ததால் ஸகல காமங் களையும் பெற்ற எனக்கு மூவுலகிலும் பெறத்தக்க வேறு பொருளொன்றுமில்லை. அம்பிகையே! அப்படி யிருந்தாலும் உனது இந்த தர்சனம் நிஷ்பலமாகக் கூடா தென ஒரு வரத்தைக் கேட்கிறேன். அதைப் பூர்த்தி செய். முன்னொரு ஸமயம் ஹிமவானுடன் நட்பினால் சில

பரிஹாஸமான சொற்களைக்கூறி விளையாடிக்கொண்டிருந்தேன். அச்சமயம் அவர், தான் கௌரியின் பிதாவென்று தம்மைச் சிலாகித்துக்கொண்டு பெருமைகொண்டார். எதனால் அதிகச் சிறப்பு அவருக்கு உண்டாயிற்றோ, அந்தப் பாக்யம் எனக்கில்லாமற் போயிற்று. இரு நண்பர்களுக்கும் குணம் ஸமானமாக இருக்கும்போது ஒருவருக்கு மாத்ரம் விசேஷ குணம் ஏதேனுமொரு காரணத்தால் உண்டாகுமாயின், அதில் மற்றவர் ஆசை கொள்வாரன்றோ ?

## மாதங்க கன்யா ஜனனம்.

"ஓ மந்த்ரிணீநாதே! கௌரிக்கு யான் குரு (தந்தை) என்று எல்லோராலும் கொண்டாடப்பட வேண்டும். எனது இந்த ஆசை பூர்ணமாகவேண்டுமென தவம் செய்தேன். ஆதலால் நீ எனக்குப் பெண்ணாகப் பிறந்து என் பெயரால் மாதங்கீ என ப்ரஸித்தமாக விளங்குவாய்" என்று மாதங்கமுநி கூறிய சொற்களைக் கேட்டாள். "அங்ஙனமே ஆகட்டும்" என்று தேவி பதிலுரைத்து அங்கேயே மறைந்தாள். முநிவரும் பரம ஸந்தோஷமடைந்தார். பின்னர், மாதங்கரது மனைவியின் ஸ்வப்நத்தில் ஸதாமதையென்னும் தேவி தோன்றி, அவளுக்கு தனது காதிலணிந்திருந்த பச்சிலை மரத்தின் புஷ்பக்கொத்துகளிலொன்றை அருள்புரிந்தாள். மாதங்கரது மனைவியான ஸித்திமதி அந்த ஸ்வப்நத்தின் பிரபாவத்தால் தனது கர்ப்பத்தில் லகு ஶ்யாமையைத் தரித்தனள். முறையே தக்க காலத்தில் ஸித்திமதியினிடமிருந்து தேவி கன்யகையாகப் பிறந்தாள். ஆதலால் அவளுக்கு மாதங்கி என்னும் பெயர் ஏற்பட்டது. மூல வித்யையான ஶ்யாமையினிடமிருந்து (ஓராம்ஶமாய்த்) தோன்றியதால் லகு ஶ்யாமா என்றும் அவள் அழைக்கப்படுகிறாள். கும்பஸம்பவரே! தன் தந்தையினிடமிருந்து ஸ்ருஷ்டி மஹா வித்யையைக்கற்று, அந்த வித்யா ப்ரபாவத்தினால்

லகுஶ்யாமை, தனக்கு ஸமமாயும் அழகாயுமுள்ள மாதங்க கன்யகைகளைக் கோடி கோடியாகப் படைத்தாள். மாதங்கி கூட்டத்துடன் லகுஶ்யாமாவானவள், மஹாஶ்யாமாதேவிக்கு அங்க ஶக்தியாயிருக்கும் பாக்யத்தையடைந்து, ப்ரியகப்ரியா எனும் மஹாஶ்யாமா தேவியை ஸேவிக்கிருள். கும்பஸம்பவரே! இங்ஙனம் மாதங்க கன்யகைகள் பிறந்தனர். இரும்பு முதலிய லோஹங்களால் நிர்மாணிக்கப்பட்ட ஏழுவிதமான கோட்டைகளைக் கூறினேன். இனி எதைக் கேட்க விரும்புகிருய்?

## ஸப்த ஸால ரக்ஷகர்களின் பெயர்கள்.

அகஸ்த்யர்:— ஓ ப்ராக்ஞரே! அவ்வேழு கோட்டைகளை ரக்ஷித்துக்கொண்டு வஸிப்பவர்களது பெயர்களைக் கூறின் எனது ஸந்தேகமகலும்.

ஹயக்ரீவர்:— ஓ அகஸ்த்யரே! முதலில் கூறிய இரும்புக் கோட்டைக்கருகிலுள்ள நானுவ்ருக்ஷ மஹோத்யாநத்தில் மஹாகாளர் என்பவர் ரக்ஷகராக இருக்கிருர். அவர் ஸர்வ லோகங்களையும் பக்ஷிப்பவர்; கறுத்த ஶரீரமுடையவர்; கறுத்த கவசத்தை யணிந்தவர்; மதத்தால் சிவந்த கண்களை உடையவர்; ப்ரம்ஹாண்ட மென்னும் பாத்ரத்தில் விஶ்வரஸமெனும் மதுவை வைத்துக்கொண்டு பானம் செய்பவர்; மேகம்போல் நீல நிறமுள்ளவளும், மன்மதனுல் பீடிக்கப்பட்டவளுமான மஹா காளியைக் கடாக்ஷிப்பவர். மங்களகரமாய் கலநா வடிவமாயுள்ள ஸிம்ஹாஸநத்திலே வீற்றிருப்பவர். ஸ்ரீ லலிதா தேவியின் த்யானத்தையே பெருஞ் செல்வமாகக் கொண்டவர். லலிதா பூஜையிலும் மிக விருப்பங்கொண்டவர். லலிதா தேவியின் பக்தர்களது ஆயுளை வெகு வெகு நீண்டதாகச் செய்பவர். காலம்ருத்யு முதலிய கிங்கரர்களால் நாற்புறமும் ஸேவிக்கப்படுபவர். இந்த மஹாகாளரும்,

அவரது பத்னி மஹாகாளியும் முதல் உத்யானத்திலிருந்து கொண்டு ஸ்ரீ லலிதா தேவியினது ஆக்ஞையின்படி உலக மனைத்தையும் நடத்துகின்றனர். அங்கு மிகப் பெரிய தான காலசக்ரம் அவர்களுக்கு ஆஸனமாக அமைந் துள்ளது. அது நான்கு ஆவரணங்களால் சூழப்பட்டு மத்தியில் பிந்துவினுல் மிக அழகாக விளங்குவதாகும். முக்கோணம், பஞ்சகோணம், பதினுறு தளமுள்ள கமலம், எட்டுத் தளமுள்ள பத்மம் ஆகிய நான்கு ஆவரணங்களுக்கிடையே இருப்பவர் மஹா காளராவர்.

த்ரிகோணத்தில், மஹாகாளருடைய ஶக்திகளான மஹா கல்பா, மஹாஸந்த்யா, மஹாநிஶா எனும் மூன்று மஹா தேவிகளிருக்கின்றனர். பஞ்சகோணத்தில் க்ருதா, த்ரேதா, த்வாபரா, கலி, மன்வந்தரா ஆகிய பஞ்ச ஶக்தி களுளர். அங்கேயே (பஞ்சகோணத்தின்) நுனியில் ப்ரத்யூஷா, பித்ரு ப்ரஸூ, ப்ராங்ஹா, பராங்ஹா, மத் யாங்ஹா எனும் ஐந்து (மஹாகாளருடைய) ஶக்திகளி ருக்கின்றனர். முனிவரே! 16 இதழுள்ள பத்மங்களில் உள்ளோர்களைக் கூறுகின்றேன் கேளும். திநா, நிஶா, தாமிஸ்ரா, ஜ்யோத்ஸ்னீ, பக்ஷிணீ, ப்ரதோஷா, நிஶீதா, ப்ரஹாரா, பூர்ணிமா, ராகா, அநுமதீ, அமாவாஸீ, ஸிநீ வாலீ, குஹூ, பத்ரா, உபராகா என்னும் பதினுறு ஶக்திகளும் ஷோடஶதளங்களில் வஸிப்பவர்களாவர். கலா, காஷ்டா, நிமேஷா, க்ஷணு, லவா, த்ருடி, மூஹூர்த்தா, குதபா, ஹோரா, ஶுக்லபக்ஷா, க்ருஷ்ண பக்ஷா, அயநா, விஷுவா, ஸம்வத்ஸரா, பரிவத்ஸரா, இதாவத்ஸரா, இந்தப் பதினுறு ஶக்திகளும் ஷோடஶ கமலதளங்களின் நுனியில் வஸிப்பவர்களாவர். இத்வத் ஸரா, இதுவத்ஸரா, வத்ஸரா, திதி, வாரா, நக்ஷத்ரா, யோகா, கரணு எனும் எட்டு ஶக்திகள் அஷ்டதளகமலத் தின் எட்டுத் தளங்களில் வஸிப்பவர்களாவர்.

ப்ரகாஶமான காலசக்ரத்திற்குக் கலி, கல்யா, கலநா, காளீ எனும் நான்கு ஶக்திகள் த்வாரபாலகர்களாவர். மதத்தினுல் மலர்ந்த முகமுள்ளவர்களும், மது நிறைந்த பாத்ரத்தையும், சிவந்த மாம்ஸத்தையும் தரித்திருப்பவர்களும், கறுத்த வர்ணமுள்ளவர்களுமான மஹா கால தேவிகளெனப்படும் காலனது ஶக்திகள், ஸ்ரீ லலிதையின் பூஜை, த்யானம், ஜபம், ஸ்தோத்ரம் இவைகளிலே ஈடுபட்ட மனமுடையவர்களாய் காலசக்ர ஆஸநத்திலுள்ள மஹாகாளரை ஸேவித்துக்கொண்டிருக்கின்றனர்.

ஓ அகஸ்த்யரே! கல்பக வாடிகையை ரக்ஷிப்பவர் வஸந்த ருது நாதராவர். அவர் மஹா தேஜஸ்வி; லலிதைக்கு ப்ரியமானதைச் செய்பவர்; புஷ்ப ஸிம்ஹாஸநத்தில் வீற்றிருப்பவர்; புஷ்ப மதுவை யருந்தி அந்த மதத்தாற் சிவந்தவர்; புஷ்பங்களையே ஆயுதமாகவும் ஆபரணமாகவும் உடையவர்; புஷ்பக்குடையால் அலங்கரிக்கப்பட்டவர். ப்ரகாஶமுள்ள அவருக்கு மதுஸ்ரீ, மாதவஸ்ரீ எனும் இரண்டு தேவிகளிருக்கின்றனர். அவர்கள் புஷ்ப மதுவின் பாரத்தால் மதமுள்ளவர்கள்; மன்மத (லீலையில்) ஆசைகொண்டவர்கள்.

ஸந்தானவாடிகையை ரக்ஷிப்பவர் க்ரீஷ்மருது ஆவர். அவர் உக்ரமான கண்களை உடையவர்; லலிதையின் கிங்கரனுக இருந்து அவளது ஆக்ஞையைச் செய்பவர். அவருக்கு ஶுக்ரஸ்ரீ, ஶுசிஸ்ரீ என்னும் இருவர் மனைவிகளாவர்.

ஹரிசந்தனவாடிகையில் வர்ஷருது நாதர் ரக்ஷகராக விளங்குகிறுர். அவர் மிக்க தேஜஸ் உள்ளவர்; மின்னலைப்போல் ப்ரகாஶிக்கும் சிவந்த கண்கள் உள்ளவர்; வஜ்ரம்போல் அட்டஹாஸம் செய்பவர்; மதங்கொண்ட மேகத்தை வாஹநமாகக் கொண்டவர், மேகங்களைக் கவசமாகப் பூண்டவர்; மணிமயமான வில் ஏந்தியவர்;

லலிதையின் பூஜை, த்யாநம், ஜபம், ஸ்தோத்ரம் இவைகளில் மிகப்பற்றுடையவர். விந்தியமலையின் செருக்கை அடக்கிய அகஸ்த்யரே! அவர் மூன்று லோகங்களுக்கும் இன்பத்தைத்தருபவர். அவருக்கு, நபஸ்ரீ, நபஸ்யஸ்ரீ, ஸரஸா, ஸஸ்யமாலிநீ, அம்பா, துலா, நிதத்நீ. அப்ரயந்தீ, மேகயத்திகா, வர்ஷயந்தி, சுபுணிகா, வர்ஷதாரா எனும், மதத்தினுற் சிவந்த நேத்ரங்களையுடைய பன்னிரண்டு ஶக்திகளிருக்கின்றனர். அவர்களுடன் கூட அந்த வர்ஷருதுநாதர் தம்மால் உண்டுபண்ணப்பட்ட புஷ்பக்குவியலால், எப்போதும் பரமேஶ்வரியைப் பூஜித்தப்படியே இருக்கின்ருர். அன்றியும் அவர் லலிதா பக்தர்கள் வஸிக்கும் தேசங்களைத் தனது ஸம்பத்தால் அலங்கரிக்கிருர். தேவியின் பகைவருள்ள தேசங்களை மழை பொழியாமல் பீடித்துக்கொண்டு எப்போதும் பரதேவதையின் வேலையாளாக இருக்கின்ருர்.

மந்தார வாடிகையில் ஸதா ஶரத்ருது வஸித்துக் கொண்டு அந்தக் கோட்டையை ரக்ஷித்து வருகிருர். அவர் அழகில் சிறந்தவர். உலகத்தாரின் சித்தம் அனைத்தையும் ஸந்தோஷப் படுத்துபவர். இஷஸ்ரீ, ஊர்ஜஸ்ரீ என்னும் இருவர்களும் அவரது ப்ராணநாயகிகள். அவ்விருவர்களுடன் கூட ஶரத்ருது தம்மாலுண்டுபண்ணப் பட்ட புஷ்பராசிகளால் ஸ்ரீ காமேஶ்வரரது பத்னியான ஸாம்ராஜ்ஞியைப் பூஜிக்கின்ருர்.

வில்வலனை ஶிக்ஷித்த அகஸ்த்யரே! பாரிஜாதவாடிகையில், எப்போதும் மலர்ந்த முகமுள்ளவரும், லலிதைக்கு மிகவும் ப்ரியமான தாஸரும், மஹா தேஜஸ்வியும் பனிபோல் குளிர்ந்த உடலுள்ளவருமான ஹேமந்தருது அந்த வாடிகையை ஸதா ரக்ஷித்துக்கொண்டு வஸிக்கின்றனர். தம்மாலுண்டுபண்ணப்பட்ட புஷ்பங்களைக் கொண்டு அவர்தேவியைப்பூஜித்துக்கொண்டிருக்கின்ருர்

ஸஹஸ்ரீ, ஸஹஸ்யஸ்ரீ என்ற இருவர்களும் அவருக்கு ப்ரியமான பத்னிகள்.

முனிஶ்ரேஷ்டரான அகஸ்த்யரே! கதம்பவாடிகையிலே ஶீதளமான ஶரீரமுள்ள ஶிஶிரருது தங்கி நின்று, அதைப் பரிபாலித்து வருகிறார். அந்த ருதுவால் அவ்விடமெல்லாம் மிக ஶீதளமாகச் செய்யப்பட்டிருக்கின்றது. அந்த இடத்தில் வஸிப்பதால்தான் ஶ்யாமளாதேவி மிக ஶீதளமாயிருக்கின்றாள். அவருக்கு தபஸ்ரீ, தபஸ்யஸ்ரீ எனும் இரண்டு உத்தம பத்னிகளுண்டு. அவர் அவ்விருவர்களுடன் கூடிப் பரமபாவநியான ஸ்ரீ லலிதையை அர்ச்சிக்கிறார்.

அகஸ்த்யர் :— ஹயக்ரீவரே? நாநாவ்ருக்ஷம் முதலிய ஏழு உத்யானங்களில் முதலாவது உத்யான பாலகர் மஹாகாளர் என அறிந்தேன். அங்கு நான்கு ஆவரணங்களுடன் கூடிய அவருடைய சக்ரமும் உம்மால் கூறப்பட்டது. மற்றைய கல்பகாதி ஆறு உத்யானங்களில் வஸந்தம் முதலிய ருதுநாதர்கள் அவற்றின் பாலகர்களாக இருக்கின்றனர் என்றுணர்ந்தேனே தவிர ஆங்குள்ள சக்ரங்கள், சக்ரதேவிகளை நான் கேட்கவில்லை. ஆதலால் ஓ பகவன்! ஸர்வக்ஞனும் மஹாஞனுமுள்ள தாங்கள் வஸந்தாதி சக்ர ஆவரண தேவதைகளை க்ரமமாகத் திருவாய்மலர்ந்தருள்வீராக.

ஹயக்ரீவர் :— ஓ முனிஶ்ரேஷ்டரே! அந்தந்தச் சக்ரத்திலுள்ள தேவதைகளைக் கூறுகிறேன், கேளும். காலசக்ரத்தை முன்னர் கூறியுள்ளேன். இப்போது வஸந்த சக்ரத்தைப்பற்றிக் கூறுகிறேன். த்ரிகோணம், பஞ்சகோணம், அஷ்டதளபத்மம், ஷோடஶதளபத்மம், மறுபடியும் இரு தஶாரங்கள், சதுரஸ்ரம் ஆகிய ஏழு ஆவரணங்களுள்ளது அந்தச் சக்கரம். அதன் மத்தியில்பிந்து சக்ரத்தில் மஹாப்ரகாஸமுள்ளவராக வஸந்தருதுநாதர்

விளங்குகின்றார். அவரது இருபுறங்களிலும் அங்கத்தோடு அங்கமாகச் சேர்ந்து மதுஸ்ரீயும் மாதவஸ்ரீயுமிருக்கின்றனர். தம்மிரு கரங்களால் அவர் அவ்விரு மாதர்களது ஒவ்வொரு ஸ்தனத்தையும் பிடித்துக் கொண்டு மற்ற இருகரங்களால், தம்மால் மலர்த்தப் பட்ட புஷ்பங்களிலிருந்து உண்டான மதுவால் நிறைந்த பாத்ரங்களை ஏந்தி விளக்குகின்றனர். ஓ விந்த்யமலையின் செருக்கை அடக்கியவரே! இங்ஙனமே ஒவ்வொரு ருதுநாதரையும் த்யாகம் செய்தல் வேண்டும். வர்ஷருதுவை த்யாநஞ்செய்யும்போது முதலிரண்டு ஶக்திகள் அவர் அங்கத்துடன் ஸம்பந்தித்ததாகவும், மற்றவர்கள் அருகிலிருப்பதாகவும் த்யாநஞ்செய்தல் வேண்டும்.

வாஸந்த சக்ரத்திலுள்ள ஶக்திகளைக் கூறுகின்றேன், கேளும். மதுஶுக்லப்ரதமா – மதுஶுக்லத்விதியா – மதுஶுக்லத்ரிதியா – மதுஶுக்லசதுர்த்தி – மதுஶுக்ல பஞ்சமீ – மதுஶுக்லஷஷ்டீ – மதுஶுக்லஸப்தமீ – மதுஶுக்லா[ஷ்]டமீ – மதுஶுக்லநவமீ – மதுஶுக்லதஶமீ – மதுஶுக்லஏகாதஶீ – மதுஶுக்லத்வாதஶீ – மதுஶுக்ல த்ரயோதஶீ – மதுஶுக்லசதுர்த்தஶீ – மதுஸுக்ல பூர்ணிமா – மதுக்ருஷ்ண ப்ரதமா – மதுக்ருஷ்ண த்வதியா – மதுக்ருஷ்ண த்ரிதீயா – மதுக்ருஷ்ணசதுர்த்தீ மதுக்ருஷ்ணபஞ்சமீ – மதுக்ருஷ்ணஷஷ்டீ – மதுக்ருஷ்ண ஸப்தமீ – மதுக்ருஷ்ணஷ்டமீ – மதுக்ருஷ்ணநவமீ – மதுக்ருஷ்ண தஶமீ – மதுக்ருஷ்ணஏகாதஶீ – மதுக்ருஷ்ண த்வாதஶீ – மதுக்ருஷ்ணத்ரயோதஶீ – மதுக்ருஷ்ண சதுர்த்தஶீ – மதுஅமா எனும் முப்பது ஶக்திகளும், இம்மாதிரியே மாதவ ஶுக்லப்ரதமா முதல் மாதவ அமா வரையில் மற்றுமோர் முப்பது ஶக்திகளும் சேர்ந்து அறுபது வாஸந்த ஶக்திகளாவர். அவரவர்க்குரிய மந்த்ரங்களால் அந்த அந்தச் சக்ரத்தில் விதிப்படி இவ்வறுபது ஶக்திகளும் பூஜிக்கத் தக்கவர்களாவர். வாஸந்த

சக்ரராஜத்திற்கு ஏழு ஆவரணங்களும், அவைகளில் அறுபது தளங்களும், அவற்றில் அறுபது ஶக்திகளுமிருக்கின்றனர். ஸாதகர்கள் இவைகளைப் பிரித்து அந்த அந்த ஶக்தி மந்த்ரத்தால் அவரவர்களைப்பூஜித்தல் வேண்டும். வாஸந்தசக்ரம் போலவேதான் மற்ற ஐந்துருது சக்ரங்களும் அமைந்துள்ளன. ஆவரண ஶக்திகளும் அவ்விதமே அமைந்துள்ளனர். ஆயினும் ஶுக்ர, ஶுசி முதலிய பேதங்களால் அந்த அறுபது ஶக்தி தேவதைகள் மாத்திரம் வேறுபடுவார்கள்.

ஶுக்ரஶுக்லப்ரதமா, ஶுக்ரஶுக்லத்விதியா என்பது போலவே ஶுக்ரக்ருஷ்ணப்ரதமாதிகளையும் கூறல் வேண்டும். இங்ஙனமே ஶுசிஶுக்லப்ரதமா முதலிய பேதங்களால் க்ரீஷ்ம சக்ரத்திலும் அறுபது ஶக்தி தேவதைகளிருக்கின்றனர்.

இப்படியே வர்ஷருது முதலியவைகளிலும் நவஶுக்லப்ரதமா, நபஸ்யஶுக்லப்ரதமா முதலிய அறுபது ஶக்திகளிருக்கின்றனர். ஒவ்வொரு சக்ரத்திலும் அறுபது அறுபது ஶக்திகள் ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றனர். நூல் விரியுமென்றஞ்சி ஒன்றைமாத்திரம் கூறி நிறுத்தினோம். இந்த ருது ஶக்திகள் அனைவரும் லலிதா பக்தர்களுக்கு ஸௌக்யத்தை அளிப்பவர்கள். இவர்கள் லலிதையின் மஹாமந்த்ரஜபம், பூஜை, த்யாநம், ஸ்தோத்ரம் முதலியவைகளில் மிக்க ஆசை உள்ளவர்களாவர். கல்பகாதி வாடிகா சக்ரங்களில் விளங்கும் இவர்கள் மதத்தால் மந்தகதியை உடையவர்களாவும், தத்தம் ருதுக்களால் உண்டாகும் புஷ்பங்களிலிருந்துண்டான மதுக்களால் மஹேஸ்வரியைப் பூஜிப்பவர்களாகவுமிருக்கின்றனர். இவர்களது எண்ணிக்கையை ஒன்றுசேர்த்துப் பார்த்தால் முந்நூற்று அறுபதாகும்.

இங்ஙனம் ஏழுகோட்டைகளிலும் விளங்கும் ரக்ஷகர்களின் சக்ரதேவதைகளின் பெயர்களை வினவிய உமக்கு அவை விஸ்தாரமாகக் கூறப்பட்டன. மற்ற கோட்டைகளின் மூல ஸ்வரூபத்தையும், விஸ்தாரத்தையும் ஆங்குள்ள ஶக்திகளையும் கூறுகிறேன்; கவனமாகக் கேளும்,

இருபத்தெட்டாம் அத்யாயம் முற்றிற்று.

---

## இருபத்தொன்பதாம் அத்யாயம்–101 ச்லோகங்கள்.

### ரத்னக்கோட்டைகளின் லக்ஷணங்கள் முதலியன.

ஹயக்ரீவர்:— சிற்பிகளால் நிர்மிக்கப்பட்ட உலோஹமயமான கோட்டைகளின் லக்ஷணங்களை உரைத்தேன். இப்பொழுது ரத்னமயமான கோட்டைகளைக் கூறுகிறேன், கவனியும். ஸுவர்ண மயமான கோட்டைக்கும், புஷ்பராக மயமான கோட்டைக்குமிடையே ஏழுயோஜனை தூரம் இடைவெளியுண்டு. அவ்வெளியில் மதங்கொண்ட ஸித்தர்களும், ஸித்த ஸ்த்ரீகளும், பலவகை ரஸஸித்தி, ரஸாயனஸித்தி, கட்கஸித்தி, பாதாஞ்ஜனஸித்தி முதலிய ஸித்திகள் விளையாடுகின்றனர்; அன்றியும், லலிதையினிடம் பக்திகொண்ட மஹாஜனங்களை ஸந்தோஷப்படுத்திக்கொண்டு பலவிதமான ஸித்தகணங்கள் அங்கு மதிரை ரஸத்தைப் பருகுகின்றனர்.

புஷ்பராகாதி கோட்டைகளிலும் முற்கூறிய கோட்டைகளைப்போலவே த்வாரம், கோபுரம் முதலியன அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆங்குள்ள கதவுகளும், தாழ்ப்பாள்களும், உதயமாகும் இளம் ஸூர்யனைப்போல் ப்ரகாசிக்கின்ற புஷ்பராகாதிகளாலேயே செய்யப்பட்டனவாகும். தங்கக்கோட்டைக்கும், புஷ்பராகக்கோட்டைக்கும் இடையிலுள்ள இடமும் புஷ்பராக மயமாகவே இருக்கின்றது. இனிச் சொல்லப்போகிற மஹாஸாலங்களில் மத்ய ப்ரதேசங்களிலுள்ள ஸகல இடங்களிலும்

பக்ஷிகளும், ஓடைகளும், நதிகளும், மரங்களும், கோட்டை என்ன வர்ணமோ அதே வர்ணம் உள்ளவைகளாயிருக்கின்றன. முற்பிறவியில், எவர், தேவியைப் பலவகையான பூஜாக்ரமங்களால் உபாஸித்து உடலை விட்டார்களோ, அவர்களே ஸித்தர்களாகி முற்கூறிய இடத்திலிருந்துகொண்டு தேவியை உபாஸிக்கின்றனர். அவ்வனைவரும் லலிதா மந்த்ரத்தையே ஜபித்துக்கொண்டு அந்த க்ரமத்திலேயே பற்றுடையவர்களாய் லலிதாதேவியின் நாமாக்களை ஸங்கீர்த்தனஞ் செய்துகொண்டு விளங்குகின்றனர்.

புஷ்பராகக்கோட்டைக்கு ஏழுயோஜனை தூரத்தில் பத்மராகமயமான சதுரஸ்ரக்கோட்டை இருக்கிறது. அதன் த்வாரம் முதலியவைகளும், மத்யப்ரதேசமும் பத்மராக நிறமாகவே விளங்குகின்றன. அங்கே, சாரண லோகத்திலுள்ளோர் முன்னுடலை நீத்து ஸித்தியைப் பெற்று, மஹாராக்ஞியின் சரணாரவிந்த ஸேவகர்களாக இருக்கின்றனர். சாரணஸ்த்ரீகளும் அழகிய ஸரீரமுள்ளவர்கள்; மதமுள்ளவர்கள் அங்கு அவர்கள் கல்பவ்ருக்ஷத்தின் அடியில் உள்ள மேடைமேல் அமர்ந்து அடிக்கடி லலிதாதேவியைப்பற்றி இயற்றப்பட்ட பாட்டுகளை மிக இனிமையாகக் கானஞ்செய்கின்றனர். அன்றியும், அவர்கள் தத்தம்கணவர்களுடன் மதுரமான மதுவைப் பருகுகின்றனர்.

பத்மராகக்கோட்டைக்கு ஏழுயோஜனை தூரத்தில், முன்கோட்டைகளுக்கு ஸமமான உருவுடைய கோமேதகக் கோட்டை ஒன்றிருக்கிறது. அவ்விரண்டு கோட்டைகளுக்குமிடையே கோடிக்கணக்கான யோகினிகளும், பைரவர்களும் வஸிக்கின்றனர். தேவியின் ஸரீரத்திலிருந்து தோன்றிய இவர்கள் அங்கு காலஸங்கர்ஷிணி என்னும் தேவியை அர்ச்சிக்கின்றனர்.

கோமேதகக்கோட்டைக்கு ஏழுயோஜனை தூரத்தில் மிக உயரமான வஜ்ரக்கோட்டை இருக்கின்றது. கோமேதக வஜ்ரக்கோட்டைகளுக்கு இடையிலுள்ள இடமும் வஜ்ரமயமாகவே விளங்குகின்றது. அகஸ்த்யரே! முற்பிறவியில் மஹாதேவியைப் பூஜித்தவர்கள் அந்த புண்யத்தால் ஆங்கு அப்ஸரஸ்ஸுகளுடன் கூடி, கந்தர்வர்களாகி வீணை போன்ற இனிய குரலால் தேவியினது குணகணங்களை வர்ணித்துப் பாடிக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் மன்மதனுக்கொப்பான திருமேனியைப் பெற்றவர்கள்; காமபோகத்தில் பேரவாக் கொண்டவர்கள்; சிறந்த ஸ்வபாவம் வாய்ந்தவர்கள்; தேவியிடம் ஆழ்ந்த பக்தியுள்ளவர்கள். ஊர்வஶீ, மேனகை, ரம்பை, அலம்புஸா, மஞ்ஜுகோஷா, ஸுகேஶீ, பூர்வசித்தி, க்ருதாசிகை, க்ருதஸ்தலா, விஶ்வாசீ, புஞ்சகஸ்தலா, திலோத்தமை என்று கூறப்படும் இவர்களும், இவர்களைப்போன்ற மற்றும் பலரும் தேவ தாஸிகளாவர். இவர்கள் கந்தர்வர்களுடன் கூடி, புதியதான கல்ப வ்ருக்ஷத்தின் மதுவைப் பருகி, அடிக்கடி ஸ்ரீ லலிதா தேவியை த்யானஞ்செய்து கொண்டிருக்கிறார்கள். தங்களது ஸௌபாக்யம் மேன்மேலும் வ்ருத்தியாவதற்காக தேவியினுடைய மந்த்ரத்தை ஸதா ஜபிப்பார்கள். பதினான்கு இடங்களிலிருந்து தோன்றிய இவர்கள் பரம ஸந்தோஷத்துடன் அங்கேயே தேவியைப் பூஜித்துக் கொண்டு வஸிக்கின்றனர்.

*அகஸ்த்யர்:—* விபோ! ஸர்வ வித்யைகளுக்கும் நிதியாக உள்ளவரே! மஹாப்ராக்ஞரே! அப்ஸரஸ்ஸுகள் பிறந்த பதினான்கு ஸ்தானங்களையும் கூறுங்கள்.

*ஹயக்ரீவர்:—* ப்ரம்ஹாவினுடைய ஹ்ருதயம், காமன், ம்ருத்யு, பூமி, காற்று, ஸூர்ய கிரணங்கள், சந்த்ர கிரணங்கள், வேதங்கள், அக்நி, மின்னல், அம்ருதம், இரண்டு, தக்ஷகன்யகைகள், ஜலம் என்னும்

இப்பதினுன்கும், ஸௌபாக்யமுள்ள தேவ வேசிகளான அப்ஸரஸ்ஸுகளின் பிறவிக்குக் காரணமானவைகள் என வித்வான்கள் கூறுகின்றனர். இவ்வனைவரும் கந்தர்வர்களுடன் தேவியைப் பூஜிக்கின்றனர். அன்றியும், கின்னரர்களும், கிம்புருஷர்களும் தம்தம் மனைவிகளுடன் மதோன்மத்தர்களாய் முத்துமயமான பூமியில் வஸிக்கின்றனர். மஹாராக்ஞியின் மந்த்ர ஜபத்தால் ஸகல பாபங்களும் நீங்கினவர்களாய் அழகாக ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டுமிருக்கின்றனர். அகஸ்த்ய முனிவரே! வஜ்ரமயமான அதே பூமியில் வஜ்ரா எனும் நதி ஒன்றிருக்கின்றது. அதன் கரைகளும் வஜ்ரம்போன்ற அடர்ந்த மரங்களால் சூழப்பட்டிருக்கின்றன. வஜ்ரமயமான மணலும், வஜ்ர த்ரவமயமான ஜலமும் உள்ளதான அந்தத் தூய நதியானது அங்கு நாற்புறங்களிலும் ஸதா பாய்ந்து கொண்டிருக்கின்றது லலிதா பரமேஸ்வரியினிடம் பக்திகொண்டவர்கள் யாரோ, அவர்கள் அந்த நதியின் தீர்த்தத்தை அருந்திஞல் வஜ்ரமயமான ஶரீரமுடையவர்களாகி நோயற்று நீண்ட ஆயுளுள்ளவர்களாகின்றனர். வஜ்ராயுதமானது தன் கையைவிட்டு நழுவும்படி பண்டாஸுரன் செய்தபொழுது, இந்த்ரன் இந்த நதிதீரத்தில், பக்தியுள்ளவனுய், வஜ்ரேஶியை நாடித் தவம் புரிந்தான். அந்தத் தீர்த்தத்திலிருந்து தோன்றிய தேவி இந்த்ரனுக்கு வஜ்ரத்தை அளித்து மறைந்தாள். அவனும் க்ருதார்த்தனுகி ஸ்வர்க்கஞ் சென்ருன்.

வஜ்ரக்கோட்டைக்கு ஏழாவது யோஜனையில் மிக உயரமானதும், முற்கூறிய கோட்டைகளைப் போலவே அழகிய த்வார கோபுரங்களுடன் விளங்குவதுமான வைடூர்யக்கோட்டை இருக்கின்றது. இவ்விரண்டிற்குமிடையிலுள்ள ப்ரதேசம் வைடூர்யத்தாலேயே நிர்மாணஞ்செய்யப்பட்டு மிகப்ரகாசத்தோடு விளங்குகின்றது.

பாதாளவாஸிகளில் ஸ்ரீ தேவீ பூஜையைச் செய்தவர்கள் எவர்களோ அவர்கள் அங்கே ஸித்தஶரீரமுள்ளவர்களாய் ஸுகமாக வஸிக்கிறார்கள். ஶேஷன், கார்க்கோடகன், மஹாபத்மன், வாஸுகி, ஶங்கன், தக்ஷகன், ஶங்கசூடன், மஹாநந்தன், மஹாபணன் முதலிய நாகர்கள் நாகஸ்த்ரீகளுடன் கூட அங்கு வஸிக்கின்றனர். மஹாபலி முதலிய தர்மசீலர்களான தைத்யர்களுடைய கணங்களும் பத்னிகளுடனும், மித்ரர்களான நாகங்களுடனும் வஸிக்கின்றனர். அந்த அஸுர நாகர்கள் லலிதா மந்த்ரத்தை ஜபித்துக்கொண்டு லலிதா ஶாஸ்த்ர விதிப்படி தீக்ஷை செய்துகொண்டவர்களாய் ப்ரதிதினமும் ஸ்ரீ லலிதையை ஆராதித்துக்கொண்டிருக்கின்றனர். அந்த வைடூர்ய அங்கணத்திலுள்ள நதியின் ஜலம் மிக ஶீதளமாக இருக்கின்றது. ஓடைகளில், மதம் கொண்ட ஹம்ஸங்களும், ஸாரஸ பக்ஷிகளும் அழகாக விளையாடுகின்றன. வைடூர்ய மணிமயமான மாளிகைகளில் நாகர்களும், அஸுரர்களும் பெண்களுடன் கூடி க்ரீடை செய்கின்றார்கள்.

வைடூர்யக்கோட்டைக்கு ஏழாவது யோஜனையில் சக்ரவாகம் போலுள்ள இந்த்ரநீலமயமான ஒருகோட்டை இருக்கின்றது. அவ்விரண்டு கோட்டைகளுக்குமிடையே உள்ள ஸ்தலம் இந்த்ர நீலமயமாகவே இருக்கின்றது. ஆங்குள்ள நதிகளும், ஓடைகளும் மதுரமானவைகள். பூலோகத்தில் எவர் லலிதா மந்த்ர ஸாதகர்களோ, அவர்கள், தங்கள் ஶரீரம் வீழ்ந்தபின்னர் இந்த இந்த்ரநீல அங்கணத்தில் வஸிப்பார்கள். அங்கே அழகிய திவ்ய வஸ்துக்களை அநுபவித்துக்கொண்டு பெண்மக்களுடன் கூடி மதுரமான மதுவைப் பருகிப் பக்தி பரவசர்களாய்க் கூத்தாடுகின்றனர். ஓடைகளின் கரைகளிலும், நதீகூலங்களிலும், அழகிய லதாக்ருஹங்களிலும், செல்வம்

நிறைந்த மண்டபங்களிலும் கூடி ஆடி ஆனந்தமடைகின்ற னர். மஹாபாக்யசாலிகளான அவர்கள் தமது மனைவி கள் சூழ, ஸதா ஜபம் செய்துகொண்டு, தேவியினது குணங்களையே கூறிக்கொண்டு அங்கு வஸிக்கின்றனர். புண்யகர்மா முடிந்தபின்னர், மறுபடியும் இம்மண்ணுல கில் வந்து மானிடப் பிறவியையடைந்து பூர்வ ஜன்ம வாஸனையால் ஸ்ரீ தேவியையே அர்ச்சிப்பார்கள். அச் சிறந்த புண்யத்தால் மறுபடியும் ஸ்ரீ நகரத்திற்கே வந்து இவ்விந்த்ரநீல அங்கணத்தையே அடைவார்கள். அந்த இடத்தின் சேர்க்கையால் ராகத்வேஷங்கள் உண்டாகி அதனால் மலினமான மனோவ்ருத்தியுள்ள மனிதர்களாக வே ஆகின்றனர். ஆனால், எவர்கள் காமக்ரோதங்களை யும், ஸுகதுக்கங்களையும் விட்டு ஜிதேந்த்ரியர்களாய் விளங்குகின்றார்களோ அந்த ஞானிகள், சின்மய ஸ்வரூப மாகி மஹேஶ்வரியுடன் ஐக்யமாகின்றனர்.

இந்த்ரநீலக்கோட்டைக்கு ஏழாவது யோஜனையில் முக்தாரத்நமயமாய் முற்கூறிய கோட்டைகளைப் போலவே அழகிய கோபுரங்களையுடைய கோட்டை ஒன்றிருக்கின்றது. அந்த இந்த்ரநீல முத்துக்கோட்டை களுக்கிடையிலுள்ள ப்ரதேசம் மிக மிக ப்ரகாசமாயும், முத்துமயமாயும், ஶீதளமாயும், மனோஹரமாயுமிருக் கின்றது. தாம்ரபர்ணீ, மஹாபர்ணீ, ஸதாமுக்தா, ஸதோதகா முதலிய மஹாநதிகள் அங்கே ஓடுகின்றன. அவற்றின் கரைகளின்மீது தேவலோக வாஸிகள் முற்பிறவியில் தேவீ மந்த்ரத்தை ஜபித்தப் புண்யத்தால் இப்பிறவியில் இங்கு வந்து வஸிக்கின்றனர். இக் கோட் டையைச் சுற்றிலும் எட்டுத் திக்குகளிலும் இந்த்ரன் முதலிய திக்பாலகர்களது லோகங்களிருக்கின்றன. இந்த்ர நீலக்கோட்டை, முத்துக்கோட்டை இவ்விரண்டு கோட்டை களின் வாயிற்படிகளுக்கு இடையிலுள்ள ப்ரதேசத்தின் கீழ்த்திசையில் இந்த்ரலோகமும், அதற்கடுத்த மூலையில்

அக்னிலோகமும், தென் திக்கில் யமலோகமுமிருக்கிறது. யமலோகத்தில் யமதர்மன் தண்டதரனுய் உக்ரஸ்வபாவ முள்ளவனுயிருந்துகொண்டு ஸதா ஸ்ரீதேவதா மந்த்ரத்தை ஜபித்துக்கொண்டிருக்கின்ருர். தேவியின் ஏவலாளியான அவர் சித்ரகுப்தன் முதலிய யமபடர்களுடன் ஸ்ரீதேவீ தந்த்ர த்ரோஹிகளையும், குருவினுல் சபிக்கப்பட்டவர்களையும், துராசாரர்களையும், லலிதா த்வேஷிகளையும், கபட பக்தியுள்ளவர்களையும், மூர்க்கர்களையும், கர்வமுள்ளவர்களையும், மிக்க கொழுப்புள்ளவர்களையும், *மந்த்ரத்தைத் திருடுபவர்களையும், துர்மந்த்ரத்தை ஜபிப்பவர்களையும், துர்வித்யாதர்மங்களை ஆஶ்ரயித்தவர்களையும், நாஸ்திகர்களையும், பாபிகளையும், வீணுக ப்ராணிஹிம்ஸை செய்பவர்களையும் உலகத்தால் த்வேஷிக்கப்பட்டவர்களையும், மற்றப் பாபிகளையும், மஹா தேஜஸ்ஸையுடைய ஸ்ரீ தேவியின் ஆணையின்படி கால ஸூத்ரம், ரௌரவம், கும்பீபாகம், கோரமான அஸிபத்ரவனம், க்ருமிபக்ஷம், ப்ரதாபநம், ஜ்வாலாபக்ஷம், ஸூசிவேதம், அங்காரதாபநம் முதலிய கஷ்டமான நரகங்களில் தள்ளுகிருர்.

யமலோகத்திற்கு மேற்குத்திசையில், கரத்தில் கத்தி ஏந்திய நிருருதி, ராக்ஷஸ லோகத்திலிருந்துகொண்டு லலிதையை அர்ச்சித்துக்கொண்டிருக்கிருர். அதற்கு வடபுறத்தில் இரண்டு வாயிற்படிகளுக்கும் நடுவில் வாருண லோகத்தை ஆஶ்ரயித்து வருணனிருக்கின்ருர். அவர் வாருணீயெனும் மதுவின் பானத்தால் உன்மத்தராய் வெளுத்த ஶரீரமுள்ளவராய், ,மகரத்தை (மீனை) வாஹநமாக உடையவராய் ஸதா ஸ்ரீ தேவதா மந்த்ரத்தை ஜபஞ் செய்துகொண்டு, ஸ்ரீ தேவீக்ரமத்தை ஸாதிக்கிருர். ஸ்ரீ தேவதா தர்ஶந (ஶாஸ்த்ர)த்திற்கு விரோதிகளான த்வேஷிகளைப் பாஶபந்தத்தாற் கட்டி, அதோ மார்க்கத்தில் தள்ளுகிருர். தேவீ பக்தர்களையோவெனில் பந்தத்தினின்றும் விடுவிக்கிருர்.

---

* பிறருக்கு உபதேசிக்கும்போது அதைக்கேட்டு ஜபிப்பவர்கள்.

அந்த வருணலோகத்திற்கு வடக்கு மூலையில் மஹா ப்ரகாசமான வாயுலோகமிருக்கின்றது. அங்கே வாயு ஶரீரமுள்ளவர்களும், ஸதா பொங்கிவழியும் ஆனந்த முள்ளவர்களுமான ஸித்தர்களும், திவ்ய ரிஷிகளும், ஸ்வாஸாப்யாஸஞ்செய்யும் மற்றவர்களும், கோரக்ஷ நாதர் முதலியவர்களும், யோகாப்யாஸஞ் செய்யும் யோகிகளும் புடைசூழ, மஹா பலமுள்ள ஸ்ரீ மாருதேஶ் வரர் (வாயுபகவான்), பெரிய சிறந்த மானின்மீது ஏறி த்வஜமெனும் ஆயுதத்தைக் கரத்திலேந்தி, ஸதா லலிதா ஜபம், த்யாநம், க்ரமம், பூஜை இவைகளில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார். அகஸ்த்யரே! அவர் ஏழுவகையான மூர்த்த (வடிவ)ங்களையுடையவராயிருக்கின்றார். அந்த மாருதநாதருக்கு இடை, பிங்களை, ஸுஷும்னை எனும் மூவரும் மனைவிகளாவர். அவர்கள் ஸதா மதுபான மத்தர்களாயிருக்கின்றனர். ஆனந்தம் நிறைந்த அவயவ முள்ள மற்ற ஶக்திகளால் சூழப்பட்டவராயும், ஸ்ரீமானு யுமுள்ள அந்த மாருதேஶ்வரர் ஸதா பரதேவதா மந்த்ரத் தை ஜபித்துக்கொண்டிருக்கிறார். எந்த வலிமையால் கல்பாந்த காலத்தில் ஸ்தாவர ஜங்கமா வடிவமான மூவ் வுலகங்களும் தூள் தூளாக நாஶஞ்செய்யப்படுகின்றன வோ, அந்த வலிமை வ்ருத்தியாவதற்காக, வாயுதேவன் ஸர்வாபரணம் அணிந்த அந்த லலிதா பரமேஶ்வரியைப் பூஜித்துக்கொண்டும், த்யானித்துக்கொண்டும் இருக் கின்றார்.

அந்த வாயுலோகத்திற்குக் கிழக்குத் திக்கில் இருக் கிற யக்ஷலோகத்தில் இரண்டு வாயிற்படிகளுக்குமிடை யில் அழகிய காந்தியுள்ளவரான ஸ்ரீமான் யக்ஷேஶ்வரர் (குபேரன்) வஸிக்கிறார். * ஒன்பது வகையான நிதிகளு டனும், ரித்தி, வ்ருத்தி முதலிய ஶக்திகளுடனும் கூடி

* சங்கநிதி, பதுமநிதி, மஹாபத்மநிதி, மகரநிதி, கச்சபநிதி முகுந்தநிதி, குந்தநிதி, நீலநிதி, கர்வநிதி.

அவர் லலிதாபக்தர்களுக்கு ஸகல ஸம்பத்தையும் யதேஷ்டமாக அளிக்கிருர். பர்த்தாவுக்கு அனுகூலமான செய்கைகளையுடைய அழகிய யக்ஷஸ்த்ரீகளுடன் பல்வகையான மதுக்களால் பரதேவதையை ஆராதிக்கிருர். மணிபத்ரன், பூர்ணபத்ரன் மணிமான், மணிகந்தரன் முதலிய யக்ஷஸேனுபதிகளும் ஆங்கு வஸிக்கின்ருர்கள்.

யக்ஷ லோகத்திற்குக் கீழ்த்திசையில் மிகச் செல்வம் வாய்ந்ததும், நவரத்நகசிதமாயுள்ளதுமான ருத்ரலோகம் இருக்கிறது. அதற்கு அதிஷ்டானதேவர் ருத்ரனுவார். அவர் ஸதா கோபத்தால் ஜ்வலிப்பவராகவும், பெரிய பாணப்பெட்டிகளை எப்போதும் உடையவராகவும், ஜ்வலிக்கும் சிவந்த கண்களையுடையவராகவும், ஜடாமகுடஶோபையுள்ளவராகவும், ஸகல ஆபரணங்களையும் அணிந்தவராகவும் விளங்குகிருர். அவருக்கு ஸமமானவர்களும், மஹா பலமுள்ளவர்களும், உலகை எரிப்பதில் நிபுணர்களும், நாணேற்றிய வில்லையுடையவர்களும், பதினறு ஆவரணங்களில் வஸிப்பவர்களுமான ருத்ர, களால் சூழப்பட்டவரான மஹாருத்ரர் ஸதா தேவீ த்யானம் செய்பவராய், தேவீ பூஜையில் பேராசையுள்ளவராய் விளங்குகிருர். அநேக கோடி ருத்ராணீ கணங்கள் அவரைச் சூழ்ந்திருக்கின்றனர். அந்த ருத்ராணிகளும் மஹா ப்ரகாச சரீரங்களை உடையவர்களாகவும், நவ யௌவனச் செருக்குள்ளவர்களாகவும், லலிதா த்யானத்திலீடுபட்ட மனததர்களாகவும். ஸதா மதுபான மத்தர்களாகவுமிருக்கின்ருர். மூன்றுகூறுகளுள்ள ஶூலத்தைத்தரித்த ஸ்ரீமான் மஹாருத்ரர் ருத்ராணீ கணங்கள் புடைசூழ, ஹிரண்யபாஹு முதலிய இதர ருத்ரர்களாலும் ஸேவிக்கப்படுகிருர். அவர். ஸ்ரீலலிதோபாஸனையினின்றும் நழுவியவர்களையும், கர்வங்கொண்டவர்களையும் குருவினுல் திக்கரிக்கப்பட்டவர்களையும் ஶூலத்தாற் பிளந்து, கண்ணிலிருந்து தோன்றும் கடுங்கனலால்

எரித்து, அவர்களது பசுக்களையும், வேலைக்காரர்களை யும், ப்ரஜைகளையும் நாசஞ்செய்கிறார். அவர் தேவியின் ஆணையைச் செய்பவராகவும், மஹாவீரராகவும், தேவியின் கட்டளைகளை நிறைவேற்றுபவராகவும் இருந்துக் கொண்டு, மிக அழகிய ருத்ரலோகத்தில் ப்ரகாசிக்கிறார். அகஸ்த்ய மஹாரிஷியே! மஹாருத்ரருக்கு எல்லாவற்றையும் அழிக்கவல்லவர்களான பரிவார ருத்ரர்கள் எவ்வளவுபேர்களிருக்கின்றார்களோ அவர்களைப்பற்றிய யாவையும் கூற எவரால்தான் முடியும்? பூமியில் எந்த ருத்ரர்கள் தங்கி இருக்கின்றார்களோ அவர்களது ஸங்கியை ஆயிரங்களின் ஆயிரமாகும். த்யுலோகத்திலுள்ளவர்களும் ஆயிரமாயிரமாக இருக்கின்றனர். * எவர்களுக்கு அன்னமே பாணமோ, எவர்களுக்கு வாயுவே (வாதமே) சரங்களோ, எவர்களுக்கு மழையே பாணங்களோ அத்தகைய ருத்ரர்கள் மிக ப்ரகாச முடையவர்களாயும், சிவந்த நேத்ரங்களோடு மஹா தேஜஸ்ஸுள்ளவர்களாயும் விளங்குகின்றனர்.

அன்றியும், ஜடைகளை உடையவர்களாயும், கைகளில் தனுஸ்ஸை உடையவர்களாகவும், நீலகண்டமுடையவர்களாகவும், செந்நிறமாக திருமேனியை யுடையவர்களாகவும், (திடீரெனத் தோன்றவும் மறையவுங் கூடிய ஸாமர்த்யத்துடன் மனிதர்களுக்கு உபத்ரவஞ்செய்யும்) பூதங்களுக்கு அதிபதிகளாகவும், சிகை அற்றவர்களாகவும் ‡ புஜிக்கும் வஸ்துக்களிலிருந்து கொண்டு அவற்றைப் புஜிக்கும் ஜனங்களை வருத்துபவர்களாகவும், பானம் பண்ணு (அருந்)தற்குரிய த்ரவ வஸ்துக்களிலிருந்து கொண்டு அவற்றைப்பானம்பண்ணும் ஜனங்களை வாட்டுபவராயும், வழியைக் காப்பவர்களாயும், அதாவது தர்ம

* அபத்ய ஆஹாரத்தாலும், வாதரோகத்தாலும், அதிவ்ருஷ்டி (பெருமழை)யாலும் பகைவரைக் கொல்பவர்.

‡ தாது வைஷம்யத்தினல் ரோயையுண்டு பண்ணுபவர் ஸாயணசார்யர் ருத்ரபாஷ்யம்.

அதர்ம மார்க்கங்களை ரக்ஷிப்பவர்களாயும், காஶீ, ப்ரயாகை முதலிய சிறந்த புண்ய தீர்த்தங்களில் வஸிப்பவர்களாகவும், ஈட்டி பட்டாக்கத்தி முதலிய ஆயுதங்களைத் தரித்துள்ளவர்களுமான ஆயிரக்கணக்கான இதர ருத்ரர்கள் ஸ்ரீ லலிதாம்பாளின் ஆக்ஞையை நிறைவேற்றிக்கொண்டு நான்கு திசைகளிலும் வ்யாபித்து விளங்குகின்றனர். அந்த ருத்ரர்கள் யாவரும் மஹாத்மாக்களே; ஒரு க்ஷணத்தில் மூவுலகங்களையும் எரிக்க வல்லவர்கள். அவர்கள் பரதேவதையின் த்யானத்தில் ஈடுபட்டவர்களையும், தேவீ மந்த்ரங்களை ஜபிப்பவர்களையும், ஸ்ரீதேவியினிடத்தில் சலனமற்றபக்தி உடையவர்களையும் காப்பாற்றுகின்றனர்.

முத்துக்கோட்டையில் பதினாறு ஆவரணங்களையுடைய சக்ரத்தை ஆஶ்ரயித்துக்கொண்டு வஸிக்கும் ஹிரண்யபாஹு முதலிய எல்லா ருத்ரர்களும் ஜ்வலிக்கும் கோபமுடையவரான மஹாருத்ரரை உபாஸிக்கின்றனர்.

இங்ஙனம் முத்துக்கோட்டையை இறுதியாகவுடைய ரத்ன கோட்டைகளையும், அவற்றிலுள்ள அங்கணங்களையும், அவற்றைக் காப்பவர்களையும், அங்கே வஸிப்பவர்களையும் பற்றிய விஷயங்கள் என்னால் சுருக்கமாகக் கூறப்பட்டன.

இருபத்தொன்பதாம் அத்யாயம் முற்றிற்று.

---

## முப்பதாவது அத்யாயம்-101 ச்லோகங்கள்

### ருத்ராலய ருத்ர விசேஷ நாமங்கள்,

அகஸ்த்யர்: ஓ கருணாநிதியே! ஷோடஶ ஆவரண சக்ர மென்பதெது? ஆங்குள்ள ருத்ரர்கள் யாவர்? அவர்களின் நாமங்கள் எவை? எந்த எந்த ஆவரணத்தில் யார் யார் வஸிக்கின்றனர்? அவர்களுக்கு ஏற்பட்டுள்ள இடுகுறிப் பெயரையும் காரணப் பெயரையுங் கூறியருள்வீராக.

ஹயக்ரீவர்:— அங்கு முத்துச் சரங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்கும் ருத்ராலயம் ஒன்று இருக்கின்றது. அது ஐந்து யோஜனை அகலமும், ஐந்து யோஜனை நீளமுமுள்ளது. சுற்றிலும் பதினறு ஆவரணங்கள் சூழ மத்தியில் ஒரு மனோஹரமான ஆஸனமிருக்கின்றது. அம்மத்ய பிந்து பீடத்தில் ஜ்வலிக்கும் கோபமுள்ளவராயும், மூன்று கண்ணுள்ளவராயும், எப்போதும் ஸந்நத்தமாய் நாணேற்றிய வில்லையுடையவராயுமுள்ள மஹாருத்ரர் விளங்குகின்றனர். கடோத்பவரே! முதல் ஆவரணமான த்ரிகோணத்தில் 1. ஹிரண்யபாஹு; 2. ஸேநாநீ; 3. திஶாம்பதி என்னும் மூன்று ருத்ரர்கள் இருக்கின்றனர்.

## இரண்டாவது ஆவரணம்—ஷட்கோணம்.

1, வ்ருக்ஷர், 2. ஹரிகேஶர், 3. பஶுபதி, 4. ஸஸ்பிஞ்ஜரர், 5. த்விஷீமான் (மிகுந்த காந்தியுள்ளவர்) 6. பதீனும்பதி (தூமாதி, அர்ச்சிராதி முதலிய மார்க்கங்களுக்கு அதிபதி.)

## மூன்ருவது ஆவரணம்—அஷ்டகோணம்,

1. பப்ருஶர் (வ்ருஷபாரூடர்) 2. விவ்யாதி (சத்ருக்களை சிக்ஷிப்பவர்) 3. அந்நபதி, 4. ஹரிகேஶர் (கருத்த கேஶமுடையவர்) 5. உபவீதி; 6. புஷ்டபதி (பரிபூர்ண குண முள்ளவர்களுக்குப் பதி); 7. பவர், 8. ஹேதி.

## நான்காவது ஆவரணம்—தசதள கமலம்.

1. ஜகத்பதி: 2, ருத்ரர்; 3. ஆததாவி (நீண்ட தனுஸ்ஸால் ரக்ஷிப்பவர்). 4. க்ஷேத்ரபதி; 5. ஸூதர் (ஸாரதி); 6. அகந்த்யர் (கொல்லத்தகாதவர் ; 7. வநபதி; 8. ரோஹிதர் (ரக்த நிறமுடையவர்); 9. ஸ்தபதி (ப்ரபு) 10. வ்ருக்ஷபதி.

ஐந்தாவது ஆவரணம்—த்வாதஶதள கமலம்.

1. மந்த்ரீ; 2. வாணிஜர் (வர்த்தகர்களுக்கு யஜமானன்); 3. கக்ஷபதி (செடி கொடிகளின் பதி); 4 பவந்தீ (ப்ரபஞ்சத்திற்கு ஆதாரமானவர்) 5. வாரிவஸ்க்ருதர் (பக்தவத்ஸலன்); 6. ஔஷதிபதி; 7. உச்சைர்க்கோஷர் (உரத்த குரலுள்ளவர்); 8. ஆக்ரந்தயர் (சத்ருக்களை அழவைப்பவர்); 9. பத்தீநாம்பதி (பதாதிகளின் பதி) 10. க்ருத்ஸ்நவீதர் (ஸகலஸேனைகளாலும் சூழப்பட்டவர்) 11. தாவன் (சத்ருவைத் தொடர்ந்து ஓடுபவர்); 12. ஸத்வபதி (சரணாகத ரக்ஷகர்).

ஆருவது ஆவரணம்-பதின்மூன்று தளகமலம்.

1. ஸஹமானவர் (சத்ருக்களை ஸ்வாதீனப்படுத்திக் கொள்பவர்); 2. நிவ்யாதி (சத்ருக்களைச் சிக்ஷிப்பவர்); 3. ஆவ்யாதினீபதி (சூரஸேநாதிபதி); 4. ககுபர் (ப்ரதானர்); 5. நிஷங்கீ (கத்தி யேந்தியவர்); 6. ஸ்தேனபதி (ரஹஸ்யமாகத் திருடுபவருக்கு யஜமானன்); 7. நிஷங்கீ; 8. இஷுதிமான் (அம்பறுதூணியுடையவர்); 9. தஸ்கராணும்பதி (வெளிப்படையாய்த் திருடுபவருக்குப் பதி); 10. வஞ்சத் (ஸ்வாமி த்ரவ்யத்தை அபகரிப்பவர்); 11. பரிவஞ்சத் (எல்லா விவகாரங்களிலும் கபடி); 12. ஸ்தாயூநாம்பதி (நம்பியவர் பொருளைத் திருடுபவருக்குப் பதி); 13. நிசேரு (ஏமாறும் ஸமயம் பார்த்துத் திருடுபவர்).

ஏழாவது ஆவரணம்—ஷோடச (16) தளகமலம்.

1 பரிசரர் (திருடும் எண்ணத்தோடு எங்கும் திரிபவர்); 2 அரண்யபதி (வழிப்போக்கரைக் கொள்ளையடிக்கக் காட்டில் திரிபவர்); 3 ஸ்ருகாவி (வஜ்ராயுதத்தால் தம்மைக் காத்துக் கொள்பவர்); 4 ஜிகாம்ஸர்கள் (ப்ராணிகளைக் கொல்வதில் ஆசையுள்ளவர்); 5 முஷ்ணத்பதி

( உழவாளியாயிருந்து யஜமானனது தான்யத்தைத் திரு டுபவர்களின் பதி); 6 அஸிமத்துக்கள் (கத்தியை யுடை யவர்கள்); 7 நக்தஞ்சரர் (திருடுவதற்கு இரவில் திரிபவர்) 8 ப்ரக்ருந்தபதி (கொன்று திருடுபவருக்குப்பதி); 9 உஷ்ணீஷீ (தலைப்பாகை யணிந்து பெரிய மனிதனைப் போல் நடித்துத் திருடுபவர்) 10 கிரிசரர் ( காட்டில் கட்டை வெட்ட வருபவரைப் பறிப்பவர்); 11. குலுஞ்ச பதி (பூமியைத் திருடும் திருடர்க்குப் பதி); 12 இஷு மத்துக்கள் (பயப்படுவதற்கு கையில்அம்பையுடையவர்) தன் வாவிகள் (பயப்படுத்த வில்லுடையவர்); 14 ஆதன் வானவர்கள் (வில்லில் நாணேற்றுபவர்); 15 ப்ரதித தானர்கள் (வில்லில் அம்பைத் தொடுப்பவர்); 16 ஆயச் சத்துக்கள் ( நாணை இழுப்பவர்கள்) ஆகிய இப்பதினறு ருத்ரர்களும் ஏழாவது ஆவரணமாகும் பதினறு இதழ்க் கமலத்தில் வஸிப்பவர்களாவர்.

## எட்டாவது ஆவரணம்—பதினெட்டிதழ் கமலம்.

1 விஸ்ருஜத்துக்கள் (பாணத்தை விடுப்பவர்); 2 அஸ்யத்துக்கள் (குறிவரை பாணத்தைச் செலுத்துபவர்) 3 வித்யத்துக்கள் (லக்ஷ்யத்தைப் பாணத்தாலடிப்பவர்); 4 ஆஸீநர்கள் (உட்கார்ந்திருப்பவர்); 5 ஶ்யாநர்கள் (படுத் திருப்பவர்கள்); 6 ஸ்வபத்துக்கள் (தூங்குபவர்); 7 ஜாக் ரத்துக்கள் ( விழித்திருப்பவர்); 8 திஷ்டத்துக்கள் (நின் றுக்கொண்டிருப்பவர்); 9 தாவத்துக்கள் ( ஓடித்திரிபவர்); 10 ஸபாப்ய: (ஸபை வடிவமாக இருப்பவர்); 11 ஸபா பதிகள்; 12 அஶ்வர்கள்; 13 அஶ்வபதிகள்; 14 ஆவ்- யாதினீக்கள் (எங்கும் அடிப்பவர்); விவித்யந்திகள் (நன் ருக அடிப்பவர்); 16 உகணர்கள் (உத்க்ருஷ்டமான கணஸ்வரூபமானவர்); 17 த்ரும்ஹதீகள் (ஹிம்சை செய் பவர்); 18 க்ருத்ஸர் (விஷய ஆசையுள்ளவர்) ஆகிய இப்பதினெட்டு ருத்ரர்களும் பதினெட்டுத் தளமுடைய எட்டாவது ஆவரண வாஸிகளாவர்.

## ஒன்பதாவது ஆவரணம்-இருபது தளங்களுடைய கமலம்.

1 க்ருத்ஸபதி; 2 வ்ராதங்கள் (நாநா ஜாதிகளின் ஸமூஹங்கள்); 3 வ்ராதபதிகள்; 4 கணர்கள்; 5 கணபதிகள்; 6 விரூபர்கள்; 7 விஸ்வரூபர்கள்; 8 மஹத்துக்கள் 9 க்ஷுல்லகர்கள் (அற்பர்கள்); 10 ரதிகள்; 11 அரதர்கள்; 12 ரதர்கள்; 13 ரதபதிகள்; 14 ஸேனைகள்; 15 ஸேநாநிகள்; 16 க்ஷத்தர்கள் (குதிரைப்பாகர்); 17 ஸங்க்ரஹீதாக்கள் (கடிவாளத்தை யிழுத்துப் பிடிக்கும் ஸாரதிகள்); 18 தக்ஷர்கள் (தச்சர்); 19 ரதகாரர்கள் (ரதங்கள் செய்பவர்); 20 குலாலர்கள் (குயவர்கள்) இவ்விருபது வகையான ருத்ரர்களும் ஒன்பதாவது ஆவரணத்தில் இருக்கின்றனர்.

## பத்தாவது ஆவரணம்-இருபத்திரண்டு தளகமலம்-

1 கர்மாரர்கள் (கம்மாளர்); 2 புஞ்ஜிஷ்டர்கள் (பக்ஷிகளைக் கொல்பவர்); 3 நிஷாதர்கள் (செம்படவர்கள்); 4 இஷுக்ருத்துக்கள் (பாணங்களைச் செய்பவர்கள்); 5 தன் வக்ருத்துக்கள் (வில்லைச் செய்பவர்); 6 ம்ருகயுக்கள் (வேட்டைக்காரர்); 7 ஶ்வநிக்கள் (நாய்களையுடையவர்): 8 ஶ்வாக்கள் (நாய்கள்); 9 ஶ்வபதிகள் (நாய்களுக்கு யஜமானர்கள்); 10 பவன்ஸ்ருஷ்டிகர்த்தா; 11 ருத்ரர் (துக்கத்தைப் போக்குபவர்); 12 ஶர்வர் (பாவத்தை நீக்குபவர்): 13 பசுபதி; 14 நீலக்ரீவர்; 15 ஶிதிகண்டர்; 16 கபர்த்தி; 17 வ்யுப்த கேஶர் (முண்டனஞ் செய்துக் கொண்டவர்); 18 ஸஹஸ்ராக்ஷர்; 19 ஶதஸ்தன்வா; 20 கிரிஶர்; 21 சிபிவிஷ்டர் (விஷ்ணுஸ்வரூபர்) 22 மீடுஷ்டமர் (பெருமழை பெய்யும் மேக வடிவினர்) ஆகிய இவ்விருபத்திரண்டு ருத்ரர்கள் பத்தாவதாவரணத்தில் வஸிக்கின்றனர்.

**பதினோராவதாவரணம்-இருபத்திநான்கு தளகமலம்**

1 இஷுமான்; 2 ஹ்ரஸ்வன் (குள்ளமானவர்); 3 வாமனர் (குறுகிய அவயவங்களையுடையவர்); 4 ப்ருஹத் (பெரிய உருவமுள்ளவர்); 5 வர்ஷீயஸ் (குணங்களால் பெரியவர்); 6 வ்ருத்தன் (வயதாற் பெரியவன்); 7 ஸம் வ்ருத்வன் (வேதங்களால் புகழப்பட்டவன்); 8 அக்ரியன் (ஸ்ருஷ்டிக்கு முன்னுள்ளவன்); 9 ப்ரதமர் (முக்யமான வர்); 10 ஆசு (வ்யாபகர்); 11 அஜிரர் (நடப்பதில் ஸமர்த்தர்); 12 ஸீக்ரயர் (சீக்கிரம் செல்பவர்) 13 ஸீப் யர் (ஜலப்ரவாஹத்திலிருப்பவர்); 14 ஊர்ம்யர் (அலை களிலுள்ளவர்); 15 அவஸ்வன்யர் (ஓட்டமற்று தேங் கும் ஜலத்திலிருப்பவர்); 16 ஸ்ரோதஸ்யர் (ஓடும் ஜலத் திலுள்ளவர்) 17 த்வீப்யர் (தீவிலுள்ளவர்) 18 ஜ்யேஷ் டர் (வித்தை; செல்வம், இவைகளால் சிறந்தவர்); 19 கநி ஷ்டர் (அவற்றில் குறைந்தவர்); 20 பூர்வஜர் (மூத்தவர்) 21 அபரஜர் (பின் பிறந்தவர்); 22 மத்யமர் (மத்தியில் பிறந்தவர்) 23 அபகல்பர் (ஸிஸுக்கள்); 24 ஜகன்யர் (ப்ருஷ்டபாகத்தில் பிறக்கும் பஸுங் கன்று வடிவமானவர்) இவர்கள் இருபத்து நான்குபேரும் பதினோராவது ஆவரணத்தில் வஸிப்பவர்களாவர்.

**பன்னிரண்டாவதாவரணம்-இருபத்தாறு தளகமலம்.**

1 புத்னியர் (மரத்தின் அடிக்கட்டை போலிருப்பவர்) 2 ஸோப்யர் (இருவினைகளோடு கூடியவர்); 3 ப்ரதிஸர்யர் (காப்பணிந்தவர்); 4 யாம்யர் (பாபிகளை ஸிக்ஷிப்ப பவர்); 5 க்ஷேம்யர் (மோக்ஷத்திற்குத் தகுதியுடையவர்) 6 உர்வர்யர் (விளைவோடு கூடிய நிலத்திற்குரியவர்); 7 கல்யர் (வண்டல் வடிவமாயிருப்பவர்); ஸ்லோக்யர் (துதிக்கப்படுபவர்); 9 அவஸான்யர் (வேதாந்தத்தால் துதிக்கப்படுபவர்); 10 வந்யர் (காட்டில் உற்பத்தியாகும் மரம் முதலிய வடிவினர்); 11 கக்ஷ்யர் (செடி கொடி வடிவி னர்) 12 ஸ்ரவர் (ஸப்தரூபி); 13 ப்ரதிஸ்ரவர் (ப்ரதி த்வனி

வடிவமாயிருப்பவர்); 14 ஆஶுஷேணர் (வேகமாய்ச்செல்லும் ஸேனையையுடையவர்); 15 ஆஶுரதர் (வேகமாய்ச் செல்லும் ரதமுள்ளவர்); 16 ஸூரர்; 17 அவபிந்தர் (ஶத்ருவின் உடலைப்பிளப்பவர்): 18 வர்மீ (கவசமணிந்தவர்); 19 வரூதீ (நல்ல வீட்டையுடையவர்); 20 பில்மீ (தலைக்குக் கவசமுள்ளவர்): 21 கவசீ (தேஹரக்ஷையையுடையவர்); 22 ஶ்ருதர் (வேக ப்ரஸித்தர்); 23 ஶ்ருதஸேநர் (ப்ரஸித்தமான ஸேனையையுடையவர்); 24 துந்துப்யர் (துந்துபி என்னும் வாத்யத்தின் ஶப்தவடிவமாயிருப்பவர்); 25 ஆஹநந்யர் (பேரிகையை அடிக்கும் கோல் வடிவமானவர்); 26 த்ருஷ்ணு (சண்டையில் பின்னிடாதவர்) ஆகிய இவ்விருபத்தாறு ருத்ரர்களும் மஹா பலசாலிகளாய்ப் பன்னிரண்டாவது ஆவரணத்தில் வஸிக்கின்றனர்.

## பதின்மூன்ருவதாவரணம்—முப்பது தளங்களுள்ள கமலம்.

1 ப்ரம்ருஶர் (பராமர்ஶம் செய்பவர்); 2 தூதர்; 3 ப்ரஹிதர் (அனுப்பப்பட்டவர்); 4 நிஷங்கீ (கட்கத்தையுடையவர்); 5 இஷுதிமான் (அம்பறுத்தூணியையுடையவர்); 6 தீக்ஷ்ணேஷு (கூர்மையான அம்புகளையுடையவர்); 7 ஆயுதி (பல ஆயுதங்களையுடைவர்); 8 ஸ்வாயுதீ, (நல்ல ஆயுதமான த்ரிஸூலமுடையவர்); 9 ஸுதன்வா (பிநாகமென்னும் வில்லையுடையவர்): 10 ஸ்ருத்யர் (காலடிப்பாதை வடிவமாயிருப்பவர்); 11 பத்யர் (பெரிய வழி வடிவமானவர்); 12 காட்யர் (சிறிய வாய்க்கால் ஜல வடிவினர்); 13 நீப்யர் (காணுற்று ஜல வடிவினர்); 14 ஸூத்யர் (சேற்று நீர் வடிவினர்); 15 ஸரஸ்யர் (குளத்து ஜலஸ்வரூபி); 16 நாத்யர் (நதீ ஜல வடிவினர்); 17 வைஶந்த்யர் (சிறிய ஓடையின் ஜல வடிவினர்); 18 கூப்யர் (கிணற்று நீர் வடிவினர்); 19 அவட்யர் (பள்ளத்தில்

நிற்கும் ஜல வடிவினர்); 20 வர்ஷ்யர் (மழை ஜல வடிவினர்); 21 அவர்ஷ்யர் (மழையால் ஏற்படாத ஸமுத்ர ஜல வடிவினர்); 22 மேக்யர் (மேக ஜலமாயிருப்பவர்): 23 வித்யுத்பர் (மின்னலோடுகூடியவர்); 24 ஈத்ரியர் (நிர்மலமான ஶரத்கால மேக வடிவினர்); 25 ஆதப்யர் (வெயிலோடு கூடிய மழை வடிவமாயிருப்பவர்); 26 வாத்யர் (காற்று மழை வடிவினர்); 27 ரேஷ்மியர் (ப்ரளயகால வடிவமாயிருப்பவர்); 28 வாஸ்தவ்யர் (தனதான்யாதி வஸ்து ரூபமாயிருப்பவர்) 29 வாஸ்துபர் (க்ருஹ நிர்மாணத்திற்கேற்ற பூமியைக் காப்பவர்); 30 ஸோமர் (உமையுடன் கூடியவர்) இம் மூப்பது ருத்ரர்களும் பதின்மூன்றுவதாவரணத்தின் முப்பது தளங்களில் இருப்பவர்களாவர்.

**பதினுன்காவதாவரணம்—முப்பது தள கமலம்.**

1 ருத்ரர் (ஸம்ஸார துக்கத்தைத் தொலைப்பவர்); 2 தாம்ரர் (உதயஸூர்யன்போல் சிவந்த நிறமுடையவர்); 3 அருணர் (வண்மை கலந்த சிவந்த நிறமுடையவர்); 4 சங்கரர் (ஸுகத்தைப் பொருத்துபவர்); 5 பசுபதி (பசுக்களைக் காப்பவர்); 6 உக்ரர் (கோபமுடையவர்); 7 பீமர் (பார்த்தமாத்திரத்தில் பயமுண்டாக்குபவர்); 8 அக்ரேவதர் (அநாயாஸமாய் எதிரிலுள்ள சத்ருவைக் கொல்பவர்): 9 தூரேவதர் (தூரத்திலிருந்தாலும் கொல்பவர்); 10 ஹந்தா (எல்லோரையும் கொல்பவர்); 11 ஹநீயான் (ப்ரளய காலத்தில் யாவரையும் ஒரே க்ஷணத்தில் கொல்பவர்); 12 வ்ருக்ஷர்; 13 ஹரிகேசர்; 14 தாரர் (ப்ரணவப் பொருள்); 15 சம்பு (ஸுகத்தையளிப்பவர்); 16 மயோபூ (பரசுகத்தை அளிப்பவர்); 17 ஶங்கரர்; 18 மயஸ்கரர்; 19 ஶிவன்; 20 ஶிவதரர்; 21 தீர்த்யர் (புண்ய தீர்த்தங்களில் விளங்குபவர்); 22 கூல்யர் (புண்ய நதீ தீரங்களில் லிங்க ரூபமாய் விளங்குபவர்); 23 பார்யர் (நதியின் அக்கரையில் விளங்குபவர்; கரைகண்ட ஞானிகளால் த்யானிக்கப்படுபவர்); 24 அவார்யர் (இக் கரையில் விளங்குபவர்;

என்றால் காம்ய பலனையளிப்பவர்); 25 ப்ரதரணர் (சிறந்த ஜபாதிகளால் பாபத்தைப் போக்கடிப்பவர்); 26 உத்தரணர் (தத்வ ஞானத்தை அருள்பவர்); 27 ஆதார்யர் (ஞானிகளையும் மறுபடி ஸம்ஸாரத்தில் இழுத்துக் கர்ம பலனைத் தருபவர்); 28 ஆலாத்யர் (ஜீவர்களைத் தூண்டுபவர்); 29 சஷ்ப்யர் (புண்ய நதீ தீரங்களில் முளைத்த இளம்புல்; இளநாணல் நுனிகள் இவற்றால் அர்ச்சிக்கத் தக்கவர்); 30 பேன்யர் (நதீ ஜலத்திலுள்ள நுரை வடிவமானவர்) இம் முப்பதுபேரும் மிக்க கோபத்தோடு கூடியவர்களாய்ப் பதினான்காவதாவரணத்தில் விளங்குபவராவர்.

## பதினைந்தாவதாவரணம்

### .முப்பத்திரண்டு தளங்களுடைய கமலம்.

1 ஸிகத்யர் (மணல் வடிவமாயிருப்பவர்); 2 ப்ரவாஹ்யர் (வெள்ள வடிவமாயுள்ளவர்); 3 இரிண்யர் (களர் நிலத்தில் இருப்பவர்); 4 ப்ரபத்யர் (வெகு ஜனங்கள் நடமாடும் ராஜ வீதியிலிருப்பவர்); 5 கிம்சிலர் (சுக்கான் கல் நிறைந்த பூமியில் இருப்பவர்); 6 க்ஷயணர் (வாஸ யோக்யமான ப்ரதேசத்தில் இருப்பவர்); 7 கபர்த்தீ (ஜடையுடையவர்); 8 புலஸ்தீ (அன்பர்க்கருள எப்பொழுதும் அவர் முன் நிற்பவர்); 9 கோஷ்ட்யர் (பசுக் கொட்டில்களில் வஸிப்பவர்); 10 க்ருஹ்யர் (வீடுகளில் வஸிப்பவர்); 11 தல்ப்யர் (படுக்கையை வாஸஸ்தலமாயுடையவர்); 12 கேஹ்யர் (அரண்மனையில் வஸிப்பவர்); 13 காட்யர் (முட்கள் நிறைந்த காட்டில் வஸிப்பவர்); 14 கஹ்வரேஷ்டர் (மலைக்குகைகளில் வஸிப்பவர்); 15 ஹ்ருதய்யர் (மடுவில் வஸிப்பவர்); 16 நிவேஷ்ப்யர் (பனிஜலத்தில் வஸிப்பவர்); 17 பாம்ஸவ்யர் (பரமாணுக்களில் வஸிப்பவர்); 18 ரஜஸ்யர் (தூ(சி)ளிகளில் இருப்பவர்); 19 சுஷ்க்யர் (உலர்ந்த விறகில் வஸிப்பவர்); .20 ஹரித்யர்;

(ஈர விறகிலுள்ளவர்); 21 லோப்யர் (புல் முளையாத கட்டாந்தரையில் வஸிப்பவர்): 22 உலப்யர் (அற்பமான புற்களில் இருப்பவர்); 23 ஊர்வ்யர் (பூமியில் இருப்பவர்); 24 ஸூர்ம்யர் (பெரிய அலைகளோடு கூடிய நதியில் வஸிப்பவர்); 25 பர்ண்யர் (இலைகளில் வஸிப்பவர்); 26 பர்ணசத்யர் (சருகுகளில் இருப்பவர்); 27 அபகுரமாணர் (ஆயுதங்களைக் கையில் ஏந்தியவர்); 28 அபிக்னர் (சத்ருக்களை எதிர்த்து அடிப்பவர்); 29 ஆக்கிதத்து (கொஞ்சமாய்க் கஷ்டப்படுத்துபவர்); 30 ப்ரக்கிதத்து (அதிகமாய்த் துன்பப்படுத்துபவர்); 31 கிரிகர்கள் (தமது பக்தர்களுக்குப் பணத்தை வாரி இறைப்பவர்கள்); 32 தேவஹ்ருதயர் (தேவதைகளுக்குப் பிரியமானவர்கள்) ஆகிய இம் முப்பத்திரண்டு ருத்திரர்களும் பதினைந்தாவதாகும் முப்பத்திரண்டு தள கமலத்தில் விளங்குகின்றவராவர்.

## பதினாறுவது ஆவரணம்—பூபுரம்.

## (நான்கு துவாரங்களோடு கூடிய நாற்சதுரம்).

1. பூர்வ துவாரத்தில் விக்ஷீணகர் (நாசமில்லாதவர்); 2. தக்ஷிண துவாரத்தில் விசின்வத்கர் (ஜீவர்களின் தர்மாதர்மங்களைப் பரிசித்துணர்பவர்); 3. மேற்குத் துவாரத்தில் ஆநிர்ஹதர் (பாவந்தொலைப்பவர்); 4. உத்தர துவாரத்தில் ஆமீவத்கர்கள் (எங்கும் விஜ்ரும்பித்துள்ளவர்).

இவர்கள் நால்வரும் பதினாறுவது ஆவரணத்தில் நான்கு துவாரங்களிலும் ஆயுதங்களுடன் வஸிக்கின்றனர். மேற்கூறிய பதினைந்து ஆவரணங்களிலுள்ள ருத்ரர்கள் யாவரும், மஹாருத்ரரை உபாஸித்துக்கொண்டு விளங்குகின்றனர்; அம் மஹாருத்ரரோவெனில் ஸ்ரீ லலிதா தேவியின் ஆக்ஞையை நிறைவேற்றிக் கொண்டு ஸர்வ ஜகத்தின் க்ஷேமத்திற்காக முத்துக்கோட்டையின் ஈசான கோணத்தில் இருக்கின்றார்.

மஹாபலம் வாய்ந்தவரும், ஶதருத்ரீயரென்று கணிக்கப்பட்டவருமான மேற்கூறிய ருத்ரர்கள் இரவும், பகலும் ஸ்ரீ தேவீ பக்தர்களைக் காக்கின்றனர். லலிதா தேவியினிடத்தில் பக்தியற்றவர்களுக்குப் பலவகையான இடையூறுகளை உண்டாக்குகின்றனர். இங்ஙனம் இந்திரன் முதலிய அஷ்ட திக்பாலர்கள் முத்துக்கோட்டையை ஆஶ்ரயித்துக்கொண்டும், ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியை ஸேவித்துக்கொண்டும் வஸிக்கின்றனர்.

முத்துக்கோட்டைக்கு ஏழு யோஜனை தூரத்திலுள்ள கோட்டைக்கு மரகதக் கோட்டையென்று பெயர். அது நான்கு யோஜனை உயரமுள்ளது. முன் கோட்டைகளுக்குள்ளனபோலவே அதற்கும் துவாரங்களும், கோபுரங்களும் அமையப்பெற்று மிக அழகாக விளங்குகின்றது. அங்கே, அக்னி முதலிய நான்கு மூலைகளிலும் மந்த்ரிணி தேவியினது மாளிகையைப்போலவே மிக விஸ்தாரமாயுள்ள நான்கு நிலயங்கள் இருக்கின்றன. பண்டாஸுர யுத்த காலத்தில் கிரி சக்ரமெனும் ரதேந்திரத்தின் தட்டுக்களில் எந்த எந்தச் சக்திகள் இருந்தனரோ, அந்த அந்தச் சக்திகளே இந்த மாளிகைகளிலும் விளங்குகின்றனர். ஆங்குள்ள ப்ரதேசம் முழுமையும் மரகத மயமாகவே இருக்கின்றது. அங்கே ஸ்வர்ணமயமான பனைமரங்களும், மற்றும் தேவையான ஸகல வஸ்துக்களும் நிறைந்திருக்கின்றன. ஆங்குள்ள ஶக்திகளனைவரும் தண்டநாதைக்கு ஸமமான அழகு வாய்ந்தவர்களாவர். அவர்கள் அங்கே விளையாட்டாகக் கலப்பை, உலக்கை முதலிய ஆயுதங்களைச் சுழற்றிக்கொண்டு ஸஞ்சரிக்கின்றனர்; அன்றியும், அங்கே, விசித்ரமானவைகளாகவும், இரு யோஜனை உயரம் ஓங்கி வளர்ந்தனவாயும், விஶாலமான கிளைகள், ஸ்வர்ணமயமானதும் மிக வழுவழுப்புள்ளதுமான பட்டை இவற்றோடு கூடியனவாயும், நல்ல நிழலைத் தருவனவாயும், இனிய பழக் குலைகளின் சுமையால்

சிறிது வளைந்தனவாயும், வேர்முதல் நுனிவரை கட்டப் பட்ட மதுக்குடங்களை உடையனவாயுமுள்ள கணக்கற்ற பனை மரங்கள் இருக்கின்றன, தண்டநாதையின் ப்ரீதிக் காகச் சிற்பிகள் இவற்றை மிக அழகாகப் படைத்துள் ளார்கள்.

ஜ்ரும்பினீ முதலிய சக்ர தேவிகளும், ஹேதுகர் முதலிய பைரவர்களும், ஏழு நிக்ரஹ தேவிகளும், அப் பனைமரங்களில் உற்பத்தியாகும் இனிய ஸுரையைப் பருகிப் பருகி மதோன்மத்தர்களாய்க் களித்துக் கூத்தாடு கின்றனர்.

நான்கு மூலைகளிலும், தண்டினீ தேவிக்கு எங்கே எங்கே வீடுகளிருக்கின்றனவோ, அங்கே அங்கே கிழக்கு முதலிய நான்கு திசைகளிலும், உன்மத்த பைரவி, ஸ்வப் நேசி, திரஸ்கரிணி, கிரிபதா என்னும் நான்கு ஸக்திகள் ஸ்ரீ தண்டநாதையை ஸேவிக்கின்றனர்.

இந்த அங்கணம் முழுமையும் ஒரே மரகத மயமாய் விளங்குகின்றது. தண்டநாதையானவள், கேவலம் அபிமா னத்தினுல் மாத்ரம் இங்கு வஸிக்கின்றுளே தவிர, பரதேவதையின் ஸேவையின் பொருட்டு அவள் முக்ய மாய் வஸிப்பது மஹாபத்மாடவீ ஸ்தலமாகும்.

இந்த ஸ்தலம் பரதேவதையின் வாஸஸ்தலத்திற்கு அதி ஸமீபமாயிருப்பதால், மஹாராக்ஞியை ஸேவிப்ப தற்காகத் தண்டநாதைக்கு ஆங்கோரழகிய மந்திரம் அமைக்கப்பட்டிருக்கின்றது.

இம் மரகதக் கோட்டைக்கு ஏழு யோஜனை தூரத்தில் உதயகால இளம் ஸூர்யனைப்போலச்செந்நிறமாய் ப்ரகா ஸிக்கும் பவழக்கோட்டை இருக்கின்றது. ஆங்குள்ள ஸ்தலமெல்லாம் பவழமயமாகவே இருக்கின்றது. அங்கே பவழநிற மேனியோடுகூடிய சதுர்முகன் ஸகல முனீஸ் வரர்களுடன் கூட ப்ரம்ஹ லோகத்திலிருந்து வந்து மரீசி

முதலிய ப்ரஜாபதிகளுடன் ஸ்ரீ லலிதாதேவியின் தர்ஶனத்திற்காக எதிர்பார்த்துக்கொண்டு வஸித்துக்கொண்டிருக்கிறார். லலிதையின் கட்டளையால் ப்ரம்ஹலோகத்திலிருந்து *பதினான்கு வித்தைகளும், ஆயிரக்கணக்கான உபவித்தைகளும், அறுபத்துநான்கு கலைகளும் அழகிய வடிவங்களை ஏற்று, ஜகத்தின் க்ஷேமத்திற்காக அக்கோட்டையில் வஸிக்கின்றன.

பவழக்கோட்டைக்கு ஏழாவது யோஜனை தூரத்தில் மாணிக்க மண்டபமெனும் ஓரங்கணமிருக்கின்றது. அது நானாவித ரத்னங்களால் கட்டப்பட்டுள்ளதாகும். இதுவும் அழகிய கோபுரங்களோடும், அற்புதமான வாயிற்படிகளோடும் அமைக்கப்பட்டிருக்கின்றது. இதன் இடையில் ஸ்ரீ லலிதையைப் பூஜிப்பதில் பேரவாக்கொண்டுள்ள விஷ்ணு வஸிக்கும் விஷ்ணுலோகமிருக்கின்றது. அதில் மாதவன் நான்காகவும், பத்தாகவும், பன்னிரண்டாகவும் பிரிக்கப்பட்டுள்ள மூர்த்தி பேதங்களையுடையவராக விளங்குகிறார். அன்றியும், பண்டாஸுர மஹாயுத்தத்தில் பரதேவதையின் நகங்களிலிருந்து தோன்றிய மச்ச, கூர்மாதி, தஶாவதார நாதர்களும் அவ்வங்கணத்தில் வஸிக்கின்றனர். முன் கூறப்பட்ட கோட்டைகளைவிட, இதற்கு விசேஷமாய் ஏற்பட்டுள்ள சிறப்பானது மேல் கூரையேயாகும். இக் கூரை மாணிக்கக் கற்களாலேயே ஆக்கப்பட்டிருக்கின்றது. இம் மாணிக்க மண்டபத்தில், ஶங்கு, சக்ர, கதாதரனாகிய பகவான் பன்னிரண்டு ரூபங்களைத் தாங்கிக் கிழக்கு முதலிய திக்குகளிலிருந்து கொண்டு அதை ரக்ஷிக்கின்றார்.

---

*பதினான்கு வித்தைகளாவன:- 4 வேதங்கள்; சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்னும் 6 அங்கங்கள்; புராணம், ந்யாயம், மீமாம்ஸை, தர்மசாஸ்த்ரம் என்னும் நான்கு உப அங்கங்களாம்.

அ∴தெங்ஙனமெனில், கிழக்கே ஸ்வர்ணச் சாயை யுள்ளவனும் சக்ரபாணியுமான கேசவனும், மேற்கே நீல மேக ஶ்யாமளனும் ஶங்கத்தைத் தரித்தவனுமான நாரா யணனும், ஊர்த்வ பாகத்தில் இந்த்ரநீல நிறத்தனான மாதவனும், தெற்கே சந்த்ர ப்ரபையைப்போன்ற வெள் ளைத் திருமேனியையுடைய கோவிந்தனும், வடக்குத் திசையில் தாமரைப்பூவின் கேஸரங்களைப் போன்ற நிறமுடையவரும் ஹலாயுதருமாகிய விஷ்ணுவும், ஆக்னேயத்தில் கமலாக்ஷனும் முஸலாயுதனுமாகிய மதுஸூதனனும், நிருருதி மூலையில் அக்னியைப்போல் ஜ்வலிக்கும் தேஜஸ்ஸுள்ளவனும் கட்கதாரியுமான த்ரி விக்ரமனும், வாயுகோணத்தில் பால ஸூர்யனைப்போல் ப்ரகாஶிக்கும் ஶரீரமுடையவரும், வஜ்ரஹஸ்தருமாகிய வாமனரும், ஈஶான்யத்தில் புண்டரீகாக்ஷனும் பட்டஸ மென்னும் ஆயுதத்தைத் தரித்தவனுமாகிய ஸ்ரீதரனும், அதோ பாகத்தில், மின்னல்போல் ப்ரகாஶிப்பவரும் முத்கரமென்னும் ஆயுதத்தைப் பூண்டவருமான ஹ்ருஷீகேசரும் ரக்ஷித்துக்கொண்டு விளங்குகின்றார்கள். ஆயிரம் ஆதித்யர்கள் உதயமானாற்போலுள்ள ப்ரகாஶ முடைய பத்மநாபர் சார்ங்கபாணியாய் அம்மாணிக்க மண்டபத்தை ப்ரதக்ஷிணமாயும்; ஸகல விதமான ஆயுதங் களைத் தரித்தவரும், ஸர்வ ஶக்தி வாய்ந்தவரும், ஸர்வக்ஞ ரும், ஸர்வதோமுகரும் (எங்கும் முகமுள்ளவர்), இந்த்ர கோபம்போல் சிவந்த திருமேனியுடையவரும், பாஶாயுத ரும், எவராலும் தோற்கடிக்க முடியாதவரும், ஸர்வாத்மா ஆனவருமாகிய தாமோதரன் ஸ்ரீலலிதா பக்தி நிறைந்தவ ராய் அம்மண்டபத்தையப்ரதக்ஷிணமாயும் சுற்றிவந்து கொண்டு அதை ரக்ஷிக்கின்றார். இங்ஙனம் பன்னிரண்டு மூர்த்தி பேதங்களோடுகூடிய பகவான் கமலாக்ஷன் விஷ்ணுலோகத்தில் விளங்குகின்றார்.

இந்நாநா ரத்னக்கோட்டைக்கு ஏழு யோஜனை தூரத்தில் ஸஹஸ்ரஸ்தம்ப (ஆயிரக்கால்) மண்டபம் ஒன்றிருக்கின்றது. அது நாநாவிதமான ரத்னக் கற்களால் இழைக்கப்பட்டும், பல வகையான கற்பகவ்ருக்ஷங்களால் அலங்கரிக்கப்பட்டும் விளங்குகின்றது.

அங்கே குறுக்காகவும், நெடுக்காகவும் உள்ள ஒவ்வொரு வரிசையிலும், நான்கு திக்குகளிலும், ஆயிரம் ஆயிரம் தூண்கள் இருக்கின்றன. இம் மண்டபத்தின் மேற்பரப்பு முன்னர் கூறப்பட்ட மாணிக்க மண்டபத்திற்குள்ளது போலவே ரத்ன மரங்களாலாக்கப்பட்டதாகும். அதில் மஹாப்ரகாஶமுள்ள சிவலோகமானது விளங்குகின்றது. அங்கே காமிகம் முதலிய இருபத்தெட்டு சிவாகமங்களும் உடலெடுத்து ப்ரகாஶிக்கின்றன நந்தி, ப்ருங்கி, மஹாகாளர் முதலிய உத்தமமான முப்பத்தாறு தேவர்களும், ஆயிரக்கணக்கான கஜாநநர்களும் அங்கே வஸிக்கின்றனர். ஆயிரக்கால் மண்டபமான அச்சிவலோகத்தில், ஸகல வித்யைகளுக்கு அதிபதியாயும், சந்த்ரசேகரராயுமுள்ள ஈஶானர் ஸ்ரீ லலிதாதேவியின் ஆக்ஞையைப் பரிபாலித்துக் கொண்டு விளங்குகின்றார். அவர் எப்போதும் ஆனந்த மனமுள்ளவராய் ஸ்ரீ லலிதா மந்த்ரத்தை ஜபம் செய்துகொண்டும், தமது பக்தர்களுக்கு, லலிதா மந்த்ரம் ஸித்தியாகும் பொருட்டு மங்களகரமான தமது த்ருஷ்டியால் அவர்களுக்கு உள்ளும் புறமுமுள்ள அந்தகாரக்கூட்டத்தை ஒழிப்பதில் மிக்க ஸாமர்த்யம் வாய்ந்தவராய் விளங்கிக்கொண்டும் இருக்கின்றார். மற்றும் அம்மஹாதேவர் ஸர்வக்ஞராயும், ஸர்வ ஶக்தி வாய்ந்தவராயும் ஸ்ரீ லலிதா தேவியின் சரணாரவிந்த ஸேவகராயும் விளங்குகின்றார்.

ஓ அகஸ்த்யரே! இங்ஙனம் காரணக்ருத்ய இந்த்ரர்களான ப்ரம்ஹா, விஷ்ணு, மஹேஶ்வரர்கள் ஸ்ரீதேவீ

பக்தி நிறைந்தவர்களாய் அந்த அந்தக் கோட்டைகளை ஆஶ்ரயித்துக் கொண்டு இருந்து வருகிறார்கள்.

முப்பதாம் அத்யாயம் முற்றிற்று.

---

## முப்பத்தோராம் அத்யாயம்— 114 ச்லோகங்கள்.

### மஹா பத்மாடவீ வர்ணனம்.

ஹயக்ரீவர்:— வாபீத்ரயம் முதலியவைகளில் உள்ள அங்கணப் பிரிவுகளைக் கூறுகிறேன். அதைக்கேட்ட மாத்ரத்திலேயே மஹத்தான செல்வமுண்டாகும். ஆயிரக் கால் மண்டப அங்கணத்திலிருந்து ஏழாவது யோஜனை யில் ஸர்வ ரத்னங்களாலும் அமைக்கப்பட்ட மிக விசித் ரமான மனோமயக் கோட்டை இருக்கின்றது. முற் கூறியவற்றைப்போலவே அதற்கும் கோபுரம், துவாரம், கதவு, தாழ்ப்பாள் முதலியவை அமைந்துள்ளன. அதன் இடையிலுள்ள இடமெல்லாம் அம்ருதவாபிகளாம். ஓ ப்ராக்ஞரே ! அதன் அம்ருதத்தை அருந்திய புருஷர்கள் யோகிகளாகவும், ஸித்தர்களாகவும், வஜ்ரம் போன்ற ஶரீரமுள்ளவர்களாகவும்,மஹாபலசாலிகளாகவும் ஆகின் றனர். ஆதலின் அவ்வம்ருதம் ரஸாயனமெனப் படுகின்றது. அங்கு ஜலம்போலிருக்கும் அம்ருதத்தைத் தொடாமலே அதை மோந்த மாத்திரத்திலேயே மனிதன் ஸித்தியென்னும் பெண்ணுக்குப் பதியாவான். விந்த்ய சத்ருவான மஹரிஷே ! அவ்விரண்டு கோட்டைகளுக்கும் இடையிலே உள்ள அம்ருத வாபியின் இருகரைகளும் அரைகுரோசமே நீளமுள்ளவை. மற்ற இடமெல்லாம் அம்ருதவாபியேயாகும். அது நான்கு யோஜனை ஆழமுள்ளது. நானா ரத்னங்களால் விசித்திரமான படிக்கட்டுகளும் அங்குக் கட்டப்பட்டிருக்கின்றன. ஆங் குள்ள ஹம்ஸங்களும். ஸாரஸபக்ஷிகளும் ஸ்வர்ண

வர்ணமாயும், ரத்ன வர்ணமாயும் இருக்கின்றன. மிகச் சஞ்சலமான அலைகள் இருகரைகளிலும் மோதிக்கொண்டிருக்கின்றன. முனிவரே! அந்த ரஸாயன வடிவமான புதிய அம்ருதத்தைக் குடித்து நீர்க்கோழிகள் முதலிய பறவைகள் முதுமையையும், மரணத்தையும் ஜயித்து கூவுவது என்ற வ்யாஜத்தினல் ஸதா லலிதா தேவியினது மஹா மந்த்ரத்தையே ஜபித்துக்கொண்டிருக்கின்றன. அவ்வம்ருதவாபியானது நாற்புறமும் சக்ரம்போல் வட்டமாய்ச் சூழ்ந்திருப்பதால் தோணியில்லாமல் அங்கு செல்ல இயலாது. மந்த்ரிணீ, தண்டினீ இவ்விருவர்களுடைய ஆக்ஞையால் தாரா என்னும் ஓடத்தை யோட்டும் (தாரணேஶ்வரீ) மஹாஶக்தி அங்கு அமர்ந்திருக்கிருள். நெய்தல்போல் கறுத்த மேனியையுடைய தாரையின் வேலைக்காரிகள் வெளியிலே ஆயிரக்கணக்கான ரத்னமயமான ஓடங்களை வைத்துக் கொண்டு இக்கரைக்கும் அக்கரைக்கும் வருவதும் போவதுமாக அந்த ஜலத்தில் விளையாடுகிருர்கள். நவயௌவநம் வாய்ந்த கோடி கோடியான ஓடமோட்டும் தாரா தேவியின் தோழிகள் வீணை, புல்லாங்குழல், ம்ருதங்கம் முதலிய வாத்யங்களை அடிக்கடி வாசிக்கின்றனர். மேலும் அவர்கள் ஓடத்தை ஓட்டிக்கொண்டே பாடுகின்றனர்; சிலர் ஆடுகின்றனர். அவர்களில் சிலர் துடுப்பைக் கையிலேந்தியவர்களாயும், சிலர் ஜலம் நிறைந்த (பசுவின்) கொம்புகளைக் கையில் தரித்தவர்களாயும் விளங்குகின்றனர். அந்த வாபிகையில் ஜல ரூபமான அம்ருதத்தைப் பருகிக் கொண்டே அவர்கள் அதில் தோணிகளின் உதவியால் ஸஞ்சரிக்கின்றனர். படகோட்டும் அந்த ஶக்திகளுக்குத் தலைவியாயுள்ளவளும், கறுத்த மேனியுள்ளவளுமான தாராம்பாள் ஜலத்தினல் ஏற்படும் ஆபத்தை நீக்கும் ஆற்றலுள்ளவளாக ப்ரகாஶிக்கின்ருள். அவள் தண்டிணீ, மந்த்ரிணீ இவ்விருவர்களுடைய

உத்திரவின்றி முக்கண் படைத்த பரமஸிவனுக்கு கூட அவ்வம்ருத வாபிகையைத் தாண்ட ஒரு தோணி யைக்கூடத் தருவதில்லை. இனிமையாய்ப் பாடிக் கொண் டும், மணிமயமான ஓடங்களைச் செலுத்திக்கொண்டும் அடிக்கடி மஹாராக்ஞியின் மஹா உதாரக்குணத்தைப் புகழ்ந்துக் கொண்டும், அடிக்கடி மாணிக்கமயமான பாத்திரத்திலிருந்து மதுவை வேண்டிய மட்டும் பருகிக் கொண்டுமுள்ள, மனோஹர மணிமய க்ருஹத்தில் வஸிக் கும் ஓடமோட்டும் ஶக்திக் கூட்டமானது பார்ப்பதற்கு மிக்க ரமணீயமாய் இருக்கும். ஆங்குள்ள ஓடங்களிற் சில ஸ்வர்ணமயமாகவும், சில ரத்ன மயமாகவும் மற்றும் சில முதலையைப் போன்ற வடிவமுள்ளனவாயும், வேறு சில மான்முகம் போன்றனவாயும், இன்னும் சில யானை முகத்தைப் போன்றனவாயுமிருக்கின்றன. இத்தகைய விசித்ரமான பற்பல ஓடங்களால் சூழப்பட்டு மிகப் பெரியதும் அழகுள்ளதுமான ஒரு சிறந்த தோணியில் தாராம்பாள் ப்ரகாஶிக்கின்ருள். அவள் தன்னைப்போன்ற ரூபமுள்ளவரும், லலிதா மந்த்ரத்தை ஜபிப்பவருமான கணவனுடன் கூடி அத்தோணியில் ஒரு சிறந்த ரத்ன ஆஸனத்தில் அமர்ந்து குறுக்கும் நெடுக்குமாக அவ்வா பிகையில் ஸஞ்சரித்துக்கொண்டு அதைக் காப்பாற்றி வருகின்ருள்.

மனோமயக் கோட்டைக்கு ஏழுயோஜனை தூரத்தில் புத்திமயமான ஒரு கோட்டை இருக்கின்றது. அது நான்குயோஜனை உயரமுள்ளது. மனோமயம், புத்திமயம் என்னும் இரண்டிற்குமிடையேயுள்ள பிரதேசம் ஆனந்த வாபிகை எனப்படும்.

அங்கு மகிழம்பூப்போன்ற வாஸனையுள்ளதும், மிக ருசியானதும், உருக்கிச்சாய்த்த தங்கம்போன்ற நிற முள்ளதுமான மஹாமத்யம் ஜலரூபமாய் இருக்கின்றது

அவ்வானந்த வாபிகையின் ஆழம், அகலம், படிக்கட்டுகள், அதில் வஸிக்கும் நீர்ப்பறவைகள் முதலியன முன்னர் கூறப்பட்ட அம்ருதவாபிகையில் உள்ளவற்றை போன்றவைகளேயாகும். ஆங்குள்ள ஜலரூபமான மதுவைப் பருகிப் பருகிக் கரையிலுள்ள ஶக்திகள் ஸந்தோஷ பரவசர்களாகவும், மதோன்மத்தர்களாகவும் விளையாடுகின்றனர். ஸாக்ஷாத் வாருணீ தேவியே ஆங்குள்ள தோணிகளுக்கு நாயகியாய் விளங்குகிறுள். அவளை ஸுநாமாலினி யென்றும் அம்ருதேஶ்வரீ யென்றும் அழைக்கின்றனர். அவள், மணிமயமான தோணியில் அமர்ந்துள்ளவளாய் ஶக்திஸேனைகளாற் சூழப்பட்டு, சிறிது பார்வைமாத்திரத்திருலேயே மூன்று லோகங்களையும் மதத்துடன் விளங்குவனவாய்ச் செய்கின்றுள்.

பால ஸூர்யனைப்போன்ற ப்ரகாஶமுள்ள அவள் மதத்தாற் சிவந்த கன்னங்களுள்ளவள். பாரிஜாத மலர் மாலை சூட்டிய பின்னல் உள்ளவள். சஞ்சலமான தாமரை இதழையே மதுபாத்ரமாய்க்கொண்டு, பக்குவம் செய்யப்பட்ட மாம்ஸத்தை மற்ருெரு மணிபாத்ரத்தில் வைத்து ஸ்ரீதேவி மந்த்ரத்தை ஸதா ஜபிக்கும் அநுகூலமான கணவனுடன் கூடி இருக்கிறுள். தரணிகளுக்கு அதாவது அவ்வாபிகை ஓடத்தின் உதவியால் தாண்டி வைக்கும் ஶக்திகளுக்கு நாயகியாக விளங்குகின்றுள். அவளும் மந்த்ரிணீ, தண்டினீ இவ்விருவர்களுடைய உத்தரவின்படியேதான் த்ரிநேத்ரன் முதலிய ஸகல தேவர்களுக்கும் அவ்வானந்தவாபிகையைத் தாண்ட இடமளிக்கின்றுள்.

புத்திமயக்கோட்டைக்கு ஏழாவது யோஜனையில், அஹங்கார மயமான ஒரு கோட்டையிருக்கின்றது. அது முற்கூறிய கோட்டைகளைப்போலவே கோபுரம் முதலியவைகளுடன் கூடி விளங்குகின்றது. புத்தி, அஹங்காரம்

என்னும் அவ்விரண்டு கோட்டைகளுக்கும் இடையே யுள்ள பிரதேசமானது விமர்சவாபிகா என்னும் பெய ருள்ள ஸௌஷும்நாம்ருத ரூபமானதாய் விளங்குகின் றது. ஸுஷும்நாம்ருத மென்னும் யோகிகளது மனக் காற்றினல் நிறப்பப்பட்ட ஸுஷும்நாநாடியின் த்வா ரத்தில் உள்ளே ப்ரகாஶிப்பதாகும். தபோதனரே! அந்த விமர்சவாபிகையிலுள்ள தீர்த்தமும் இத்தகையதே யாகும்.

இவ்வாபிகைக்கும், முன்னர் கூறப்பட்ட வாபிகை களுக்குள்ளவை போலவே கரைகள், படிக்கட்டுகள், பக்ஷி கள், தோணிகள் முதலியன அமைந்துள்ளன. இதற்கு யஜமானி குருகுள்ளா வெனும் ப்ரஸித்தமான தேவியா வாள். இவளது திருமேனி பச்சிலை மரம்போன்ற ஶ்யா மள நிறமானது; இவளது கவசமும் அந்நிறமேயாகும். இவள் தன்னைப்போன்ற வடிவமும் நிறமுமுடைய பல நௌகேஶ்வரிகள் அதாவது ஓடமோட்டிகளின் தலைவி களால் சூழப்பட்டு விளங்குகிருள். மற்றும் அவள் ரத்ன துடுப்பை கையில் ஏந்தியவளாய், மதோன்மத்தையாய்ப் பரம ஸந்தோஷத்தை யளிக்கும் கணவனுடன் கூடிப் பரதேவதாராதனமாகும் ஸ்ரீ க்ரமத்தில் ஆசையுள்ள வளாய் மணிமயமான ஓடத்திலமர்ந்து அவ்வாபிகையில் நாற்புறமும் சுற்றிவருகிருள். அவ்வாபிகையின் ஆழம் முதலியவை முற்கூறப்பட்டவற்றிற்குள்ளவை போலவே யாகும்.

அஹங்காரமயமான கோட்டைக்கு ஏழு யோஜனை தூரத்தில் ஸூர்யபிம்ப மயமான ஒருகோட்டை இருக் கின்றது. இதன் உயரம் நான்கு யோஜனையாகும். அதன் காந்தி ஸூர்யனது ஒளிபோன்றது. அதன் இடையில் உள்ள ஸ்தலமானது குருவிந்தமெனும் மணிகளாலிழைக் கப்பட்டு விளங்குகின்றது அது எப்போதும்

பாலஸூர்ய ப்ரகாசத்தைக் கக்கும் வண்ணமாகவேயிருக்கின்றது. அத்தகைய ப்ரகாஶமானது ஶரீரத்தின்மேற்பட்ட மாத்திரத்திலேயே நரரோ, ஸுரரோ, அஸுரரோ. ஸித்தரோ எவராயினும் ஸூர்யனைப்போல் மிகுந்த தேஜஸ் உள்ளவர்களாய் விளங்குவார்கள். பாலாதபோத்காரமென்னும் அவ்விடத்தில் வஸித்துக்கொண்டு ஆதித்யர் ஸ்ரீ லலிதேஶ்வரியைக் குறித்துத் தவம்செய்து அத்தகைய தேஜஸ்ஸைப் பெற்றுள்ளார். அங்கே ஸமஸ்தமான க்ரகணங்களும் ராசிகளும், நக்ஷத்ர கூட்டங்களும் பரதேவதையின் ஆராதனத்தினால் உலகில் ப்ரகாஶப் பொருள்களாயின. மார்த்தாண்ட பைரவரெனப்படும் ஆதித்யர் தம்மைப் பன்னிரண்டு விதமாகச் செய்துகொண்டு தேஜோமயமான கோடி கோடி ஶக்திகளுடன் மஹா ப்ரகாஶமுள்ளவராகவும் மதத்தினாற் சிவந்த கண்களையுடையவராகவும் கங்கேளியெனும் ஒருவித மரங்களடர்ந்த தோப்பில் விளையாடிக்கொண்டிருக்கின்றனர்.

ஓ விந்திய மலையை அடக்கியவரே! அவர் இருளின் அக்கரையிலே இருப்பவர். அதாவது இருளுக்கு எதிர் மறையான ப்ரகாஶ வடிவினர். மஹா ப்ரகாஶா வெனப்படும் ஶக்தியைப் பத்னியாக உடையவர். சக்ஷுஷ்மதீ சாயா எனப்படும் மற்றும் இரண்டு ஶக்திகளும் அவருக்குண்டு. கூறப்பட்ட மூன்று ஶக்திகளுடன் கூடியவராய் அவர் ஸ்ரீலலிதா மஹேசானியினது மந்த்ரத்தை ஸ்தானத்தினால் ஜபித்துக்கொண்டு விளங்குகின்றனர். அன்றியும் அவர், லலிதாபக்தர்களுடைய இந்த்ரியங்களை ப்ரகாஶப்படுத்திக்கொண்டும், அவர்களுக்கு உள்ளும் புறமுமுள்ள இருளை அடியோடு நாஶம் செய்துக்கொண்டும் இருக்கின்றனர்.

ஸூர்ய பிம்பக் கோட்டைக்கு ஏழாவது யோஜனை தூரத்தில் நான்கு யோஜனை உயரமுள்ள சந்த்ர பிம்பக் கோட்டை ஒன்றிருக்கின்றது. அதுவும் முற்கூறப்பட்ட கோட்டைகளைப் போலவே உயர்ந்த கோபுரங்களும், விஶாலமான வாயிற்படிகளும், அழகான கதவுகளும், நீண்ட தாழ்ப்பாள்களும் அமையப்பெற்றதாகும். அதற்குள் விளங்கும் இடை இடம் முழுமையும் நிலவைக்கக்குந் தன்மையுள்ள சந்த்ரப்ரவாஹமாகும். அத்ரி முனிவரது கண்ணிலிருந்து தோன்றிய சந்த்ரன், இங்கே மிகக் கடுமையாய்த் தவமியற்றிப் பரதேவதையின் அருளால் அதிசிதளமான ப்ரகாஶத்தைப் பெற்ருன். நிர்மலமான வடிவத்தைப் பெற்ற ஸோமநாதரெனப்படும் அவர், முவ்வுலகங்களிலும் தோன்றும் இருளைப் போக்குகிருர். சஷகமென்னும் மத்ய பாத்ரத்தில் நிறைந்துள்ள சந்த்ரிகாம்ருதத்தைப் பானஞ் செய்துக் கொண்டு ஸம்ஸாரமென்னும் ப்ரவர்த்தி மார்க்கத்தை வ்ருத்தி செய்பவராய் விளங்குகின்ருர். அன்றியும் அஶ்வினீ முதலிய இருபத்தேழு நக்ஷத்ரங்கள் புடைசூழக்களங்கமற்ற பூர்ண பிம்பம் எப்பொழுதும் விளங்கத்தமது நிஜவடிவத்தோடு பகவான் சந்த்ரன் நிலாப்ரவாஹத்தில் வஸித்துகொண்டு ஸ்ரீலலிதா மந்த்ர ஜபத்தினுலும், த்யானஸ்தோத்ரங்களினுலும், பற்பல விதமான பூஜைகளினுலும் காலத்தைக் கழிக்கின்ருர். இதுவுமன்றி, தாரா என்னும் பெயருடைய ஆயிரக்கணக்கான ஶக்திகள் அவ்வங்கணத்தில் அவருடைய ஸமீபத்தில் நிறைந்திருக்கின்றன.

சந்த்ரபிம்பக் கோட்டைக்கு ஏழுயோஜனை தூரத்தில் ஶ்ருங்காரக்கோட்டை ஒன்றிருக்கின்றது. அதுவும் நான்கு யோஜனை உயரமுள்ளதேயாகும். அது ஶ்ருங்கார அநுராக (சிவப்பு) நிறமான அநேக கௌஸ்துப மணிகளால் ஆக்கப்பட்டுள்ளது. அதனுடையஉட்பிரதேசமானதுமஹா ஶ்ருங்காரபரிகை(அகிழ்)என்னும் அகழையுடையதாகும்.

ஸ்ருங்கார ரஸம் நிறைந்த அந்த அகழில், அழகான பல வகை ஆபரணங்களணிந்த ஸ்ருங்கார ஶக்திகள், பலர் வஸிக்கின்றனர். அந்த ஸ்ருங்கார ஶக்திகள் மதோன் மத்தர்களாய் ஆயிரக்கணக்கான ஓடங்களில் ஸஞ்சாரஞ் செய்துக்கொண்டு, எப்பொழுதும் மதத்தோடு கூடிய வரும், சிறந்ததோணியில் வீற்றிருப்பவருமான மன் மதனை உபாஸிக்கின்றனர். ஸ்ரீ லலிதாதேவியின் ஆக் ஞைக்கு உட்பட்டவனுன அம் மன்மதன் எல்லோரையும் மோஹிக்கச்செய்யும் பாணங்களால் ஸமஸ்த லோகங் களையும் மோஹிக்கச் செய்கின்ருன். அப்பாணங்களின் மஹிமையால் ஸுரரும், நரரும், அஸுரரும், ஸித்தரும் மோஹமடைந்து, அம் மஹா பத்மாடவியினருகே செல்வ தற்குக்கூட ஶக்தியற்றவர்களாகின்றனர். இயற்கையிலே யே சுத்த ஸித்தர்களான ப்ரஹ்மா, விஷ்ணு, மஹேஶ்வரன் இவர்கள் அந்த மன்மதனது ஆக்ஞையைப் பெற்றுதான் அங்குச் செல்கின்றனர்; செல்லும்போது அவர்கள் வணக்கமுள்ளவர்களாயும், சுத்தமான வேஷமுடையவர் களாயும், லலிதாம்பாளிடத்தில் பக்தி நிறைந்தவர்களா யும், ஏகாக்ர ஸித்தமுள்ளவர்களாயும் இருக்கின்றனர். ஸம்ஸாரிகளும், ஆசை நிறைந்தவர்களும், பற்பல ஸங் கல்பங்களை யுடையவர்களும், மோஹமுள்ளவர்களும், விகல்பத்தால் அழுக்கடைந்த மனமுடையவர்களுமான புருஷர்கள் பேராசை யெனுங்காடு மூடியதும், பிரபல மான மோஹத்தைத் தரகூடியதுமான ஸ்ருங்காரபரிகை யைத் தாண்டமுடியாது. ஏனெனில், எவராலும் ஜயிக்க முடியாதவரும், அழகிற் சிறந்தவரும் மூவ்வுலகத்தோரை யும் மோஹமடையும்படி செய்கின்றவருமாகிய மன்மதன் மஹா ஸ்ருங்காரபரிகைக்கு அதிகாரியாயிருகின்ருன்.

ஸ்ருங்காரக் கோட்டைக்கு ஏழாவது யோஜனையில் சக்ரராஜமென்னும் ஸ்ரீ சக்ரத்திற்கு மஹத்தான ஆலய வடிவமாயுள்ள ஸிந்தாமணிக்ருஹம் இருக்கின்றது.

அதன் நடுவிடமானது நாற்புறமும் ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. அதற்கு மஹாபத்மாடவியென்று பெயர். இது ஸர்வ ஸௌபாக்யத்தையும் அளிக்க வல்லது. ஆங்குள்ள ஶ்ருங்காரக் கோட்டைவரையில் கோபுரங்கள் நிறைந்துள்ளன. இங்ஙனம் நான்கு திக்குகளிலும் சேர்ந்து நூறு கோபுரங்களும், இருபத்தைந்து கோட்டைகளும் இருக்கின்றன. அவற்றில் ஒவ்வொரு கோட்டையின் அடிப்புறமும் ஒவ்வொரு யோஜனை தூரம் விஶாலமானது. மஹாபத்மாடவி ப்ரதேசத்தைப்பற்றிக் கூறுகின்றேன்; கவனமாகக் கேட்பீராக!

எல்லா ரத்னங்களாலும் இழைக்கப்பட்டு ஆறுயோஜனை தூரம் விஸ்தாரமுள்ள அப் பத்மாடவீ ப்ரதேசத்தில் ஸ்தலத் தாமரைகள் இருக்கின்றன. அவற்றின் தண்டுகள் ஒரு யோஜனை நீளமுள்ளனவாயும், ம்ருதுவான முட்களுடன் கூடியனவாயுமிருக்கின்றன; அவற்றின் இலைகள் பத்துப் பனைமர உயரமுள்ளவைகளாகவும், கிஞ்சல்கங்கள் (கேஸரங்கள்) ஐந்து பனைமர உயரமுள்ளவைகளாகவும், கர்ணிகைகள் நூறுமுழம் உயரமுள்ளவைகளாகவும் இருக்கும். வெகு கோமளமாயும், ஸதா மலர்ந்து அழகுபொருந்தியதாயும், வாஸனையால் மிக மனோஹரமானதாயும், விஶாலமான தளங்களுள்ளதாயுமிருக்கும் தாமரைமலர்கள் எண்ணிறந்தன அங்கே விளங்குகின்றன.

அகஸ்த்யரே! மஹா பத்மாடவியின் கீழ்ப்புறத்தில், ஒரு க்ரோஶம் உயரமுள்ளதும், அக்னி வடிவமாயிருப்பதும், அரை யோஜனை விஸ்தாரத்தோடு வர்த்துளாகார (வட்ட)மாயிருப்பதுமான, அர்க்ய பாத்ரத்திற்காதார ஸ்தலமொன்று இருக்கின்றது. அதன் நாற்புறங்களிலும், அக்னியினது பத்துக்கலைகளாகிய தூம்ரார்ச்சிஸ் முதலியவர்கள் ப்ரகாஶமான ஶரீரத்தோடு சூழ்ந்திருக்கின்றனர். அழகிய யௌவன ஸ்த்ரீயையுடையவர்களும்,

பலவகையான ஆபரணம் பூண்டவர்களும், காம மதமுள்ள வர்களுமான அப் பத்துச்சக்திகளும் மிகுந்த ஸோபை யுள்ளவராயும் (அர்க்ய பாத்ரத்திற்கு) ஆதார ரூபராயும் விளங்கும் அக்னி பகவானை ஆலிங்கனஞ் செய்துகொண்டி ருக்கின்றனர். தூம்ரார்ச்சிஸ், ஊஷ்மா, ஜ்வலினீ, ஜ்வா லினீவிஸ்புலிங்கிகா, ஸுஸ்ரீ, ஸுரூபா, கபிலா, ஹவ்ய வஹா, கவ்யவஹா எனப்படும் இப்பத்துச் சக்திகளும் ஆதார ரூபமான அக்னியின் கலைகளெனப்படுவர்.

அந்த ஆதாரத்தில் பாத்ர வடிவத்தை அடைந்துள்ள தேவன் ஸூர்யனும். இவன் மூன்று லோகங்களிலுமுள்ள இருளை ஒழிப்பவனும் ப்ரஸித்தமான உதயத்தை உடையவனுமாவன். ஸூர்யவடிவமாயுள்ள அந்தப் பாத்ரம் ஒன்றரை யோஜனை உயரமும், ஒரு யோஜனை அகலமும் உள்ளது. மஹாஜ்யோதிஸ்ஸைப்போல் ப்ரகாஸிக்கும் அந்தப் பாத்ரத்தின் நாற்புறத்திலும், கிரணங்களையுடைய ஆயிரம பாஸ்கரன் பன்னிரண்டு கலைகள் தங்கப் பதுமைகள்போல் விளங்குகின்றன. தபினீ, தாபினீ, தூம்ரா, மரீசி, மாலினீ, ருசி, ஸுஷும்நா போகதா, விஸ்வா, போதினீ, தாரிணீ, க்ஷமா என்பன அக் கலைகளின் பெயர்களாகும். அந்தப் பாத்ரத்தில் பேராநந்தத்திற்குக் காரணமான பரமாம்ருதம் இருக்கின் றது. அது எல்லாவிதமான ஓஷதி ரஸங்களாலும் பூர்ணஞ் செய்யப்பட்டு மிக்க மனோஹரமான வாஸனை யுடன் கூடியதாயிருக்கின்றது. அன்றியும், அது, வாடாத தும் அதிக மணமுள்ளதுமாகிய கல்ஹாரம், நீலோத் பலம் முதலிய புஷ்பங்களோடு விளங்குவதாயும், குளிர்ச்சி பொருந்திய மணமும் மனத்தைக் கவரும் தன்மையும் பொருந்தி லேசாயும், நிர்மலமாயும் இருக் கின்றது. ஸ்ரீ லலிதா தேவியின் அர்ச்சனைக்கு உசிதமா யுள்ள அவ்வம்ருதம் அடிக்கடி வீசும் அலைகளால்

ஸதா ஶப்தித்துக்கொண்டு மிக்க உதாரமாயும் ஸித்திக்குக் காரணமாயும் விளங்குகின்றது. சந்த்ரகலா மயமான அது, அர்க்யாம்ருதமெனப்படும். அவ்வம்ருதத்தில் மெல்லிய மணிமய ஓடத்தின் மீதமர்ந்து நவயௌவனம் வாய்ந்த சந்த்ரகலைகள் விளையாடிக்கொண்டிருக்கின்றன. அம்ருதா, மாநதா, பூஷா, புஷ்டி, துஷ்டி, ரதி, த்ருதி, சசிநீ, சந்த்ரிகா, காந்தி, ஜ்யோத்ஸ்நா, ஸ்ரீ, ப்ரீதி, அங்கதா, பூர்ணு, பூர்ணும்ருதா என்னும் இப்பதினறும் அக்கலைகளின் பெயர்களாகும். சந்த்ர கலைகளான இவர்கள் அம்ருத காந்தியுடையவர்களாய் மந்தஹாஸ முகங்களோடு விளங்குகின்றனர்.

இவர்கள் மாத்ரமன்றி, அந்த அர்க்யாம்ருதத்தில் ப்ரம்ஹ, விஷ்ணு, ருத்ர, ஈஸ்வர, ஸதாஶிவர்களின் கலைகளும் ப்ரஸந்நமாயிருக்கின்றன.

ஸ்ருஷ்டி (ருத்தி), புத்தி, ஸ்ம்ருதி, மேதா, காந்தி, லக்ஷ்மீ, த்யுதி, ஸ்திரா, ஸ்திதி, ஸித்தி என்பன பத்தும் ப்ரம்ஹ கலைகளாம். ஜரா, பாலிநீ ஸாந்தி, ஈஶ்வரி, ரதி, காமிகா, வரதா, ஆஹ்லாதினீ, ப்ரீதி, தீர்க்கா என்பவை பத்து விஷ்ணு கலைகளாகும். தீக்ஷ்ணு, ரௌத்ரீ, பயா, நித்ரா, தந்த்ரீ, க்ஷுத், க்ரோதிநீ, க்ரியா உத்காரீ, ம்ருத்யு எனும் பத்தும் ருத்ர கலைகளாம். பீதா, ஶ்வேதா, அருணு, அஸிதாவெனும் நான்கும் ஈஶ்வர கலைகள். நிவ்ருத்தி, ப்ரதிஷ்டா, வித்யா, ஶாந்தி, இந்திகா, தீபிகா, ரேசிகா, மோசிகா, பரா, ஸூக்ஷ்மாம்ருதா, க்ஞாநா, க்ஞாநாம்ருதா, ஆப்யாயிநீ, வ்யாபிநீ, வ்யோமரூபா எனும் பதினறு கலைகளும் ஸதாஶிவ கலைகளாகும். மேலே கூறப்பட்ட ஐம்பது கலைகளும், அவ்வம்ருதத்தில், சிறிய ஓடங்களிலமர்ந்து இங்குமங்கும் ஓடி விளையாடுகின்றனர்.

அன்றியும், அங்கே, அர்க்ய ஸம்சோதனத்திற்காகப் பரமேஷ்டி எனும் ப்ரம்ஹாவினல் கற்பிக்கப்பட்ட

ஆயிரக்கணக்கான வித்யைகள் ஶக்திஸ்வரூபிணீகளாகத் தோன்றி விளையாடுகின்றனர்.

மஹா பத்மாடவியில் வஸிப்பவர்களும். மஹா சக்ரத்தில் வஸிப்பவர்களுமான ஸகல ஶக்திகளும் அந்த அர்க்யாம்ருதத்தைப் பானம் பண்ணி மதோன்மத்தர்களாய் விளங்குகின்றனர். ஶக்திகளால் அடிக்கடி பானஞ் செய்யப்படினும் அவ்வம்ருதம் குறைவதேயில்லை; வ்ருத்தியாய்க்கொண்டே இருக்கின்றது; அப்போதைக்கப்போது புதுமணம் வீசுவதாகவுமிருக்கின்றது.

சிந்தாமணி க்ருஹத்திலுள்ள பரிசாரக ஶக்திகள் (பணிப்பெண்கள்) ஆயிரக் கணக்கான ரத்ன கும்பங்களாலும் கோடிக் கணக்கான ஸ்வர்ண கலசங்களாலும் அம்ருதத்தை அர்க்ய பாத்ரத்தில் நிரப்பி அணிமாதி அநேக ஶக்திகளுக்குத் தருகின்றனர். இங்ஙனம் மஹா பத்மாடவியின் முற்பாகத்தில் அமைக்கப்பட்ட அர்க்ய பாத்ர ஸ்வரூபம் என்னால் கூறப்பட்டது. இனி பிற்பகுதியில் உள்ளனவற்றையும் கூறுகின்றேன்.

முப்பத்தோராம் அத்யாயம் முற்றிற்று.

---

## முப்பத்திரண்டாவது அத்யாயம்-104ச்லோகங்கள்

## சிந்தாமணி க்ருஹத்தின் உட்புற வர்ணனம்.

ஸ்ரீ ஹயக்ரீவர்:- சிந்தாமணி க்ருஹத்தின் ஆக்நேய மூலையில் ஒரு யோஜனை விஶாலமுள்ளதும், ஒரு யோஜனை ஆழமுள்ளதுமான ஓர் அக்னிகுண்டம் இருக்கின்றது. அதில் அபரிமிதமான ஸுதாதாரைகளால் அர்ச்சிக்கப்பட்ட சிதக்னி பகவான் ஸ்ரீ லலிதா பரமேஶ்வரியின் ஆக்ஞையின்படி தேவீ பக்தர்களுக்குப் பரம ஐஶ்வர்யத்தைக் கொடுக்கிறார். பரம பாவனராய்

ஜ்வலித்துக்கொண்டிருக்கிறுர். விறகில்லாமலே மஹா ஜ்வாலையுடன் ப்ரகாஸிக்கிறுர். அன்றியும், அவர் அம்ருதத்தால் ஸந்தோஷப்படுத்தப்பட்ட திருமேனியை உடையவராயும், அசோகத் தளிரைப்போன்ற சிவந்த காந்தியையுடையவராயும், ஜ்வலித்துக்கொண்டிருக்கிறுர். அங்கே ஹோமஞ் செய்பவள் மஹாதேவியான காமேஸ்வரியும் ஹோமஞ் செய்பவர் காமேஸ்வரருமாவர். இவ்விரண்டு நித்யஹோதாக்களும் ஸர்வ ஜகத்தையும் ரக்ஷிக்கின்றனர். மற்றெருவருக்குப் பராதீனமல்லாது ஸ்வந்த்ரையாயிருக்கும் ஸ்ரீ லலிதாதேவியானவள் தானே ஜகத்ஸ்ருஷ்டி, ஸ்திதி முதலிய கார்யங்களில் ப்ரவர்த்திக்கின்ருள். காமேஸ்வரரும் பரதேவதையால் தூண்டப்பட்டேதான் ஜகத் வ்யாபாரத்தில் ப்ரவர்த்திக்கிறுர்.

சிந்தாமணி க்ருஹராஜத்திற்கு நிருருதி பாகத்திலுள்ள மஹா பத்மாடவியில் மிகவுயர்ந்து விளங்கும் சக்ரராஜமெனும் ஒரு சிறந்த ரதமிருக்கின்றது. அந்த ரதம், ஒன்பது அடுக்குகளோடு கூடியதும், ஸகலவிதமான ரத்னங்களாலாக்கப்பட்டதும், நான்கு யோஜனை விஸாலமும், பத்து யோஜனை உயரமுமுடையதுமாகும். அதன் அடிப்பாகம் பெருத்து மேலே போகப் போகச் சிறுத்திருக்கின்றது. அது நான்கு வேதங்களையே நான்கு சக்ரங்களாகவும், தர்மார்த்த, காம, மோக்ஷமென்னும் நான்கு புருஷார்த்தங்களையே நான்கு குதிரைகளாகவுமுடையதாகும். அன்றியும், அது பல அழகிய கொடிகளாலும், சாமரங்களாலும் அலங்கரிக்கப்பட்டது. பண்டாஸுர யுத்தத்தில் அதி ஸாஹஸமான கார்யத்தைச் செய்தது. முன் யுத்தப் பிரகரணத்திற் கூறிய பல லக்ஷணங்களுடன் கூடியது. முத்துக் குடையால் அலங்கரிக்கப்பட்டது. ஸ்ரீ தேவி அமர்ந்துள்ளதால் மிகப் பரிசுத்தமாயுள்ளது. ரதங்களிலெல்லாம் தலை சிறந்து விளங்குவதாயும் இருக்கின்றது.

சிந்தாமணி க்ருஹத்தின் வாயு மூலையில் மஹா பத்மாடவியில் மந்த்ரிணீ தேவியினுடைய கேயசக்ர மெனும் பெரிய சிறந்த ரதமிருக்கின்றது. சிந்தாமணி க்ருஹத்தின் ஈசான பாகத்திலுள்ள மஹா பத்மாடவியில் தண்டநாதைக்குப் பிரியமான கிரிசக்ரமெனும் பெய ருள்ள மஹா ரதமிருக்கின்றது.

இம்மூன்று ரதங்களும் ஸர்வ க்ஷேத்ரங்களிலும் அதா வது பதினாறு ஸ்ரீபுரங்களிலும் ஒரே விதமாக இருக்கின் றன; தேவதைகளும் ஸமானமே.

அக்னி மூலையில், ஸதா கொழுந்து விட்டெரிந்து கொண்டிருக்கும் சிதக்னி குண்டமிருக்கின்றதல்லவா? அதன் மேற்கு திசையில் காயத்ரீ தேவியும், அதற்குப் பின், அபயங்கரரும், க்ருணீ என்னும் ஸூர்யனும், அதற்குப் பின் ப்ரணவ மென்னும் ஓங்காரத்தின் க்ருஹ மும் துரீயகாயத்ரீ தேவியும், சக்ஷுஷ்மதீ, கந்தர்வ ராஜ, பதிஷட் ருத்ரர் முதலியவர்களும் அவர்களுக்குப் பின் பகவதியான தாராம்பாளும் இருக்கிறார்கள்.

சிந்தாமணி க்ருஹத்திற்கு நிருருதி மூலையில் அச்சுத, அநந்த, கோவிந்த என்னும் நாமத்ரய மஹா மந்த்ரத்தின் பொருளான பகவான் மஹாவிஷ்ணு இருக்கின்றார். அதற் குப் பிறகு மஹாகணபதியும், பஞ்சாக்ஷரீ மஹா மந்த்ரத் தின் அர்த்தமாய் விளங்கும் ஶிவனும், மூன்று பீஜாக்ஷ ரங்களின் வடிவ மந்த்ரவாச்யரான ம்ருத்யுஞ்ஜயரும் இருக்கின்றனர்.

அவ்விடத்திற்குமேல் ஶ்ருததாரிணீயெனும் ஸரஸ் வதி வஸிக்கின்றாள். அகாரம் முதல் க்ஷகாரம் வரையி லுள்ள ஐம்பத்தோரெழுத்துக்களையே ஶரீரமாகவுடைய மாத்ருகைகள் ஸரஸ்வதீ தேவிக்குப் பின்பாகத்தில் வஸிக் கின்றனர். அதற்கும் மேல் ஸம்பத்கரீ, காலஸங்கர்ஷிணீ, ஸ்ரீ லலிதாதேவியின் ஆவிர்ப்பாவத்திற்குக் காரணரான

மஹா சம்புநாதர், நிலவுபோன்ற வெண்மையான காந்தி யோடுள்ள நிர்மல ஶரீரமுடைய ஸ்ரீபராம்பாள் ஆகிய இவர்கள் ஒருவருக்குமேல் ஒருவராக அமர்ந்திருக்கின்றனர். பாலா, அன்னபூர்ணா, அஶ்வாரூடா, ஸ்ரீபாதுகை முதலிய தேவிகளும் அங்கே ஒருவருக்குப்பின் ஒருவராக வஸிக்கின்றனர்.

சிந்தாமணி க்ருஹத்தின் மேற்கு வாயிற்படியிலிருந்து மேன்மேலாக வஸிப்பவர்கள் மற்றச் சக்திகளாவர். லகுஶ்யாமா, வாக்வாதினீ, ஸ்ரீ நகுலாம்பிகை, மஹாஶ்யாமா ஆகிய இந் நால்வரும் வாயு மூலையை ஆஸ்ரயித்திருக்கின்றார்கள். சிந்தாமணி க்ருஹத்தின் வாயவ்யதிக்கிலிருந்து மஹா பத்மாடவியில், மற்றும்பல இதர தேவதைகள் வஸிக்கின்றனர். அவர்கள் உன்மத்தபைரவீ, ஸ்வப்ன வாராஹீ, திரஸ்கரிணீ, பஞ்சமீ எனும் தேவிகள். இவர்களும் முற்கூறிய தேவதைகளைப் போலவே ஒருவருக்குப் பின் ஒருவராக அமைந்திருக்கின்றனர். ஸ்ரீபூர்த்தி மஹாதேவி, ஸ்ரீமஹா பாதுகையெனும் இரண்டு உத்தமமான தேவிகளும் அங்கே வஸிக்கின்றனர். ஷடாம்நாய ஸாகரமென்னும் சிறந்த நூலில் ஸ்ரீஶங்கரரால் விவரிக்கப்பட்டுள்ள ஸகலவித்யா தேவதைகளும் அங்கு மஹா பத்மாடவியில் வஸிக்கின்றனர்.

இங்ஙனம் ஸ்ரீரஶ்மிமாலை என்னும் கிரணங்களின் காந்தியோடுகூடிய தேவிக்குச் சிந்தாமணிமயமான பெரிய வீடுகள் உயர்ந்த கொடிகளோடும், கோட்டைகளோடும், உத்யானங்களோடும் கூடி விளங்குகின்றன.

ஸமுத்ரத்தைப் பருகிய முனிவரே! சிந்தாமணி க்ருஹத்தின் கிழக்கு வாயிற்படிக்குத் தென்புறத்தில் மந்த்ரிணீ தேவியின் உயர்ந்த மாளிகையும், அந்த வாயிலின் வடபுறத்தில் ரத்ன மயமான தண்டநாதையின் அரண்மனையும் இருக்கின்றன.

அர்க்ய ஸ்தானத்திற்குக் கிழக்கே ப்ரம்ஹ, விஷ்ணு, ருத்ரர்களின் க்ருஹங்கள் இருக்கின்றன. அந்த க்ருஹங்கள் தமது ரத்னக்காந்திகளால் எட்டுத்திசைகளையும் ப்ரகாஶப் படுத்துகின்றன. ஆங்குள்ள தேவர் அனைவரும் ஸ்ரீ லலிதா தேவியினிடம் பக்தியுடையவர்களாய், ஸதா ஸ்ரீ லலிதா மந்த்ரத்தை இடைவிடாது ஜபிக்கிறார்கள்.

அர்க்ய ஸ்தானமும், அர்க்ய கல்பனமும் கீழ்வாயிற்படியைப்போலவே தெற்கு, மேற்கு, வடக்கு வாயிற்படிகளிலும் ஸமமாக இருக்கின்றன.

மஹரிஷியே! சிந்தாமணி க்ருஹத்தைப்பற்றிக் கூறுகிறேன் கேளும். அது ஸ்ரீபுரத்திற்கு நடுவே இரண்டு யோஜனை விஶாலமுள்ளதாய் இருக்கின்றது. சிந்தாமணி மயமான அதன் சுவர் ஒரு க்ரோஶ அளவு விஶாலமானதாகும். அதன் மேற்கூரைகள் சிந்தாமணிக் கற்களால் மூடப்பட்டு மறைவாய் இருக்கின்றன. உந்நதமான ஸ்தூபியொன்று அங்கே ப்ரகாஶிக்கின்றது. அந்த சிந்தாமணி க்ருஹத்தின் சுவர்கள் நான்கு யோஜனை உயரமுள்ளவைகள். ஸ்தூபி இருபது யோஜனை உயரமுள்ளது. அது அடியில் அகன்றும், மேலே போகப் போகக் குறுகியும் உள்ளது. அதற்கு மூன்று சிகரங்கள் இருக்கின்றன. அம் மூன்று சிகரங்களின்மீது இச்சை, ஞானம், க்ரியைகளென்னும் மூன்று ஶக்தி'கள் ஸதா விளங்கிக்கொண்டிருக்கின்றன. அச்சிகரங்களும் சிந்தாமணி மயமாகவே விளங்குகின்றன. ஏன்? சிந்தாமணி க்ருஹத்திலுள்ள ஸகல வஸ்துக்களும் சிந்தாமணி மயமாகவே இருக்கின்றன. அரை க்ரோஶம் நீளமும், கால் க்ரோஶம் அகலமும் உள்ள நான்கு வாயிற்படிகள் அங்கு விளங்குகின்றன, அந்த த்வாரங்களிலும் சிந்தாமணி க்ருஹத்திற்குள்ளும் ஸ்ரீ லலிதா தேவியினது ஶரீரத்தின்

சிவந்த காந்திக் கூட்டமானது, ஒன்றுசேர்ந்து பால ஸூர்யனது ஒளிபோன்ற ப்ரகாஶமும் சந்த்ரனைப் போன்ற சீதளமும் உடையதாகி, நதியின் ப்ரவாஹம் போல் அடிக்கடி ஓடுகின்றன. அந்த க்ருஹத்தின் கிழக்கு வாயிற்படி பூர்வாம்நாயமென்றும், தெற்கு, மேற்கு, வடக்கு வாயிற்படிகள் முறையே தக்ஷிண, பஶ்சிம, உத்தர ஆம்நாயங்களென்றும் கூறப்படுகின்றன.

இந்த க்ருஹராஜத்தின் இடையே அழகிய சுவர்களில் கோடிக்கணக்கான ரத்ன தீபங்களின் தண்டுகள் புதைக்கப்பட்டிருக்கின்றன. கோடி ஸூர்யர்களது ஒளிக்கு ஸமமான காந்தியையுடைய அத்தீபங்கள் அச் சிந்தாமணி க்ருஹத்தின் உட்ப்ரதேசத்தை ப்ரகாஶப்படுத்துகின்றன.

இந்த மிகப் பெரிய சிந்தாமணி க்ருஹத்தின் மத்ய பாகத்தில் மிக உயர்ந்து விளங்கும் ஒரு திண்ணையின் மேல் மஹத்தான பிந்து சக்ரம் இருக்கின்றது. அந்த க்ருஹத்தின் உயர்ந்த சுவர்களுக்கும், பிந்துவுக்கும் இடையிலுள்ள ப்ரதேசமானது சுவரின் அளவான க்ரோஶத்தைத் தவிர மூன்று க்ரோஶங்கள் அகலமுள்ளது. அம் மூன்று க்ரோஶங்களிலும், அணிமா முதலிய ஆத்ம கிரணங்கள் இருக்கின்றன. மூன்று க்ரோஶ அகலமுள்ள அந்த ப்ரதேசம் கை முழ அளவிற்கு இருபத்து நான்காயிர முழம் அகலமுள்ளதாகும். ஶ்ரேஷ்டமாயுள்ள பிந்து பீடம் வரை பதினான்கு பாகமாகப் பிரிக்கவிட்ட விடத்தில் முழக்கணக்கில் அளவைக்கூறுகின்றேன் கேள்.பத்மாடவி ஸ்தலத்திலிருந்து சிந்தாமணி க்ருஹமானது இருபது முழம் உயரமாயிருக்கின்றது. அங்கே அணிமா, மஹிமா முதலிய ஶக்திகள் இருக்கின்றனர்.

(முதலாவது ஆவரணம்.)

அணிமாதி ஶக்திகள் வஸிக்குமிடத்தின்விஸ்தாரம் நான்கு நல்வமாகும். நானூறு கிஷ்கூக்கள் ஒரு நல்வமெனப்படும். ஒரு கிஷ்கூ என்பது ஒரு முழமாகும்.

அங்கே அணிமா முதலிய ஸித்தி தேவதைகள் பூர்வாதி க்ரமமாக வீடுகளை அமைத்துக் கொண்டு வஸிக்கின்றனர். அணிமா, மஹிமா, (கரிமா). லகிமா, ஈசித்வம். வசித்வம், ப்ராகாம்யம், புக்தி, இச்சா, ப்ராப்தி, ஸர்வகாமர் ஆகிய இவர்கள் உத்தமமான ஸித்திகளாவர். ரஸஸித்தி, மோக்ஷஸித்தி, பலஸித்தி, கட்கஸித்தி, பாதுகாஸித்தி, அஞ்ஜனஸித்தி, வாக்ஸித்தி, லோஹஸித்தி, தேஹஸித்தி முதலியவைகள் யோகிகளுக்குப் பிரியமானவைகளாகும். இத்தகைய அநேக கோடி ஸித்திகளும் அங்கே நாற்புறங்களிலும் வஸித்துக்கொண்டு பரமேஶ்வரியை ஸேவித்து வருகின்றனர். அவர்கள் ஶுபமான அணிமாதிக்களுக்கிடையே புத்தழகுவாய்ந்த ஶரீரமுள்ளவர்களாயும், மலர்ந்த தாமரைப்போன்ற முகம் உள்ளவர்களாயும், ஜ்வலிக்கும் சிந்தாமணிகளை கரங்களில் வைத்திருப்பவர்களாயும், எப்போதும் பதினறு வயதுள்ளவர்களாயும், மிக்க கம்பீரமான ஸ்வபாவம் உள்ளவர்களாயும், மதத்தினல் கலக்கமுள்ளவர்களாயும் விளங்கி விளையாடுகின்றனர்.

அணிமாதி ஸித்திகளின் வாஸஸ்தானத்திற்கு மேலே இருபது முழம் உயரமும், ஆயிரத்து அறுநூறு முழம் விஶாலமுமுள்ளதாயும், நான்கு திக்குகளிலும் பல படிக்கட்டுகளால் அலங்கரிக்கப்பெற்றதாயுமுள்ள மிக அழகிய க்ருஹம் ஒன்றிருக்கின்றது. அது ப்ராம்ஹீ முதலிய தேவிகளின் வீடாகும். அதில் உள்ள தேவிகளைக் கூறுகிறேன் கேள். ப்ராம்ஹீ, மாஹேஶ்வரீ. கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மீ என்னும் எட்டுத்தேவிகளும் தங்கட்குரிய வாஸஸ்தலத்தை அமைத்துக் கொண்டு வஸித்து வருகின்றனர். அவர்கள் பலவகையான ஆயுதங்களைத் தரித்தவர்களாயும், பல பரிவாரங்களோடு சூழப்பட்டவர்களாயும், பூர்வாதி திக்கிலிருந்து ப்ரதக்ஷிணமாக ஆலயங்களை

அமைத்துக் கொண்டு வஸிப்பவர்களாயும் விளங்குகின்றனர்.

கும்பஸம்பவரே! ப்ராம்ஹீ முதலிய ஶக்திகளின் ஆலயங்களுக்கு மேலே, இருபது முழம் உயரமும், ஆயிரத்து அறுநூறு முழம் விஶாலமுமுள்ள, முத்ரா தேவிகளின் அந்தர மென்னும் ஓர் இடம் இருக்கின்றது. அங்கே ஸம்க்ஷோபிணீ, வித்ராவிணீ, ஆகர்ஷிணீ, வஶ்யா, உந்மாதினீ, மஹாங்குஶா, கேஶரீ, பீஜா, யோநீ, த்ரிகண்டா என்னும் பத்து முத்ரா தேவிகள் கிழக்குத்திக்கிலிருந்து ப்ரதக்ஷிணமாக அமைந்திருக்கின்றனர். மிக அழகிய ஶரீரமுள்ளவர்களாயும், புதிய யௌவனம் நிறைந்தவர்களாயுமுள்ள அவர்கள் தங்களுடைய அழகிய காந்திகளால் மேற்கூறிய க்ருஹத்தின் உட்புறத்தைப் ப்ரகாஶப்படுத்திக்கொண்டு ஸ்ரீ லலிதா பரமேஶ்வரியை ஸேவித்து வருகின்றனர்.

அணிமாதி ஸித்திகளுள்ள முதல்ப்ராகாரம், ப்ராம்ஹீ முதலிய மாத்ருகைகளுள்ள இரண்டாவது ப்ராகாரம். ஸம்க்ஷோபிணீ முதலிய முத்ராதேவிகளுள்ள மூன்ருவது ப்ராகாரம் ஆகிய இம்மூன்றுக்கும் த்ரைலோக்ய மோஹந சக்ரமென்று பெயர். இதிலுள்ள ஶக்திகளுக்கும் ப்ரகடயோகினிகளென்பது பொதுப் பெயர் ஆகும். சக்ரத்திற்கும், ஶக்திகளுக்கும் நாயகியாக விளங்குபவள் த்ரிபுரா சக்ரேஶ்வரியாவாள். அந்தச் சக்ரத்தை ஸம்க்ஷோபணு வடிவ முத்ராதேவி பரிபாலிக்கின்ருள்.

(இரண்டாவது ஆவரணம்)

முற்கூறிய முத்ரா தேவிகளது ப்ராகாரத்திற்கு மேல், நித்யாகலா தேவிகளின் ப்ராகாரம் இருக்கிறது. அதுவும் இருபது முழம் உயரமும், ஆயிரத்து அறுநூறு முழம் விஶாலமும் உள்ளது. முன் ப்ராகாரத்திற்குள்ளதுபோலவே இதற்கும் படிகட்டுகள் அமைந்திருக்கின்றன. அந்த

நித்யாகலா தேவிகளின் அந்தர்த்தில் பதினறு சந்த்ரகலா ஸ்வரூபிணிகளான காமாகர்ஷிணீ முதலிய ஶக்திகள் நாற்புறத்திலும் தங்கி மிகச் சீதளமான அம்ருதப் பெருக்கினல் எட்டு திசைகளையும் ஸந்தோஷப் படுத்திக் கொண்டு விளங்குகின்றனர். அவர்களது பெயர்களைக் கூறுகிறேன் கேட்பீராக. காமாகர்ஷிணீ, புத்யா கர்ஷிணீ அஹங்காராகர்ஷிணீ, ஶப்தாகர்ஷிணீ, ஸ்பர்ஶாகர்ஷிணீ ரூபாகர்ஷிணீ, ரஸாகர்ஷிணீ, கந்தாகர்ஷிணீ, சித்தா கர்ஷிணீ, தைர்யாகர்ஷிணீ, ஸ்ம்ருத்யாகர்ஷிணீ, நாமா கர்ஷிணீ, பீஜாகர்ஷிணீ, ஆத்மாகர்ஷிணீ, அம்ருதா கர்ஷிணீ, ஶரீராகர்ஷிணீ ஆகிய இப்பதினறு நித்யா கலா தேவிகள் குப்தயோகினீ எனப்படுவர். இந்த சக்ரத்திற்கு ஸர்வாஶாபரிபூரக சக்ரமென்றுப் பெயர். இதற்கு அதிஷ்டான தேவதை த்ரிபுரேஶீயெனும் சக்ரேஶ்வரியாகும். த்ராவணீகா என்னும் முத்ராதேவி இந்தச் சக்ரத்தைப் பரிபாலிக்கின்ருள்.

(மூன்ருவதாவரணம்)

இந்நித்யாகலா தேவிகளின் அந்தரத்திற்குமேலே இருபது முழம் உயரமும், ஆயிரத்து அறுநூறு முழச் சுற்றளவுமுள்ள அதிஸுந்தரமான சக்ரம் ஒன்று இருக்கின்றது. இதற்கும் முந்தியவற்றைப்போலவே படிகட்டுகள் உண்டு. இது ஸர்வ ஸம்க்ஷோபண மென்னும் பெயருள்ளது. இங்கே மஹா பயங்கரமானவையும் தீவ்ரமானவையுமான கண்களை உடையவர்களாய்ப் புதிய யௌவனத்தால் மதங்கொண்டவர்களான எட்டு ஶக்திகள் மஹாராக்ஞியைச் சேவித்துக்கொண்டு இருக்கின்றனர்.

குஸுமா, மேகலா, மதனா, மதனாபுரா, ரேகா, வேகினீ அங்குஶா, மாலினீ என்பன அச்சக்திகளின் நாமங்களாகும். அநங்க என்னும் பதத்தை இந்நாமாக்களுக்கு முதலில் சேர்த்து அநங்ககுஸுமா, அநங்கமேகலா என்று

வழங்குவது ஸம்ப்ரதாயமாகும். இவர்களது பரிவாரங்கள் கோடி கோடியாய் இருக்கின்றன.

இந்த ஸர்வ ஸம்க்ஷோபண சக்ரத்திற்கு அதிஷ்டான தேவதை த்ரிபுரஸுந்தரீ என்னும் சக்ரேஶீயாவள். குப்ததரயோகினீ என்பது இந்த ஆவரண தேவதைகளின் பொதுப் பெயராகும். ஆகர்ஷணிகா எனும் ஸர்வாகர்ஷிணீ முத்ராதேவீ இந்தச் சக்ரத்தைப் பரிபாலிக்கின்ருள்.

(நான்காவதாவரணம்)

கும்பஸம்பவரே ! அநங்கஶக்திகளது வாஸஸ்தலத்திற்கு மேலே இருபது முழம் உயரமும், ஆயிரத்தறுநூறு முழம் விஸ்தாரமுமுள்ள ஸர்வ ஸௌபாக்யதாயக மென்னும் ப்ராகாரமிருக்கின்றது. அங்கு மதமுள்ளவர்களான ஸர்வஸம்க்ஷோபிணீ முதலிய பதினுன்கு ஶக்திகள் இருக்கின்றனர். அவர்களது பெயர்கள் ஸர்வ ஸம்க்ஷோபிணீ ஶக்தி, ஸர்வ வித்ராவிணீ ஶக்தி, ஸர்வா கர்ஷிணீ ஶக்தி, ஸர்வாஹ்லாதிணீ ஶக்தி, ஸர்வ ஸம்மோஹிணீ ஶக்தி, ஸர்வஸ்தம்பிநீ ஶக்தி, ஸர்வ ஐம்பந ஶக்தி, ஸர்வவஶங்கரீ ஶக்தி, ஸர்வரஞ்ஜனீ ஶக்தி, ஸர்வோன்மாதினீ ஶக்தி, ஸர்வார்த்தஸாதிநீ ஶக்தி, ஸர்வ ஸம்பத்திபூரணீ ஶக்தி, ஸர்வமந்த்ரமயீ ஶக்தி, ஸர்வ த்வந்த்வ க்ஷயங்கரீ ஶக்தி என்பனவாகும். இவர்கள் ஸம்ப்ரதாய யோகினீ எனப்படுவார்கள். சக்ரேஶியான த்ரிபுராவாஸினீ இதன்நாயகியாவள். ஸர்வவஶ்யா (ஸர்வ வஸங்கரீ) என்னும் முத்ராதேவி இதை ரக்ஷிக்கின்றனள். இந்தச் சக்ரேஶிக்கும் கோடிக்கணக்கான வேலைக்காரிகளுண்டு.

ஸ்ரீ சக்ரம் :

பிந்துத்ரிகோணவஸுகோண தசாரயுக்ம
மன்வஶ்ர நாகதள ஸம்யுத ஷோடஶாரம் |
விருத்தத்ரயஞ்ச தரணீஸதனத்ரயஞ்ச
ஸ்ரீ சக்ர மேததுதிதம் பரதேவதாயா: ||

(ஐந்தாவதாவரணம்)

அகஸ்த்யரே! ஸம்க்ஷோபிணீ முதலிய இவர்களின் அந்தரத்திற்கு மேலே இருபது முழம் உயரம், ஆயிரத்து அறுநூறு முழம் விஶாலம் உள்ள க்ருஹம் இருக்கின்றது. இதில் ஸர்வஸித்தி முதலிய ஶக்திகள் வஸிக்கின்றனர். அவர்களின் பெயர்கள் ஸர்வஸித்திப்ரதா, ஸர்வஸம்பத் ப்ரதா, ஸர்வப்ரியங்கரீ, ஸர்வமங்களகாரிணீ, ஸர்வகாம ப்ரதா, ஸர்வதுக்கவிமோசநீ, ஸர்வம்ருத்யுப்ரசமநீ, ஸர்வ விக்ன நிவாரிணீ, ஸர்வாங்க ஸுந்தரீ, ஸர்வஸௌபாக்ய தாயிநீ என்பனவாகும். இவர்கள் பொதுவாய்க் குலோத் தீர்ண யோகினிகளெனப்படுவர். இந்த சக்ரத்தின் பெயர் ஸர்வார்த்தஸாதக மென்பதாகும். இதற்கு நாயகி த்ரிபுராஶ்ரீ சக்ரேஶ்வரியாவள். ஸர்வோன்மா தினீ முத்ரை இந்தச் சக்ரத்தை ரக்ஷிக்கின்றனள்.

(ஆருவதாவரணம்)

அகஸ்த்யரே! ஸர்வார்த்தஸாதக ப்ராகாரத்திற்கு மேலே இருபது முழம் உயரமும் ஆயிரத்தறுநூறு முழம் பரப்புமுள்ளதான ஸர்வக்ஞா முதலிய ஶக்திகளின் அந்தரம் இருக்கின்றது. அதற்கு ஸர்வரக்ஷாகர சக்ர மென்னும் பெயர் வழங்கப்படுகின்றது.

அங்கு ஸர்வக்ஞா, ஸர்வஶக்தி, ஸர்வைஶ்வர்யப்ரதாயினீ, ஸர்வக்ஞானமயீ, ஸர்வவ்யாதிவிநாஶினீ, ஸர்வாதாரஸ்வரூபா, ஸர்வபாபஹரா, ஸர்வாநந்தமயீ, ஸர்வ ரக்ஷாஸ்வரூபிணீ, ஸர்வேப்ஸிதபலப்ரதா என்னும் பத்து ஶக்திகள் வஸிக்கின்றனர். இவர்கள் நிகர்ப்பயோகினி களென்றழைக்கப்படுகின்றனர். த்ரிபுரமாலினீ என்பவளே இந்தச் சக்ரேஶியாவள். ஸர்வ மஹாங்குஶா என்னும் முத்ராதேவி இதை ரக்ஷிக்கின்ருள். இதுவரை ஸர்வக்ஞாதி ப்ராகாரம் வரையிலுள்ள சக்ரங்களைக்

கூறினேன். மஹர்ஷியே! மற்ற சக்ரங்களைப் பற்றியும் கூறுகின்றேன் கேட்பீராக.

முப்பத்திரண்டாம் அத்யாயம் முற்றிற்று.

---

## முப்பத்திமூன்றும் அத்யாயம்- 110 ச்லோகங்கள்

### க்ருஹராஜத்தின் உட்புற வர்ணனம்.

### (ஏழாவது ஆவரணம்)

ஸ்ரீ ஹயக்ரீவர்:— முனிவரே! ஸர்வக்ஞாதிகளின் ப்ராகாரத்திற்கு மேலே இருபது முழம் உயரமும் ஆயிரத்து அறுநூறு முழம் விஶாலமுமுள்ள வஶின்யாதி ப்ராகாரம் இருக்கின்றது. அதுவும் முந்திய சக்ரங்களைப் போலவே படிக்கட்டுகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. அது ஸர்வரோகஹர சக்ர மென்று அவனியில் ப்ரஸித்தி பெற்றுள்ளது. கிழக்கு திசைமுதல் க்ரமமான வஶின் யாதி தேவிகள் அங்கு வஶிக்கின்றனர். ஸ்வரங் (உயிரெழுத்துக்)கள் பதினாறுடன் கூடி வஶினீ வாக்தேவதையும் க வர்க்கமாகும் ஐந்து அக்ஷரங்களுடன் கூடி காமேஶ்வரீ வாக்தேவதையும், ச வர்க்கத்துடன் கூடி மோதினீ எனும் வாகீஶியும், ட வர்க்கத்தால் அலங்கரிக்கப்பட்ட ஶரீரமுள்ள விமலா எனும் வாக்தேவதையும், த வர்க்கத்துடன் கூடிய அருணை எனும் வாக்தேவதையும், ப வர்க்கத்தால் ப்ரகாஶிக்கும் ஜயினீவாக்தேவதையும், ய, ர, ல, வ, என்னும் நான்கு அக்ஷரங்களுடன் கூடிய ஸர்வேஶ்வரீ வாங்மயியும், ஶ, ஷ, ஸ, ஹ, ள, க்ஷ என்னும் ஆறெழுத்துக்களுடன் கூடிய கௌளினீ வாக்தேவதையும் அங்கே விளங்குகின்றனர். இவ்வெட்டு வாக்தேவிகளும் ஜபாபுஷ்பம் போன்ற சிவந்த காந்தியுள்ளவர்களாகவும், முத்துமயமான ஆபரணங்களை அணிந்தவர்களாகவும், எப்போதும் கத்ய (வசனம்) பத்ய (செய்யுள்) ப்ரவாஹங்களால் ஸ்ரீ லலிதா தேவியை வாக்கில்

தரித்திருப்பவர்களாகவும், காவ்ய. நாடகங்களாலும், வேதாந்தத்தின் அர்த்தத்தை வெளியிடும் உத்தமமான ஸ்தோத்ரங்களாலும், நவரஸாலங்காரம் பொருந்திய ப்ரபந்தங்களாலும், ஸ்ரீ தேவியை ஸந்தோஷப் படுத்து பவர்களாகவும் இருக்கின்றனர். இந்தத்தேவிகள் ரஹஸ்ய யோகினிகளென்றழைக்கப்படுகின்றனர். இந்தச் சக்ரத் தின் நாயகி த்ரிபுராஸித்தா எனப்படுவள். கேசரீ எனும் முத்ராதேவி இந்தச் சக்ரத்தைக் காக்கின்றனள்.

## (எட்டாவதாவரணம்) ஆயுதமண்டலம்.

விந்திய மலேயின் செருக்கையடக்கியவரே! வஶின் யாதிகளின் ப்ராகாரத்திற்கும்மேலே இருபது முழம் உயரமும் நான்கு நல்வம் அதாவது ஆயிரத்து அறு நூறு முழம் விஶாலமும் உடைய அஸ்த்ர சக்ரமிருக் கின்றது. அங்கே பாணுதி அஸ்த்ரங்களுக்கு அதிஷ்டான தேவதைகள் இருக்கின்றனர். ஆதி ஸ்திரீயும் ஆதி புருஷ னுமான காமேஶ்வரி காமேஶ்வரர்களின் இரு ஐந்து பாணங்களும் ப்ரகாஶம் பொருந்திய இரண்டு அங்கு ஶங்களும், புதிய நாமக்கரும்பினலாகிய இரண்டு தனுஸ் ஸுகளும், மிக ப்ரகாஶமான இரண்டு பாஶங்களும் அங்கே விளங்குகின்றன.

ஹே கும்பஸம்பவரே! காமேஶ்வரியினது ஆயுதங் கள் நான்கு, காமேஶ்வரரது ஆயுதங்கள் நான்கு, ஆக மொத்தம் எட்டு ஆயுதங்கள் மிக்க பிரகாஶத்தோடு அங்கே விளங்குகின்றன. பண்டாஸுர மஹாயுத்தத்தில் தானவர்களின் இரத்தத்தைப் பானஞ்செய்து அதனுல் மிகக்களிப்படைந்து ப்ரகாஶிக்கும் அந்த திவ்யாஸ்த்ரங் களுக்குப் பரிவாரமான ஆயுதங்கள் கோடிக்கணக்காய் இருக்கின்றன. வஜ்ரம், ஶக்தி, ஶதக்னீ, புஸுண்டீ, முஸ லம், கணயம், பட்டஸம், முத்கரம், பிண்டிபாலகம்

முதலிய கோடிக்கணக்கான ஆயுதங்கள் மதோன்மத்தைகளாய் முற்கூறிய எட்டுப் ப்ரதான ஆயுதங்களை ஸேவிக்கின்றன.

அகஸ்த்யரே! ஶஸ்த்ர ப்ராகாரத்திற்கு மேலே இருபது முழம் உயரமும், ஆயிரத்து அறுநூறு முழம் விஶாலமும் உள்ள ஒரு க்ருஹம் இருக்கின்றது. அது நான்கு ஸமயேஶிகளது இருப்பிடமாகும். அவர்கள் காமேஶீ முதலிய மூன்று தேவிகளும் நான்காவதான லலிதேஶ்வரியுமாகும். இந்த லலிதேஶ்வரிதான் ஸமஸ்த ப்ரபஞ்சங்களையும் ஸ்ருஷ்டித்த மாதா ஆவள். காமேஶீ, வஜ்ரேஶீ, பகமாலினீ என்பவர்கள் மூன்று ஸமயேஶிகளாவர், காமேஶ்வரி முதலிய நால்வரையும் ஸமஸ்த * தர்ஶனங்களுக்கும் அதிதேவதைகளான பலவகை ஶக்திகளும் ஸேவிக்கின்றனர்.

ஸ்ரீகாமேஶ்வரரது இடது துடையில் அமர்ந்துள்ள லலிதாம்பிகை எனும் ஸ்ரீ தேவியானவள், இங்கு இது வரை கூறப்பட்ட சக்ரேஶிகளின் ப்ரஸங்கத்திலும் யோகினிகளுடைய ப்ரஸங்கத்திலும் அவரவர்களை பூர்த்தி செய்து வைப்பவளாய் இருக்கிருள். அஃதெங்ஙனமெனின் காமேஶ்யாதிகளில் நான்காவதாகவும், யோகினீ சக்ரேஶ்வரிகளில் ஒன்பதாவதாகவும், நித்யைகளில் பதினருவதாகவும் தேவி இருக்கிருள்.

‡ (குருமண்டலம்.)

இல்வலனைச்சிக்ஷித்தவரே! ஸமயேஶிகளின் ப்ராகாரத்திற்கு மேலே நாதாந்தரமெனும் குருமண்டல ப்ராகாரம்

* ஷட்தர்சநங்கள் — ந்யாயம், வைசேஷிகம், ஸாங்க்யம், யோகம், பூர்வமீமாம்ஸை, உத்தரமீமாம்ஸை (வேதாந்தம்) என்பனவாம்.

‡ குருமண்டலம், நித்யாமண்டலம், ஷடங்கம் இவைகள் முதலாவது ஆவரணத்தில் பூஜிப்பது ஸம்ப்ரதாயமாகும்.

இருக்கின்றது. அதுவும் முற்கூறிய ப்ராகாரங்களைப் போலவே இருபது முழம் உயரமும் ஆயிரத்தறுநூறு முழம் பரப்புமுள்ளது. படிக்கட்டுகளால் அலங்கரிக்கப் பெற்றது.

அங்கே பரதேவதையின் யோகசாஸ்த்ரத்தைப் பரப்பி நன்கு வ்ருத்தி செய்பவர்களாகவும், எல்லோருக்கும் மந்த்ரோபதேசம் செய்யும் குரவர்களாகவும், மஹா காமேஶ்வரரால் லோகரக்ஷணார்த்தம் ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்களாகவும், மஹா வித்யைகளுக்குக் கடல் போன்றவர்களாகவுமுள்ள நான்கு யுகநாதர்கள் இருக்கின்றனர். மித்ரேசர், ஓட்டீசர், ஷஷ்டீசர், சர்யாநாதர் என்பன அந்த நால்வரது பெயர்களாகும். கும்பஸம்பவரே! இந்நான்கு யுக நாதர்களாலும் லோகரக்ஷணத்திற்காக பாதுகாஸ்வரூபர்களும், தங்கள் தங்கள் குருவுடன். ஸாலோக்ய, ஸாமீப்ய. ஸாரூப்ய, ஸாயுஜ்ய முக்திகளை அடைந்தவர்களுமான தேவக்கூட்டம், ஸித்தக்கூட்டம், மநுஷ்யக்கூட்டம், தேவரிஷிக்கூட்டம் (பரௌகம்) ஆகிய நான்கு மஹா ஆசார்யக்கூட்டங்கள் படைக்கப்பட்டன. இந்த நான்கு குரு ஓகங்களும் முற்கூறிய மித்ரேஶாதி நான்கு ஆசார்யர்களைச் சேவிக்கின்றன.

### நித்யாமண்டலம்.

நாதாந்தரமென்னும் இந்த ப்ராகாரத்திற்குமேல் இருபது முழம் உயரமும், ஆயிரத்தறுநூறு முழம் விஸ்தாரமுமுள்ள நித்யாந்தரம் என்னும் ஒருத்தமமான ப்ராகாரமிருக்கின்றது. அதில் காமேஶ்வரீ, பகமாலினீ, நித்யக்லிந்நா, பேருண்டா, வஹ்நிவாஸினீ, மஹாவித்யேஶ்வரீ, தூதீ, த்வரிதா, குலஸுந்தரீ, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வமங்களா, ஜ்வாலாமாலிநீ, சித்ரா என்னும் பதினைந்து நித்யா தேவிகள் இருக்கின்றனர். மஹாபல பராக்ரமம் வாய்ந்த இவர்கள் முறையே ப்ரதமை

முதலிய திதிகளாய் விளங்கி மூவுலகங்களையும் வ்யாபித்துக்கொண்டு கால ரூபிகளாய் விளங்குகின்றனர். காலனை விழுங்குவதில் மிகச் சாமர்த்யமுள்ளவர்கள். வெகுகாலம் ஜீவித்திருக்கும் ப்ரம்ஹா, விஷ்ணு முதலிய அனைவர்க்கும் அவரவர்களது 10 ஆயுஸ் ரூபமான ஜீவித காலமாயிருந்து கொண்டு தேவியின் ஆக்ஞையைப் பரிபாலிக்கின்றனர். அவர்கள் எப்பொழுதும் விழிப்புடனேயே இருக்கின்றனர். அவர்களுக்கு யாதொருவிதமான துன்பமும் கிடையாது. ஸ்ரீ தேவியை ரக்ஷிக்கின்ற இவர்கள், தம்மோடு ஐக்ய ஸ்வரூபிணியான பரதேவதையை, லோகக்ஷேமத்தின் பொருட்டு ஸேவிக்கிறனர். இவர்களது இருப்பிடம் "அ" முதல் "அம்" வரையிலுள்ள பதினைந்து ஸ்வரங்க(உயிரெழுத்துக்க)ளால் அமையப் பெற்றது. பதினாறுவது ஸ்வரமான "அ:" என்பது பதினாறுவது நித்யையினது இருப்பிடமாகிய பிந்துசக்ரமாகும்.

## ஷடங்க தேவிகள்

இந்த நித்யாந்தராளத்திற்குமேல் அங்கதேவிகளது ப்ராகாரமிருக்கின்றது. அதுவும் முன்போலவே இருபது முழம் உயரமும், ஆயிரத்து அறுநூறு முழம் அகலமுமுள்ளது. படிக்கட்டும் முற்கூறியதுபோலவே அமைந்திருக்கின்றது, அங்கு ஹ்ருதயதேவி, சிரோதேவி முதலிய ஶக்திகள் இருக்கின்றனர். அவர்கள், ஹ்ருதயதேவி, சிரோதேவி, சிகாதேவி, கவசதேவி, நேத்ரதேவி, அ (ஶ) ஸ்த்ரதேவி என்று கூறப்படும் ஆறு ஶக்திகளாவர். காமேஶ்வரரது மனைவியான ஸ்ரீ காமேஶ்வரீ தேவிக்கு அவர்கள் மிகவும் ஸமீபத்திலிருப்பவர்கள். புதிய யௌவன அழகு நிறைந்தவர்கள். ஊக்கத்துடன் ஆயுதங்களைத் தரிப்பவர்கள். பிந்து பீடத்திற்கு நாற்புறங்களிலும் ப்ரகாஶமான ஶரீரத்துடன் சுற்றிக் கொண்டிருப்பார்கள். ஸ்ரீ லலிதாம்பாளுடைய அங்கங்களை ரக்ஷித்துக் கொண்டிருக்கின்றனர்.

(ஒன்பதாவது ஆவரணம்)

இந்த அங்கதேவியினது ப்ராகாரத்திற்கு மேலே மண்டலாகாரமான பிந்துவென்னும் மஹாபீடமிருக்கிறது. அது பத்து முழம் உயரமும் மூவாயிரத்து இருநூறு முழம் அகலமுமுள்ளது. உதயஸூர்யனைப்போல் விளங்கும் அது பிந்துபீடம் என்றும் ஸ்ரீபீடம் என்றும் உத்கோஷிக்கப்படுகின்றது. அன்றியும், அது மஹாபீடம், வித்யாபீடம், ஆநந்தபீடம் எனவும் வழங்கப்படுகின்றது. அது ஐம்பது பீடங்களின் ஸ்வரூபத்தைத் தரித்துக்கொண்டிருக்கின்றது. அங்கே, மூவ்வுலகிற்கும் காரணமான பஞ்சப்ரம்ஹமயமான ஒரு பெரிய மஞ்சம் விளங்குகின்றது. அந்த மஞ்சத்திற்குப்பத்து முழம் உயரமும், மூன்று முழம் சுற்றளவுமுள்ள நான்கு கால்களிருக்கின்றன. ஸதா ஸ்ரீதேவியைத் தியானஞ்செய்து அதனால் ஶக்திகளாக மாறிய ப்ரம்ஹா, விஷ்ணு, மஹேஶ்வரன், ஈஶ்வரன் ஆகிய இந்நால்வருமே அந்த நான்கு கால்களாக நிற்பவர்கள். ஜபா புஷ்பம்போல் ப்ரகாஶமான காந்தியையுடைய ஒரு காலாக இருப்பது ப்ரம்ஹா. அது அக்நி மூலையிலுள்ளதாகும். இரண்டாவது கால் இந்த்ர நீலக்கல்போல் கறுத்த காந்தியோடுகூடியது. அது நிருருதி திக்கிலுள்ள மஹாவிஷ்ணு வடிவமாயுள்ளது. ஶுத்த ஸ்படிகம்போல் நிர்மலமாயிருக்கிற மூன்றுவது கால் ருத்ரரூபியாய் வாயு கோணத்திலிருக்கின்றது. கர்ணிகா புஷ்பம்போல் கபில வர்ணமாயிருக்கும் நான்காவதுகால் ஈஶ்வர வடிவமாய் ஈஶாந திக்கிலிருக்கின்றது. நான்கு கால்களின் வடிவமாயுள்ள இவர்கள் எல்லோரும் ஆயுதங்களுடன்கூடியவர்களாகவும், ஸர்வாலங்காரங்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்களாகவும், மேலும் கீழும் ஸ்தம்ப வடிவமாகவும், இடையே புருஷ ஶரீரங்களுடன் விளங்கி, தேவி த்யானத்தால் பாஹ்ய வ்ருத்தியற்று மூடிய கண்களுடையவர்களாகவும், ஒரே த்யானத்தில்

அசைவற்ற அங்கங்களுள்ளவர்களாகவும் இருக்கின்றனர். அவர்களுக்கு மேலே ஸதாஶிவர் பலகையாக விளங்குகிறுர். மலர்ந்த மாதுளம் புஷ்பம்போன்ற காந்தியுள்ளதும், ஆயிரத்து அறுநூறு முழம் அகலமும், இரண்டாயிரத்து நாநூறு முழம் நீளமுள்ளதுமான அப்பலகை எப்போதும் ப்ரகாஶித்துக் கொண்டிருக்கின்றது. அங்கதேவீப்ராகாரம்முதல் இந்தமஞ்சப்பலகை வரையில் எல்லாம் சிந்தாமணிமயமானவைகளே. தத்வ ஸ்வரூபமான முப்பத்தாறு படிக்கட்டுகளங்கே விளங்குகின்றன. மேல்வரிசை க்ரமமாக அவைகளைக் கூறுகிறேன். அவை' பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாஶம், கந்தம், ரஸம், ரூபம், ஸ்பர்ஶம், ஶப்தம், உபஸ்தம், பாயு, பாதம், பாணி, வாய், மூக்கு, நாக்கு, கண், தோல், காது, அஹங்காரம், புத்தி, மநஸ், ப்ரக்ருதி, புருஷன், நியதி, காலம், ராகம், கலா, (அ) வித்யா, மாயா, ஶுத்தவித்யா, ஈஶ்வரர், ஸதாஶிவர், ஶக்தி, ஶிவம் என்பனவாகும். இந்த முப்பத்தாறு தத்துவங்களே அங்கே படிகளாக அமைந்திருக்கின்றன. இந்தப் படிக்கட்டுகளின் வரிசையானது மஞ்சத்திற்குக் கிழ்த்திசையில் அமைந்திருக்கின்றது. மஞ்சத்தின் காலுக்கருகே கோடி ஸூர்யனுக்கு ஸமமான காந்தியுள்ளதும், இடையிடையே தகதகவென்று ப்ரகாஶிக்கும் ஸ்வர்ணமுள்ளதும் நுனியில் முத்துப் பூங்கொத்துகள் தொங்கவிடப்பட்டதும், நானுரத்னமயமாய் விளங்குவதும், அழகானதும், தாம்பூல த்ரவத்தினுல் உண்டான வாஸனையுள்ளதும், ஊமத்தம் பூப்போன்ற அமைப்புள்ளதுமான கலாசீ என்னும் தாம்பூலந்துப்பும் பாத்ரம் ஒன்று இருக்கின்றது. கடலைப்பருகினவரே! மூன்று முழம் உயரமும் ஆயிரத்து அறுநூறு முழம் விஶாலமுமுள்ள ஹம்ஸதூலிகாதல்பம் மஞ்சத்தின் மேலிருக்கிறது. அதன்மேல் கால்தலையணைகள் இரண்டும், தலைத் தலையணைகள் இரண்டும் இருக்கின்றன. சிவந்த

காந்தியுள்ள நான்கு திண்டுகளால் படுக்கை மிக அழகாக இருக்கிறது. அதன்மேல் ஶுத்தமானதும், ம்ருதுவானதும், பத்மராக மணியைப்போன்ற காந்தியுடையதாயுமுள்ள கௌஸும்ப வஸ்த்ரம் விரிக்கப்பட்டிருக்கிறது. அதன்மேலே, கிழக்கு முகமாக இருப்பவரும், தயையோடு கூடியவரும், ஶ்ருங்கார வேஷத்தால் மிக அழகாயிருப்பவரும், எப்போதும் பதினறு வயதுள்ளவரும், உதய ஸூர்யபிம்பம்போல் காந்தியுள்ளவரும், நான்கு கரங்களும், மூன்று நேத்ரங்களுமுள்ளவரும், ஹாரம், கேயூரம், கிரீடம், கடகம் முதலிய ஆபரணலங்காரமுள்ளவரும, அழகிய சிரிப்பு எனும் நிலவினுல் ப்ரகாஶிக்கும் கன்னங்களை உடையவரும், மிகச் சிறந்தவருமான பகவான் ஆதிதேவன் ஸ்ரீ காமேஶ்வரர் ப்ரகாஶிக்கிருர். அவருடைய மடியின் மீதிருப்பவள ஸ்ரீலலிதா. பாலஸூர்யனைப்போற் சிவந்த திருமேனியுள்ளவள்; எப்போதும் பதினறு வயதுள்ளவள்; புதிய யௌவனத்தால் கர்வங்கொண்டவள்; கடைசற் பிடித்த பத்மராகம் போன்ற காந்தியுள்ள பாதாரவிந்த நகக் காந்தியுள்ளவள்; செம்பஞ்சுக் குழம்பை அபேக்ஷிக்காமல் இயற்கையாகவே சிவந்தபாதக் காந்தியுள்ளவள்; அதிமதுரமாய் ஶப்திக்கின்ற பாதச் சலங்கையாலும், கங்கணங்களாலும் அழகாயிருப்பவள்; மன்மதனென்னும் வீரனுடைய பாணப்பெட்டியின் கர்வத்தை அழிப்பதான முழங்கால்களுள்ளவள்; யானைத் துதிக்கையையும் வாழைத் தண்டையும் ஒத்த துடைகளாலழகியவள்; சிவந்ததும் வழுவழுப்பானதும் மெல்லியதுமான பட்டாடையால், அலங்கரிக்கப்பட்ட இடுப்பின் கீழ்ப்பாகத்தையுடையவள்; விஶாலமான இடுப்பின் பின்புறத்தாற் ப்ரகாஶிப்பவள்; ரத்ந ஒட்டியாணத்தால் ப்ரகாஶிப்பவள்; வணக்கமான நாபிக்குமேலுள்ள மூன்று மடிப்புகளாகிற காந்திப் ப்ரவாஹமுள்ளவள்; மொக்குப்போன்ற ஸ்தனங்களில்

ஊஞ்சலாடுகின்ற நூற்றுக்கணக்கான முக்தாஹாரங்களுடன் கூடியவள்; மிகப் பெருத்ததான ஸ்தநபாரத்தினுல் சிறிது வணங்கிய இடுப்பையுடையவள்; காட்டு வாகைப் புஷ்பம்போல் அதிம்ருதுவானதும், கேயூர கங்கண வரிசைகளுள்ளதும் மோதிரங்கள் தரித்த விரல்களோடு கூடியதுமான நான்கு கைகளையுடையவள்; கடைசற்பிடித்த சங்கம்போன்ற அழகிய கழுத்தையுடையவள்; முகமாகிற கண்ணாடிக்குக் காம்புபோன்ற கன்னமுள்ளவள்; சிவந்த உதடுகளை உடையவள்; ஶுத்தமானதும், வரிசையாய் அமைந்ததும் ப்ரகாஶமுள்ளதும் மல்லிகையரும்பு போன்ற காந்தியுள்ளதும் வித்யா ஸ்வரூபமுமான பற்களால் நிலவையளிப்பவள்; பெரும் முத்தோடுகூடிய புல்லாக்கினுல் ப்ரகாஶிப்பவள்; தாழம்பூவின் உள்மடல்போல் மிக நீண்ட கண்களுள்ளவள்; அர்த்தசந்த்ரன் போன்ற நெற்றித் திலகம் உள்ளவள்; மாணிக்க குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்ட காதுகளுள்ளவள்; புதிய கர்ப்பூரம், கஸ்தூரி இவைகளால் ஸதா வாஸனை நிறைந்த தாம்பூல மடிப்புள்ளவள்; ஶரத்கால சந்த்ர மண்டலம் போன்ற மதுரமான முகமுள்ளவள்; சிந்தாமணிகளுடைய ஸாரத்தினுல் இழைக்கப்பட்ட கிரீடமுள்ளவள்; அழகிய திலகம்போல் ப்ரகாஶிக்கும் நெற்றிக்கண்ணுள்ளவள்; அடர்ந்த இருள் போல் நெருக்கமாயும் கறுத்ததாயுமிருக்கிற கேஶமுடையவள்; வகுட்டுக்கோட்டில் வைக்கப்பட்ட ஸிந்தூரத்தால் ப்ரகாஶிப்பவள்; மிகுந்த ப்ரகாஸமான சந்த்ரகலையைத் தலையில் தரித்திருப்பவள்; மதத்தால் சஞ்சலமான கண்களுடையவள்; ஶ்ருங்காரத்திற்குரிய ஸமஸ்தமான வேஷங்கள் நிறைந்தவள்; ஸகல ஆபரணங்களையுமணிந்திருப்பவள்; ஸமஸ்த உலகங்களுக்கும் தாயாக இருப்பவள்; ஸதா ஆனந்தத்தை வ்ருத்திசெய்பவள்; ப்ரஹ்மா,

விஷ்ணு, ருத்ரன், ஈஸ்வரன், ஸதாஸிவன் ஆகிய இவர் களுக்கு ஆதி காரணமாயிருப்பவள்; கடைக்கண்ணி லிருந்து சுரந்து ஓடும் கருணு ப்ரவாஹத்தினுல் எல்லோ ரையும் ஸந்தோஷப்படுத்துபவள்; ஸகல பாபங்களேயும் போக்கடிப்பவள். இத்தகைய குணமுள்ள பகவதி ஸ்ரீ லலிதாம்பிகை அங்கு ப்ரகாஸிக்கின்ருள்.

ஸ்ரீ தேவியைப் பூஜிப்பது இதர தேவதைகளைப்பூஜித்து அதன் பலனுல் கிடைக்கத்தக்க பாக்யம் என்பார்கள். அன்றியும், அவளைப்பூஜிப்பதே, அவளைப்பூஜித்ததாலுண் டாகும் பயனுகும். அப்படிப்பட்ட ஸ்ரீலலிதாதேவியின் ஸரீ ரத்தை எப்படி வர்ணிப்பேன்? ஆயிரங்கோடி வருஷங்களா லுலும்ஓரம்ஸம் பூர்ணமாகவர்ணித்தல் முடியாது.வர்ணனே என்பது வாக்ரூபமானது. அவளிடத்தில் வாக்கு எப்படிச் செல்லும்? வாக்குகள் மனதுடன்கூட அவளைத்தேடி அடையமுடியாமல் அங்கிருந்து திரும்புகின்றன. அதிகங் கூறுவதேன்? தத்வமான இதைக் கேளும்! பக்ஷபாதத் தினுலோ, ஸ்நேகத்தினுலோ மோஹத்தினுலோ, நான் கூறவில்லே? தபோநிதியான முனிவரே! கல்ப வ்ருக்ஷத் தின் கிளைகள் எல்லாம் எழுதுகோல்களாயிருக்கட்டும்; ஸப்த ஸமுத்ரங்களும் மைப்பாத்திரங்களாக இருக்கட் டும்; ஐம்பதுகோடி யோஜனே விஸாலமுள்ள பூமியே எழுதப்படும் ஓலே அல்லது காகிதமாயிருக்கட்டும்; எழுதுங்காலம் ஒரு ப்ரம்ஹாவின் ஜீவித காலத்திற்கு அதிகமான வருஷங்களே ஆகட்டும்; ஒவ்வொருவரும் கோடிக்கணக்கான கைகளைப் பெற்றுப் பதினுன்கு புவ னங்களிலுள்ள அனேவரும் எழுதட்டும்; ப்ரஹஸ்பதிக்கு ஸமமாக எல்லோரும் சொல்லட்டும்; அப்படி இருந்தா லுங்கூட ஸ்ரீ தேவியினுடைய ஒரு பாதாரவிந்தத்தின் ஓரங்குலியின் அழகில் ஆயிரத்திலோரம்ஸத்தைக்கூட வர்ணிக்கமுடியாது. ஆதலின் அவளது குணத்தைத் துதிப் பதில் ஸமஸ்தமான வாக்வ்ருத்திகளும் பயனற்றதாகவே முடியும்.

பிந்து பீடத்திற்கு நாற்புறங்களிலும் கருநிறம் வாய்ந்த மஹாமாயை என்னும் திரை (திரஸ்கரிணி) சதுரஸ்ரமாகத் தொங்குகின்றது. தேவிக்கு மேலே நாற்பது முழம் உயரத்தில் மூவுலகிலும் கிடைக்காத இந்த்ர கோபப்பட்டு விதானம் கட்டப்பட்டிருக்கிறது. அங்கு அதிமனோஹரமாயிருக்கும் அலங்காரத்தை வர்ணிக்க ஆரம்பிக்கும்போதே எனது வாக்கு வெட்கத்தால் வெளிக்கிளம்பாமல் கண்டத்திலேயே (கழுத்துடன்) நின்றுவிட்டது. ஆங்குள்ள ஒப்பற்ற ஸகல குணங்களையும் வாணிதேவிதான் அறிவாள். மனதிற்கெட்டாத அந்த அழகை எவரே வர்ணிக்க வல்லவராவர்?

இங்ஙனம் பண்டாஸுரனைக் கொல்லச் சிதக்னியிலிருந்து தோன்றிய ஸ்ரீலலிதாம்பிகை, அஸுரர் அனைவரையுங்கொன்று, திவ்ய சிற்பிகளாலமைக்கப்பட்டதும், பதினாறு க்ஷேத்திரங்களிலே இருப்பதுமான ஸ்ரீநகரத்திலே இருந்து உலகை ரக்ஷிக்கின்றுள். இங்ஙனமே இதர ஸ்ரீபுரங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. அமைப்பில் அவற்றிற்கு யாதொரு அற்ப பேதமும் கிடையாது. பெயர் மாத்திரந்தான் வெவ்வேருகும். என்றுமழியாத ஸகல ஸ்ரீபுரங்களும் ஸ்ரீ லலிதையின் விருப்பத்தால் எண்ணிறந்த பக்தர்களுக்கு இடமளிக்கின்றன.

நாநாவ்ருக்ஷ மஹோத்யானம் முதல் ஆரம்பித்து க்ரமமாக ஸ்ரீபுரத்தில் வர்ணனுரூப கதையைக் கூறுபவர் உயர்ந்த நிலையை அடைவார்கள். அதைக்கூறுங்களென்று ஆர்வத்தோடு வினவியவரும், அக் கதையைக் கேட்டவரும், அதைச் சொல்பவரும், புத்தகத்தில் எழுதி அதை வீட்டில் வைத்திருப்பவரும் உத்தம கதியை அடைவார்கள். இங்கு வர்ணித்த வண்ணம் சிற்பிகளைக்கொண்டு அந்தந்தக் கோட்டைகளையும் அமைத்து, ஸ்ரீதேவிக்கு ஓரழகிய பெரிய ஆலயம் அமைக்கும் சிறந்த பக்தர்களும், மோக்ஷ ஸாம்ராஜ்யமெனும் பரகதியை அடைவார்கள்.

முப்பத்து மூன்றும் அத்யாயம் முற்றிற்று.

## முப்பத்து நான்காம் அத்யாயம்.

### மந்த்ரராஜமும் அதன் ஸாதநமும்

**அகஸ்த்யர்:**—ஸ்ரீ தேவியினது ஆவிர்பாவம் முதலிய சிறந்த சரிதமும், பண்டாஸுரனது வதமும், ஸ்ரீநகரத்தின் அமைப்பும் என்னால் ச்ரவணஞ் செய்யப்பட்டன. இப்போது அத்தேவியினது மந்த்ரத்தின் ஸாதநத்தையும் தேவி பக்தர்களது லக்ஷணத்தையும் கேட்க ஆவல் கொண்டிருக்கிறேன். அஃதெல்லாவற்றையும் அருள் புரிவீராக.

**ஹயக்ரீவர்:**— முனிவரே! எல்லாப் பொருள்களையும் விட சப்தமென்பதே மிகச் சிறந்தது. எல்லா சப்தங்களையும் விட வேதராசியே மிகச்சிறந்தது. எல்லா வேதங்களிலும் வேதமந்த்ரங்கள் மிகச்சிறந்தன. அவைகளிலும் சிறந்தன துர்க்கா மந்த்ரங்களாம். அவைகளை விட மிகச்சிறந்தவைகள் திவ்யமான கணபதிமந்த்ரங்கள் அவைகளிலும் ஸௌர்ய மந்த்ரங்கள் மிகச்சிறந்தனவாம். அவைகளைவிட சைவ மந்த்ரங்கள் மிகச்சிறந்தனவாம். அவைகளைவிட லக்ஷ்மீ மந்த்ரங்களும், அவைகளையும்விட ஸாரஸ்வத மந்த்ரங்களும், அவைகளைவிட பார்வதீ மந்த்ரங்களும், அவைகளையும்விட ஆம்நாய மந்த்ரங்களும் அவைகளையும்விட வாராஹீ மந்த்ரங்களும் சிறந்தனவாம்; அவற்றையும்விட ச்யாமளா தேவியினது மந்த்ரங்கள் மிக மிகச் சிறந்தனவாம் இல்வலனையடக்கிய முனிவரே! அவைகளையும்விடப் பத்து வகையாகக் கூறப்படும் ஸ்ரீ லலிதா தேவியினுடைய மஹாமந்த்ரங்கள் சிறந்தன. அவற்றிலும் மிக மிகச் சிறந்தவை இரண்டாம். அவை லோபாமுத்ரா, காமராஜம், எனப்படும். ஹாதிவித்யை லோபா முத்ரா என்றும், காதி வித்யை காமராஜம் என்றும் அழைக்கப்படும். ஹம்ஸாதியான மந்த்ரத்திற்கு வாச்யார்த்தம் காமராஜமஹேஸ்வரனும்; காதியான மந்த்ரத்திற்கு ஸ்ரீ லலிதாம்பிகையே வாச்யார்த்தமாவள். ஹாதி காதியென இவ்விரண்டிற்கும்

பேதம் (முதல்) மூன்று அக்ஷரங்களால் ஏற்பட்டதாகும். அவ்விரண்டிற்குள் காமராஜம் என்பது பக்திமான் களுக்கு ஸித்தியை அளிப்பதாகும்.

ஶிவன், ஶக்தி, காமன், க்ஷிதி, மாயை, ஹம்ஸம், ப்ருகு. காமன், இந்த்ரன், புவனேசன், சந்த்ரன், மன்மதன், பூமி, ஹ்ருல்லேகை இவற்ருேடு கூடிய மந்த்ரம் ஹாதிவித்யையாம். ஆரம்பத்தில் மன்மத, யோநி, ஸ்ரீ பீஜங்களுள்ளது காதிவித்யையாம்.

ஸ்ரீ லலிதாம்பிகையைக் கூறும் பஞ்சதஶாக்ஷரீ மஹா மந்த்ரத்தை ஜபிப்பவர்கள் மஹா பாக்யசாலிகளாவார்கள் எங்குமவர்களுக்கு ஸித்தி உண்டாகும். ஸத்குருவினிடமிருந்து இம் மஹா மந்த்ரத்தைப் பெற்று மேலே கூறும் வண்ணம் அறிவுள்ளவன் நன்ருக அதை சாதிக்க வேண்டும். அதன் க்ரமத்தைக் கூறுகின்றேன்; ஊக்கத்துடன் கேள்!

காலையில் எழுந்திருந்து, ப்ரகாஶமானதும், ஆயிரம் தளங்களுள்ளதும், கேஸரத்துடன் கூடியதுமான கமலத்தை ஶிரஸில் நினைத்து, அதில் கருணவடிவினராய் ஸந்தோஷமுள்ளவராக ஸ்ரீ குருவை த்யானம் செய்தல் வேண்டும். பிறகு வெளியில் சென்று சௌசம் முதலியவைகளைச் செய்து முடித்துக்கொண்டு வீட்டிற்கு வந்து, வாஸனையோடுகூடிய தைலத்தைத் தேய்த்து உடலைப் பிடித்துவிட்டு ஶுத்தமான உஷ்ண ஜலத்தில் ஸ்நாநம் செய்தல் வேண்டும். இயற்கையிலேயே ஜலம் ஶுத்தமானது. (ஶுத்தமான) அக்நியுடன் அது கூடிஞல் அதன் தூய்மையைப் பற்றிக் கூறவேண்டுமா? ஆதலிஞல் வெந்நீரில் நீராடி, அஃதில்லாவிடில் கிடைத்த நீரில் ஸ்நானஞ் செய்து ஶுத்தமான குஸும்பவர்ணம் அல்லது சிவந்த நிறமுள்ள இரண்டு வஸ்த்ரங்களை உடுத்திக் கொண்டு காலை கழுவி ஆசமனம் செய்ய வேண்டும்.

பரிஶுத்தனய் பராம்பிகையைத் தியானஞ் செய்துக் கொண்டு அவரவர் குலாசாரப்படி ஊர்த்வ புண்ட்ரமோ த்ரிபுண்ட்ரமோ, பட்டவர்த்தனமோ, ஆத்தியிலேப்போல வோ நெற்றியில் புண்ட்ரத்தைத் தரித்துக்கொள்ளல் வேண்டும். அழகிய கர்ப்பூரம், கஸ்தூரீ, சந்தனம் முத லியவைகளைப் பூசிக்கொண்டு, ஆபரணங்களை அணிந்து ஶ்ருங்கார வேஷத்தைத் தரிக்கவேண்டும். மணமுள்ள புஷ்பங்களை ஶிரஸிலணிந்து செல்வத்திற்கேற்றபடி ஆபரணங்களையும் அணிதல் வேண்டும். ஶக்தியற்றவர் கள் ஸங்கல்பத்தால் அதாவது மனதினல் அந்தந்த ஆப ரணங்களை அணிந்திருப்பதாக நினைத்தல் வேண்டும். பின்னர் உள்ளும் புறமும் ஶுத்தனய் ஸந்த்யா வந்தனத் தை அனுஷ்டிக்க வேண்டும். அரச இலைபோன்ற பாத் ரத்தினல் தர்ப்பை, அக்ஷதை, பஷ்பம். சந்தனம் இவை களுடன் ஸூர்யனுக்கு அர்க்யம் அளிக்கவேண்டும். அங் ஙனம் ஸூர்யனுக்கு அர்க்யமளித்த பின்னர் ஸ்ரீலலி தைக்கு மூன்று அர்க்யமளிக்கவேண்டும். ஶக்திக்கேற்ற வாறு மூலமந்த்ரத்தினல் ஸ்ரீ லலிதேஶ்வரிக்கும் விதிப் படி, தேவ, ரிஷி, பித்ரு வர்க்கங்களுக்கும் தர்ப்பணஞ் செய்தல் வேண்டும். பின் மௌனியாய் தூய மனமுள்ள வனய் மக மந்த்ரமெனும் யாகசாலையை அடைந்து, ந்யாஸ கண்டத்திற் கூறும் வண்ணம் க்ரமமாக ந்யா ஸங்களைச் செய்துக்கொண்டு, ம்ருதுவான ஆஸனத்தில் அமர்ந்து மஹத்தான ஸ்ரீநகரத்தை த்யானஞ் செய்தல் வேண்டும்.

நாநா வ்ருக்ஷ மஹோத்யானம் முதல் ஸ்ரீ லலிதா தேவி வரையிலுள்ள திவ்யமான ஸ்ரீ நகரத்தை. மனதை வெளியிற் செலுத்தாமற் ஶுசியாய் த்யானம் செய்ய வேண்டும். ஸமர்த்தனன ஸாதகன் பூ ஜா கண்டத்திற் கூறியபடி பூஜை செய்தல் வேண்டும். கர்ப்பூர கஸ்தூரி-களால் வாஸனையுள்ள ஜபமாலையை எடுத்துக்கொண்டு,

வடக்கு அல்லது கிழக்கு முகமாக அமர்ந்து, ஸ்ரீ ஸிம்ஹாஸநேஶ்வரியை ஜபிக்கவேண்டும். ஸமர்த்தன் முப்பத்தாறு லக்ஷம் முறை ஸ்ரீவித்யையை ஜபிக்க வேண்டும். அதில் பத்திலொருபங்கு ஹோமமும், அதில் பத்திலொருபங்கு தர்ப்பணமும், அதில் பத்திலொரு பங்கு ப்ராம்ஹண போஜனமும் விதிப்படி செய்ய வேண்டும். இவ்விதம் மந்த்ரம் ஸித்தித்த பிறகுதான், தான் விரும்பிய பலன்களை நாடி மந்த்ர ஜபம் செய்ய வேண்டும். ஒரு லக்ஷம் ஜபம் செய்தால் மனிதர்களை வஶமாக்கலாம். இரண்டு லக்ஷம் ஜபம் செய்தால் ஸகல ஸ்த்ரீகளும் வஶ்யமாவார்கள். மூன்று லக்ஷம் செய்தால் அரசனைவரும் வஶ்யமாவார்கள். நான்கு லக்ஷத்தினால் நாககன்னிகைகள் வஶமாவார்கள். ஐந்து லக்ஷம் ஜபத்தினால் பாதாளத்தில் வசிக்கும் ஸகல ஸ்த்ரீகளும், ஆறு லக்ஷத்தினால் பாரிலுள்ள பெண்மக்களனைவரும், ஏழு லக்ஷத்தினால் ஸ்வர்க்க ஸ்த்ரீகளனைவரும், எட்டு லக்ஷ ஜபத்தினால் தேவப் பிறவியில் தோன்றிய எல்லோரும், ஒன்பது லக்ஷ ஜபத்தினால் ஸமஸ்த தேவர்களும் வஶ்யமாவார்கள். பத்து லக்ஷம் ஜபத்தினால் இந்த்ரன் முதலிய ஸகல திக்பாலகர்களும் வஶமாவார்கள். பதினொரு லக்ஷம் ஜபத்தினால் ப்ரம்ஹா, விஷ்ணு, மஹேஶ்வரர்களையும், பன்னிரண்டு லக்ஷ ஜபத்தினால் அஷ்டஸித்திகளையும் வஶமாக்கலாம். இந்த்ரனுக்கு இந்த்ரபதவியும், விஷ்ணு விஷ்ணுவாயிருத்தலும், ஶிவன் ஶிவனாயிருத்தலும், சந்த்ரன் சந்த்ரனாயிருத்தலும், ஸூர்யன் ப்ரகாஶமாயிருத்தலும், ஸகல தேவர்களும் அதிப்ப்ரகாஶமான அந்தந்த ஸித்திகளைப் பெற்றதும் இந்த மந்த்ர ராஜத்தினால்தான் என்று தெரிந்துகொள்.

இந்த மந்த்ரத்தை ஜபிப்பவன் ஸர்வ பாபங்களை ஒழித்துவிட்டு மூவ்வுலகிலும் அதிஸுந்தர வடிவினனாகவும், மன்மதனுக்கு ஸமமான ரூபலாவண்யமுள்ளவனாவும்

ஸர்வக்ஞனுகவும், ஸகலராலும் பூஜிக்கத்தக்கவனுக வும், பார்த்தமாத்ரத்தில் எல்லோருடைய உள்ளத்திலும் ஆநந்தத்தை நிரப்புவனுகவும். வாக்கினுல் ப்ருஹஸ்பதிக் குச் சமனுகவும், ஸ்ரீயினுல் ஸ்ரீ பதிக்குச் சமானனுகவும், பலத்தில் வாயுவுக்குத் துல்யனுகவும், ஸ்திரமாயிருப்ப தில் ஹிமயமலேக்குச் சமனுகவும், உன்னதமாயிருத்தலில் மேருவுக்குத் துல்யனுகவும், காம்பீர்யத்தினுல் பெருங் கடலே ஒத்தவனுகவும் ஆவான். அன்றியும் தனது உருவத்தாலேயே க்ஷணத்திற்குள் சேரி, க்ராமம், நகரம் முதலியவைகளைக் கலக்குபவனுகவும், சிறிது புருவத்தை நெறிப்பதால் எல்லோரையும் அசைவற்று நிற்கச் செய்து, கொட்டாவிவிடும்படி செய்பவனுகவும், துஷ்ட சித்தமுள்ளவர்களை ஒட்டி, மோஹமடையும்படிச் செய்ய வும், கொல்லவும் ஶக்தியுள்ளவனுகவுமாகின்ருன். மிகக் கோபங்கொண்டவன்கூட, தேவீ மந்த்ர ஜபம் செய்பவ னைக் கண்டவுடன் ஸந்தோஷமடைந்து சினத்தைவிட்டுத் தெளிந்தெழுவான்; பதினெட்டு வித்யைகளிலும் பண்டித னென ப்ரஸித்தி அடைவான்; அவன் வாக்கு கங்கா ப்ரவாஹம்போல் தடையின்றியும் மதுரமாகவுமிருக்கும் அகஸ்த்யரே! ஸர்வ ஶாஸ்த்ரங்களிலும் அவனறியாதது ஒன்றுமிராது; ஸகல தர்ஶனங்களைச் செய்யவும் கண்டிக்கவும் அவன் ஶக்தியுள்ளவனுவான்; ஸகல தத்வங் களையுமறிவான்; ஸர்வக்ஞனுகவுமாவான். அவனது உள்ளம் ஸர்வ ஜந்துக்களிடமும் கருணை நிறைந்ததாயி ருக்கும். அவனது கோபாக்னிக்கு முவ்வுலகும் போதாது.

காட்டிலோ, பட்டணத்திலோ, தேவாலயத்திலோ, மடத்திலோ, வேறெங்கேயோ தங்கி ஜபம் செய்பவனி டம் பெண்கள் ஓடிவருவார்கள். அவனைக் கண்டவுடன் உலர்ந்த சருகுகள் சுழற்காற்றில் சிக்கிச் சுழல்வது போல் யுவதிகளது மனம் சுழன்று பதறும். மாதரெனும் வெண்ணெயை உருக்குந் தீப்போன்ற அவனை ஸமஸ்த வித்யாராசிகளும் ஸேவிக்கின்றன. சந்த்ர ஸூர்ய

மண்டலங்களையே ஸ்தநமாக உடைய மூவ்வுலகெனும் வனிதை ஜாபகனைப் பார்த்ததுமே அவனிடம் ஆசை கொள்வாள் எனின், மற்ற ஸாதாரணப் பெண்களைப் பற்றிக் கேட்கவும், வேண்டுமா? பட்டணங்களிலும், வீதிகளிலும், தண்ணீர்ப்பந்தல்களிலும், வீடுகளிலும், யாகசாலைகளிலும், ஆலயங்களிலும், மடங்களிலும், ஆஶ்ரமங்களிலும், அந்தப்புரங்களிலும், வழிகளிலும், உத்யான வனங்களிலும், புண்ய தீர்த்தங்களிலும், மலைக் குஹைகளிலும், கங்கை முதலிய புனித தீர்த்தங்களிலும் அவனுடைய புண்ய கீர்த்தியானது கமகமவென்று பரிமளிக்கும். அவனைப் பார்த்தவுடன் பாபிகளது பாபக் கூட்டம் பறந்தோடும். கவிஶ்ரேஷ்டர்களால் அவனது குணங்களே எங்கும் பாடப்படும். நிறபேதம், ஆயுதம், வாஹனம், பூஷணம் இவற்றின் பேதம் இவைகளோடு செய்யப்படும் தேவீ த்யானத்தினல் அதற்குரிய ஸித்திகள் அடையப்படுகின்றன.

ஸ்ரீ லலிதையின் மஹா மந்த்ரம் மூன்று கண்டங்களாக அமைந்திருக்கின்றது. அதில் முதல் கண்டமானது குந்த புஷ்பம் போலும் சந்த்ரன் போலும் வெண்மை நிறம் வாய்ந்தது. மூலாதாரத்திலிருந்து ஹ்ருதய சக்ரம் வரையில் ப்ரகாஶிக்கும் ஜ்வாலையுள்ளதாக த்யானஞ் செய்யவேண்டும். இரண்டாவது கண்டத்தை *இந்த்ர கோபத்திற்கு ஸமமாகவும், ஹ்ருதய சக்ரத்திலிருந்து நெற்றிவரையில் ஜ்வலிக்கும் சிகையுடையதாகவும் த்யானஞ் செய்யவேண்டும். பிறகு ஸகலமான பாபங்களையும் போக்கடிக்கும் மூன்ருவது கண்டம் நெற்றியிலுள்ள இரண்டு தளமுள்ள ஆக்ஞையினிடையே த்யானிக்கத்தக்கதாம்.

---

* இந்த்ரகோபம்-ஒருவகை சிவப்புப் பூச்சி.

மோக்ஷத்தை விரும்புபவர் நிலவைப்போல் வெண்மை நிற முள்ளவளாகத் தேவியைத் தியானிக்க வேண்டும். ஒருவரை வசீகரம் செய்யும்போது ஸந்த்யா காலம்போல் சிவந்தவளாக த்யானிக்க வேண்டும். சிறந்த கவியாக வேண்டுமென விரும்புவோர் ஸ்படிகம்போல் நிர்மலமாய் வெண்மை நிறமுள்ளவளாக த்யானஞ்செய்ய வேண்டும். தனத்தை விரும்புபவர் ஸ்ரீ லலிதாம்பிகையை ஸ்வர்ண வர்ணமாக த்யானித்தல் வேண்டும். ஸர்வ ஸம்பத்தும் வேண்டுமென்போர் ஶ்யாமளையாக த்யானிக்க வேண்டும். ஒருவனை ஊமையாகச்செய்ய வேண்டுமெனின், நீலையாகவும், அசைவற்றவனாக ஒருவனைச் செய்வதற்கு மஞ்சள் வர்ணமுள்ளவளாகவும் த்யானம் செய்யவேண்டும். மூலாதாரம் முதல் ப்ரம்ஹரந்த்ரம் வரையில் ஜ்வலிக்கும் மாணிக்ய தீபம்போல் தேஜப் புஞ்ஜ (கூட்ட)மாக த்யானம் செய்வோர் ஸகல ஸித்திகளையும் பெறுவர். கும்ப ஸம்பவரே! இங்ஙனம் அநேக வகையான பேதத்தினால் ஸ்ரீ தேவியை த்யானஞ் செய்வோர் அபரிமிதமான ஸம்பத்தைப் பெறுவார்கள்.

ஸத்துக்களால்தான் இந்ததேவி அடையத் தக்கவள். அஸத்துக்கள் ஒருபோதும் தேவியை அடையமுடியாது. யார் தீவ்ரமான தவம் செய்தவரோ அவரே தம் மனத்தில் தேவியைத் த்யானம் செய்யத்தக்கவர். எவனுக்கு அது கடைசி ஜன்ம மல்லவோ, எவன், தான் ஸ்வயமாகச் சங்கரனல்லவோ அவன் ஸ்ரீலலிதா பரமேஶ்வரியையோ அல்லது ஸ்ரீ வித்யையோ அடைய முடியாது. (அதாவது எவனுக்கு அது கடைசி ஜன்மமோ அல்லது எவன் ஸ்வயமாகச் சங்கரனோ அவனால்தான் ஸ்ரீவித்யையும் பரதேவதையும் அடைய முடியுமென்பது கருத்து).

அகஸ்த்யரே! ஒருவனது வம்ஶத்தில் எவருக்காவது ஒருவருக்கு இந்த மஹாமந்த்ரம் கிடைத்தால் அந்த வம்ஶத்தில் தோன்றிய அனைவரும் முக்தர்களாகவும்,

ஸந்தோஷமுள்ளவர்களாகவும் ஆகின்றூர்கள். இது மிக்க ரஹஸ்யத்திலும் ரஹஸ்யமான வித்யையென ஸர்வ சாஸ்த்ரங்களும் நிச்சயிக்கின்றன. ஸமஸ்த வேதங்களும், சாஸ்த்ரங்களும் ஸ்ரீலலிதேச்வரியையே கூறுகின்றனர். இவளே ஆத்மவித்யை! இவளே உயர்ந்த கதி! இவளே உயர்ந்த தீர்த்தம்! இவளே மஹாபலம்! இவளையே முனிவர்கள் த்யானிக்கின்றனர். யோகிகள் த்யானிக்கின்றனர். வானவரில் சிறந்தவர்கள் ஸர்வஸித்தியையுமளிக்கும் ஸ்ரீலலிதையை ஸதா அர்ச்சிக்கின்றனர். தீய குணமுள்ளவர்களாலும், அயோக்யர்களாலும், கெட்ட எண்ணமுள்ளவர்களாலும், வேதத்தால் விலக்கப்பட்டவர்களாலும், வீண் தர்க்கஞ்செய்பவர்களாலும், வீணுக அலையும் சஞ்சல புத்தியுள்ளவர்களாலும், பிறவியை வீணுக்கியவர்களாலும், ஒழுக்கமற்றவர்களாலும், அஸூத்தர்களாலும், குலத்தை விட்டு நழுவியவர்களாலும், க்ரூரமானவர்களாலும், ஸத் தர்சனத்தை வெறுப்பவர்களாலும், பாபஸீலர்களாலும், ஆசாரத்தை நிந்திப்பவர்களாலும், சார்வாக மதத்தில் ஸமர்த்தர்களாலும், கர்விகளாலும், பிறரை நிந்திப்பவர்களாலும், ஆத்மஸ்வரூபத்தை உணராதவர்களாலும், அதிக ஈர்ஷ்யை உள்ளவர்களாலும், கோபிகளாலும், குருவைப் பாதிப்பவர்களாலும், கொழுத்தவர்களாலும் கர்வமாகப் பேசுபவர்களாலும், டாம்பீகர்களாலும், அதிகர்விகளாலும் இவைபோன்ற மற்ற மனிதர்களாலும் நிச்சயமாக ஸ்ரீதேவி அடைய முடியாதவளாவள். எப்படியோ இத்தகையவர்க்கு ஸ்ரீவித்யை கிடைப்பினும் அவர்களிடத்தில் வித்யையானது பராங்முகமாகவேயிருக்கும்.

கலசத்திற் பிறந்தவரே! நீர் கேட்ட விஷயத்தையும் தேவி எல்லோராலும் பூஜிக்கத்தக்கவள் என்பதையும், தேவதைகளாலும் பூஜிக்கத்தக்கவள் என்பதையும் கூறினேன். பண்டாஸுர யுத்தத்திற்காகவே சிதக்னியிலிருந்து

இந்தத் தேவி தோன்றினள். இந்த மஹா த்ரிபுர ஸுந்தரியினுடைய மூர்த்தியானது தேஜஸ்ஸிலிருந்தே கிளம்பியதாகும். இந்த லலிதேஶ்வரி ப்ரம்ஹாவினல் காமாக்ஷியெனத் துதிக்கப்பட்டனள். அந்த ஸர்வோத்தமையான ஸ்ரீ லலிதாம்பிகையை அரிய ஶக்தியினல் த்யானம் செய்கின்ற ஸதாஸிவத்தின் மனதை லாலனை செய்ததால் லலிதா எனப் பெயர் பெற்ருள். அந்தத் தேவி எது எதைச் செய்தாளோ அஃதெல்லாவற்றையும் கூறிவிட்டேன். ஸகல பூஜாவிதானங்களையும், சாஸ்த்ரோக்தமான வழியாக வேறு கண்டத்தில் கூறுகிறேன். அந்த விலாஸம் மஹா அற்புதமானது.

## பல ச்ருதி.

கும்பஸம்பவரே! யார் இந்தத் திவ்யமான சரிதத்தைக் கேட்கிருர்களோ அவர்களுக்கு ஸித்தி உள்ளங்கை நெல்லிக்கனிபோன்றதாகும்; அவர் மறுபடியும் பிறப்பதில்லை; ஸ்ரீலலிதாதேவியின் சரிதத்தைப் படித்தாலும், கேட்டாலும், ஸர்வ பாபங்களையும் விட்டுத் தேவலோகத்தில் கொண்டாடப் படுவான். கன்யகையை விரும்புபவர் கன்யகையையும், ஜயத்தைக் கோருபவர் ஜயத்தையும், மோக்ஷத்தை இச்சிப்பவர் மோக்ஷத்தையும், தர்மத்தைக் கோருபவர் தர்மத்தையும் அடைவர். தனத்தை அபேக்ஷிப்பவர் தனத்தையும், புத்ர காமர்கள் அநேக புத்ரர்களையும், வித்யையை விரும்புபவர் வித்யையையும், யோகத்தை விரும்புபவர் யோகத்தையும் பெறுவர்; ராஜ்யத்தை விரும்பின் ராஜ்யம் கிடைக்கும்; கிராமத்தை விரும்பின் கிராமத்தைப் பெறுவான்; கர்ப்பிணீ புத்ரனைப் பெறுவாள்; கன்யகை ஸத்பதியை அடைவாள்; எந்த மனிதன் எந்த ஆசையைக்கொண்டு ஸ்ரீ தேவியின் சரிதத்தைக் கேட்கிருனே அவன் விரும்பிய

எல்லாவற்றையும் அதிவிரைவில் பெறுவதோடு தேவர்களாலும் கொண்டாடப் படுபவனுயும் ஆகிருன். யுத்தத்திற்குச்செல்லும் அரசன் தேவியின் சரிதத்தை ஶ்ரவணஞ் செய்து செல்வானேயாகில் அவன் பயங்கரமான பகைவர்களேயும் வென்று வெற்றிமாலே சூட்டிக்கொள்வான். அன்றியும், இதைக் கேட்பவர் ஸகல நோய்களிலிருந்தும் விடுபட்டுப் புத்ர பௌத்ரர்களுடன் நற்கீர்த்திபெற்று வாழ்வார்கள். ஸ்ரீலலிதா தேவியின் சரித்திரத்தை ஒரு குறிப்பிட்ட பயனே உத்தேசித்து ஒரு முறை படித்தாலும் படித்தவன் அதைப் பெறுவதுடன் வாத பித்தாதி மாறுபாடுகளால் தோன்றும் நோயினுல் பீடிக்கப்படமாட்டான். அகால மரணம் அவனே அணுகாது; அரவந் தீண்டாது; ஏனைய விஷங்களும் அவனுடலில் ஏருது; அவன் மூடனுக ஆகமாட்டான்; ஊமையுமாகான்; ஓர் ஆபத்திற்கும் ஆளாகான்; உத்பாத பயமும் உண்டாகாது; ஆபிசாரப் பிரயோகங்களும் அவனருகே வாரா.

ப்ரதி தினம் இதைப் படிப்பவன் ஸர்வ காமனைகளும் ஸம்பூர்ணமாக அடையப்பெறுவான். த்ருடமான பக்தியுடன் யாதொரு தடங்கலுமில்லாமல் நித்யம் இதைப் பாராயணஞ் செய்யவேண்டும். கங்கை முதலிய புண்ய தீர்த்தாடனத்தால் என்ன புண்யம் வருமோ, அதைவிடக் கோடிமடங்கு புண்யம் இந்தக் கதாஶ்ரவணத்தால் உண்டாகும். பத்து ராஜஸூய யாகங்களுக்கும், நூறு ஸோமயாகங்களுக்கும் எவ்வளவு புண்யமுண்டோ, அதைப்போல் கோடி கோடி மடங்கு அதிகமான பலன் இந்தச் சரித்ர ஶ்ரவணத்தால் உண்டாகும். இதைக் கேட்பவர் எந்தப் பூதங்களாலும், எந்த மனிதர்களாலும் கொல்லத்தக்கவராகார். ஒருவித நோயுமில்லாமல் பூர்ணமாக நூருண்டு ஜீவித்திருப்பார்.

பசுவைக் கொன்றவன், நன்றி கெட்டவன், ஶிஶுவைக் கொன்றவன், குருபத்னீ கமநஞ் செய்தவன்,

சரண் புகுந்தவரைக் கொன்றவன், நண்பனை த்ரோஹஞ் செய்தவன், துஷ்டன், பாப ஒழுக்கமுள்ளவன், தாய் தந்தைகளைக் கொன்றவன் ஆகிய பாபிகள்கூடச் சிரத்தையுடன் இந்தச் சரித்ரத்தை ஶ்ரவணஞ் செய்தால் ஸர்வ பாதகங்களிலிருந்தும் விடுபடுவார்கள். புண்ய தீர்த்தங்களிலும், பூஜாகாலத்திலும் விஷுவமெனும் புண்ணிய காலத்திலும் அயநங்களிலும், பஞ்சபர்வாக்களிலும்,ஜன்ம நக்ஷத்திரத்திலும், புண்யமான ஆலயங்களிலும், ராஜ்யத்திற்கு ஆபத்துண்டாகும் காலத்திலும், நோய் பீடிக்கும் போதும், மாரியாலும், திருடராலும் பயம் நேர்ந்த போதும் யார் இதைப் படிக்கிறார்களோ அவர்கள் அந்தந்தத் துன்பங்களினின்றும் நீங்கி ஸகல ஸித்திகளையும் பெருவார்கள். கும்ப ஸம்பவரே! எங்கு இச்சரிதம் புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறதோ அந்தத் தேசத்தில் நோயும் துர்ப்பிக்ஷமுந் தோன்ரு. முநிவரே! ஶாஸ்த்ரத்தில் கூறிய நெறிப்படி ஸமஸ்தமான பூஜா விதியையும் வேரோர் கண்டத்தில் கூறுகிறேன்; கேளும்! இந்த முப்பத்திரண்டு அத்பாயங்கள் கொண்ட ஸ்ரீ லலிதோபாக்யாநமானது திவ்ய தர்ஶனமான அம்ருதமென்றும், தேவீ மஹாத்ம்யமென்றுங் கூறப்படுவதாகும். ஆதலால் ப்ரஹ்மாண்ட புராணத்தில் உத்தர கண்டத்திற் கூறப்பட்ட இந்த முப்பத்திரண்டு அத்யாயங்கொண்ட ஶாஸ்த்ரமானது தேவீ உத்ஸவ காலத்தில் அவச்யம் பாராயணஞ் செய்யத்தக்கது. மூவுலகிலுமுள்ள ஸமஸ்த தேவிகளும் லலிதா வடிவமாகவே இருப்பதால் அந்த அந்தத் தேவி பூஜைகளில் இந்தச் சாஸ்த்ரத்தைப் பாராயணஞ் செய்யாவிடில் அவர்கள் மிக்க கோபங்கொள்வார்கள். விசேஷமாகத் துர்க்கையின் மஹோத்ஸவ காலத்தில் தேவியின் ஸந்தோஷத்தின் பொருட்டு முப்பத்திரண்டு அத்யாயத்தைப் பாராயணஞ் செய்வதற்கு ஒரு ப்ராம்ஹணனை நியமிக்கவேண்டும்; அல்லது த்ருட சித்தமுள்ளவனுய்த் தானே ஸ்ரீ துர்க்கையின் ஸன்னிதியில்

இதை ஒரு முறையோ, இரு முறையோ, மும்முறையோ படிக்க வேண்டும். லலிதோபாக்யான படனமானது ஸர்வ ஸித்தியையுமளிக்கவல்லதாகும் முவ்வுலகிலுள்ள ஸகலப்ராணிகளேயும் பலியாக அளித்தால் துர்க்கை எவ்வளவு ஸந்தோஷமடைவாளோ அவ்வளவு ஸந்தோஷம் இந்த லலிதோபாக்யானத்தைப் படிப்பதால் தேவிக்கு உண்டாகிறது. அஸுத்தனுகவோ, ஶுத்தனுகவோ, உட்கார்ந்தோ, நின்ருே, எந்த நிலேயிலோ இம் முப்பத்திரண்டத்யாயத்தையும் படிப்பவன் ஸர்வ பாபங்களிலிருந்தும் விடுபடுவான். அரசன் ஒவ்வோராண்டிலும் துர்க்காதேவியின் உத்ஸவத்தில் முப்பத்திரண்டு அத்யாயங்கொண்ட இவ்வுத்தம தர்சனத்தைப் பாராயணஞ் செய்விக்க வேண்டும். இது ஸர்வ ஸித்திகளுக்கும் காரணமானது. இதைவிட உயர்ந்தது வேறில்லே. இந்த முப்பத்திரண்டு அத்யாயத்தை ஒரு முறை பாராயணம் செய்வதனுலேயே சண்டிகா தேவியினது சரித்ரத்தைக் கோடி முறை பாராயணம் செய்ததாலுண்டாகும் பலனுக்குச் சமமான பலனுண்டாகும். குற்றமற்ற குணம் வாய்ந்தவர், ஸாதுக்களின் ஸம்ப்ரதாயமானதும், ஸர்வ துக்கங்களேயும் அகற்றுவதுமான இந்தச் சரிதத்தைப் படித்தால் மெய்ஞ்ஞான தீபத்தினுல் ப்ரகாஶிக்கப்பட்ட ஸ்ரீ லலிதா மஹேஶ்வரியை அடைந்து, மனதில் ஸதா பேராநந்தத்தைப் பெறுவார்கள்.

ப்ரஹ்மாண்ட புராணத்தில் உத்தரகண்டத்தில்
ஸ்ரீ ஹயக்ரீவ அகஸ்த்ய ஸம்வாதத்தில்
ஸ்ரீ லலிதோபாக்யானம்
முப்பத்து நான்காம் அத்யாயம் முற்றிற்று.

---

தாயே! அக்ஷரங்கள் குறைவதாலும், பதங்கள் குறைவதாலும், மாத்ரைகள் நழுவுவதாலும்

என்ன அபசாரம் தோன்றிற்ளே அதை க்ஷமித்துக் கொள்வாயாக! உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீ லலிதோபாக்யானம்.

அதிக பாடம் ஸ்ரீ காஞ்சீபுர மஹிமை.

தசரதன் காமாக்ஷியை உபாஸித்து ஸ்ரீ ராமனைப் பெற்ற கதை 24 அத்யாயமானபின்.

## ஸ்ரீ சக்ரோபாஸந க்ரமம்.

அகஸ்த்யர் ; — தேவியினது யந்த்ரம் எத்தகையது? மந்த்ரம் எப்படிப்பட்டது? உபதேசஞ்செய்பவர் எப்படியிருத்தல்வேண்டும்? சிஷ்யன் எப்படியிருக்கவேண்டும்? இஃதெல்லாவற்றையும் க்ருபையுடன் நீர் அருள் புரிய வேண்டுகின்றேன்.

ஹயக்ரீவர்: — தேவியினது யந்த்ரம் ஸ்ரீ சக்ரமே! அதுதான் த்ரிபுராம்பிகை! அவளே ஸ்ரீ மஹாலக்ஷ்மீ, அவள் முன்னே ஜ்யோதிர்மயமான தனது ஸ்வரூபத்தைப் பார்த்தாள். அதே ஸ்ரீ சக்ரமாம். ஆதலால் ஸாக்ஷாத் ஆதிலக்ஷ்மிதான் ஸ்ரீ சக்ரமென்பதன் தத்வமாகும்; அதை அர்ச்சித்துதான் விஷ்ணு மோஹிநீ ரூபமெடுத்தார்; ஈஶ்வரன் ஸர்வ வித்யேஶ்வரராக ஆனார்; ப்ரஹ்மாவும் படைக்கும் ஶக்தியைப்பெற்றார். மன்மதன் முநிவர்களது மனத்தையும் கலக்கும் ஶக்தியைப் பெற்றான்.

ஸ்ரீ தேவியின் எதிரில் ஸுவர்ணம், வெள்ளி முதலிய உலோகங்களால் ஸ்ரீ சக்ரம் செய்துவைத்து அதை ஸ்ரீ ஷோடசாக்ஷரீ வித்யையால் கந்த புஷ்பங்களாலும், பவித்ரமான துளஸீ தளங்களாலும் தினந்தோறும் தேவீ த்யானத்துடன் ஆயிரம்முறை அர்ச்சிக்கவேண்டும். மது ஆஜ்ய சர்க்கரைப் பாயஸத்தாலும், வடைகளாலும் *மூன்று மண்டலம் மஹா லக்ஷ்மியை அர்ச்சிப்பவர்க்கு

* ஒருமண்டலமென்பது நாற்பத்தெட்டு நாட்களாம்.

தேவீ ஸாந்நித்யமாவதைக் காணலாம். முற்கூறிய வண்ணம் வெண்மை நிறம் வாய்ந்த புஷ்பங்களால் அர்ச்சிப்பவரது நாவில் ஸரஸ்வதி தாண்டவமாடுவாள். சிவப்பும் வெண்மையுங் கலந்த பாடல நிறமான புஷ்பங்களால் விதிப்படி அர்ச்சிப்பவருக்குச் சக்ரவர்த்தியும் தாஸனைப்போல் வஶ்யமாவான்; மஞ்சள் வர்ணமான மலர்களால் விதிப்படி பூஜிப்போரது மார்பிலே லக்ஷ்மி வஸிப்பாள். துர்க்கந்தமுள்ளதும், வாஸனையேயில்லாததுமான புஷ்பங்கள் நல்ல நிறமுள்ளதாயிருந்தாலும் அப்புஷ்பங்களால் தேவியைப் பூஜித்தல் கூடாது. நல்ல வாஸனையுள்ள புஷ்பங்களாலும், கந்தங்களாலும் தான் தேவியை அர்ச்சிக்கவேண்டும். காமாக்ஷியே மஹாலக்ஷ்மி எனப்படுவாள்! சக்ரமென்பது ஸ்ரீ சக்ரமே! ஸ்ரீ வித்யையே உயர்ந்த வித்யை! நாயகன் ஸ்ரீ குருநாதனே! தேவியினது மந்த்ரராஜந்தான் ஸ்ரீ வித்யையென்பது! காமராஜாந்தமான மந்த்ரத்தின் முடிவில் ஸ்ரீபீஜத்துடன் கூடியது ஷோடசாக்ஷரீ என்றும், ஸ்ரீவித்யை என்றும் கூறப்படும். அதிரஹஸ்யமாக மறைத்துவைத்து ரக்ஷிக்கத்தக்கது இந்த விஷயம்; மும்மூர்த்திகளுக்கும் ஶக்தியாயிருப்பது இந்த வித்யைதான். எல்லா மந்த்ரங்களுக்கும் ப்ராணரூபமாய் இருப்பதும் இதுதான். குருசிஷ்ய பரம்பராக்ரமத்தில் உபதேசிக்கப்பெற்ற இந்த வித்யை ஸம்ஸார பந்தத்தை ஒழித்துவிடும்; ஸம்ஸார தாபத்தை நீக்கும்; கிழத்தன்மையையும், மரணத்தையும் போக்கும். அதைப் பூஜிப்பதால் துக்கம், தௌர்ப்பாக்யம், நோய், ஏழ்மை முதலியன பறந்தோடும். அதைத் துதிப்பதால் விக்னங்கள் அருகே அணுகவா. த்யானம் செய்தால் ஸர்வ ஸித்திகளும் வந்து அடையும். ஒருவன் முத்ரைகளின் விசேஷ தத்வங்களை உணர்ந்து, தீக்ஷையினால் தனது பாபத்தைப் போக்கிக் கொண்டு தேவியை அர்ச்சித்தால் அவன் விரும்பிய எல்லாம் ஸித்திக்கும்.

வெண்மை நிறமுள்ள வஸ்த்ரந் தரித்தவளாகவும், வெண்மை நிறம் வாய்ந்த இடத்தில் வஸிப்பவளாகவும் செய்து, தேவியை ப்ரம்ஹசர்ய நியமத்துடன் கூடிய வனய், வெண்மையான புஷ்பங்களால் பூஜிக்கவேண்டும். அன்றியும், பாலன்னம், தயிரன்னம் முதலிய வெண்மை யான நைவேத்யங்களாலோ அல்லது மனஸ் ஸங்கல் பத்தினலோ தேவியைப் பூஜிக்கவேண்டும். ஸ்ரீ பாலா மந்த்ரத்திலுள்ள மூன்று பீஜாக்ஷரங்களோடு வரிசை யாய் மூன்று கண்டங்களையும் சேர்த்து ஸ்ரீ ஷோடசாக்ஷ ரியை ஏகாக்ரசித்தனய், ஸூசியாக அ முதல் க்ஷ வரையு முள்ள மாத்ருகாக்ஷரங்களால் * அநுலோம ப்ரதிலோம முறையாக ஜபம் செய்யவேண்டும். பகவானது எதிரில் தீபரூபமாகத் தேவியை த்யானம் செய்து கொண்டு. மனதினலாவது மெதுவாகவாவது கொஞ்சம் உரக்கத் தெளிவாகவாவது ஜபிக்க வேண்டும். ஸ்ரீ தேவீந்யாஸத் துடன் கூடியவனய்த் தன்னை ஸ்ரீ தேவியாகவே பாவித்து, அதை ஒரு லக்ஷம் ஜபம் செய்தால் ஸகலமான மஹா பாபங்களிலிருந்தும் விடுபடுவான். தேவர்ஷே! இரண்டு லக்ஷம் ஜபம் செய்தால் ஏழு ஜன்மங்களில் செய்த பாபங்களைத் தேவி நாசஞ்செய்கிருள். மூன்று லக்ஷம் ஜபத்தினல் ஆயிரம்பிறவிகளில் செய்த பாபங்களகலும்; இதில் ஸம்சயமில்லை. இங்ஙனம் முறையே பதினறு லக்ஷ ஜபத்தினல் தேவியினது ஸாந்நித்யத்தை அடை வான். ப்ரதிதினம் மூன்று காலம் பூஜைசெய்தல் வேண்டும் ஜபம், தர்ப்பணம், ஹோமம், ப்ராம்ஹண போஜனம் இவைகளைச் செய்வது புரஶ்சரணமெனப் படும். ஹோமம் செய்யும்போதும், தர்ப்பணம் செய் யும் போதும், மந்த்ர முடிவில் ஸ்வாஹா என்றும், ந்யாஸம், பூஜை இவைகளை அனுஷ்டிக்கும்போது நம:

---

* அ முதல் க்ஷ வரை எண்ணுவது அநுலோமம். க்ஷ முதல் அ வரை தலைகீழாய் எண்ணுவது ப்ரதிலோமம்.

என்றும் கூறவேண்டும். ஜபம் செய்யும்போது மந்த்ரம் உள்ளபடி ஜபிக்க வேண்டும். ஜபம் செய்ததில் பத்தில் ஒரு பங்கு ஹோமமும், அதில் பத்தில் ஒருபங்கு தர்ப்பணமும், அதில் பத்தில் ஒரு பங்கு ப்ராம்ஹண போஜனமும் செய்யவேண்டும்.

தேசகாலங்கள் அநுகூலமில்லாத இடத்தில் ஹோமம், தர்ப்பணம், ப்ராம்ஹண போஜனம் ஆகிய இவைகளுக்கு எவ்வளவு கணக்குச் சொல்லப்பட்டதோ அதற்கு இரண்டு மடங்கு ஜபம் செய்து, புரஸ்சர்யையைப் பூர்த்திசெய்யலாம். இங்ஙனம் செய்த பிறகு அந்தந்தக் காமனைகளையடைய மூன்று லக்ஷம் ஜபம் செய்ய வேண்டும். வ்ரதத்துடன் மனோவிகாரமில்லாமல் மூன்று வேளையுந் தேவியைப் பூஜித்து, வஸ்யாதி கார்யங்களில் ஈடுபட்டால் ஸித்தியுமுண்டாகும். சக்ரமத்தியிலிருந்து ஸாதகன் தேவியையும், தன்னையும் சிறப்பாக த்யானம் செய்வானேயாகில் அவன் ஸர்வ ஸௌபாக்யமும், அழகும் உள்ளவனுவான். ஸர்வ ஜனங்களுக்கும் ப்ரியனுகி எல்லோரையும் வசமாக்கிக் கொள்வான். இதில் சற்றும் ஐயமில்லை. கோரோசனை, குங்குமப்பூ இவ்விரண்டையும் சேர்த்து அதற்கு ஸம எடை சந்தனம் கலந்து நூற்றெட்டுமுறை ஸ்ரீ மந்த்ரத்தை ஜபித்து நெற்றியில் திலகமணிவானுனல், அவன் எவனைப்பார்க்கிருனே, எவனுடன் பேசுகிருனே, எவனைத் தொடுகின்ருனே, எவனை நினைக்கிருனே அவன் தனது பொருளுடன் அவ்வுபாஸகனுக்குத் தாஸனைப்போல் வஸ்யமாகிருன். புஷ்பம், பழம், கந்தம், பாநம், வஸ்த்ரம் இவைகளை நூற்றெட்டுமுறை ஸ்ரீமந்த்ரஜபம்செய்துயாருக்கு அனுப்புகிருனே அவன் வஸ்யமாவான். பூமியில் ஒரு ஏகாந்தமான இடத்தில். நல்ல ரூபமுள்ளதும், ஸகல ஸ்ருங்கார வேஷமும், ஆபரணங்களும் பூண்டதும், அழகிய நெற்றி,

கழுத்து, ஹ்ருதயம், நாபி, முழங்கால் முதலியவைகளுள் ளதுமான ஒரு பிம்பத்தைக் கோரோசனையால் வரைந்து, பெயரையும் அதில் எழுதி, மதந பீஜாக்ஷரத்தை அந்த அந்த ஸந்திகளில் அமைத்து, அவள் இருக்கும் திக்கை நோக்கி உட்கார்ந்து தேவீ ரூபமாகத் தன்னைப்பாவித்துக் கொண்டு க்ஷோபிணீ முத்ரையுடன் நூற்றெட்டுமுறை மஹா மந்த்ரத்தை ஜபிக்கவேண்டும். சந்த்ர ஸூர்யரைப் போல் மிக்க ஒளியுள்ளதான ஓர் அக்நி க்ருஹத்தில் அந்தப் பெண் மன்மத பாணத்தினுல் பீடிக்கப்பட்ட ஸர்வாவயமுள்ளவளாகவும், சோர்ந்த கடைக்கண் பார்வையுள்ளவளாகவும், ஶக்தி சக்ரத்தின் காந்தியால் சூழப்பட்டவளாகவும், கற்பை மறந்து கண்ணுலிழுக்கப் பட்டுத் தைர்யத்தை இழந்து, மந்த்ரம், ஔஷதம், மஹா முத்ரை இவைகளால் தன் கட்டுப்பாட்டை விட்டு, புதிய அன்பால் உள்ளம் நடுங்க மானஸிக ஸங்கல்பமெனும் காற்ருல் விலக்கப்பட்ட வஸ்த்ரமுள்ளவளாகவும், மோஹ மடைந்தவளாகவும், கலங்கிய சித்தமுள்ளவளாகவும், சித்திரத்தில் எழுதப்பட்டவள்போலும், ஸம்ஞை யில்லாதவளாகவும், அழகிய மந்த்ரமென்னும் காற்ருல் உயரே தூக்கப்பட்ட மூங்கில் இலைபோல் ஆகாஶத்தில் இருப்பவளாகவும், நூறுயோஜனை தூரம்வரை அலைந்து திரிபவளாகவும் த்யானிக்கவேண்டும். அன்றியும், சக்ர மத்தியில் மலைகளோடும், காடுகளோடும் கூடிய பூமியை நான்கு ஸமுத்ரம்வரை ஜ்வலிப்பதாக த்யானம் செய்ய வேண்டும். இங்ஙனம், இந்த த்யானத்தை ஆறுமாதம் அப்யாஸம் செய்தால் மன்மதனுக்குச் சமமான பேரழகுள்ளவனுவான். இத்தகைய ஸாதகன் பார்ப்ப தற்கு முன்பே உலகமிவனுக்கு வஶ்யமாகும். இவனைப் பார்த்தவுடன் யுவதியின் மனங்கலங்கும்; விஷம் பறந் தோடும். ஒருவனை ப்ரஹஸ்பதிபோலாக்க இவனுக்கு ஶக்தியுண்டு. சாதுர்த்திகம் முதலிய அஸாத்திய ஜ்வரங் களும் இவன் எதிரில் நிற்கா. மஞ்சள் வர்ணத்தால்

எழுதிய சக்ரத்தை ரஹஸ்யமாக வைத்திருக்கவேண்டும். வாதிகளது வாக்கு இவனைப் பார்த்தவுடன் ஸ்தம்பித்து விடும். மஹாநீலி ரஸத்தால் (அவுரிச் சாயத்தால்) சத்ருவின் பெயருடன் யந்த்ரத்தை எழுதி, தெற்கு முக மாக உட்கார்ந்து அதை அக்நியில் போட்டுவிட்டால் சத்ரு விரைவில் இறப்பான். எருமைச்சாணி, குதிரைலத்தை இவைகளைக் கோ மூத்திரத்தில் கலந்து சத்ருவின் பெயரை எழுதிக் கழுநீரில் வைத்திருந்தால் சத்ருக்களுக் குள் த்வேஷமுண்டாகும். கோரோசனையால் காக்கை இறகைக்கொண்டு இடையிலே பெயரை எழுதி, ஆகாயத் தில் அதைத் தொங்கவிடின் அது உச்சாடனமாகும். பால், அரக்கு, கோரோசனை, மஹாநீலி ஆகிய இவை களால் எழுதிய சக்ரத்தைத் தரித்திருந்தால் நான்கு வர்ணத்தாரும் வமமாவார்கள். இங்ஙனம் எழுதி ஜலத் தின் நடுவில் ஸ்தாபித்தால், அந்த ஜலத்தில் ஸ்நாநம் செய்வதாலும், அதை அருந்துவதாலும் ஸௌபாக்ய முண்டாகும். சக்ரத்தினிடையே ஒரு நகரத்தையோ, அழகிய ஸ்த்ரீயையோ எழுதி, அது ஜ்வலிப்பதுபோல் த்யானம் செய்தால் ஏழு நாட்களில் அது கலங்கி நமது ஸ்வாதீனமாகும். மஞ்சள் வர்ணமாகச் சக்ரத்தை எழுதி, கிழக்குமுகமாக நின்று அங்ஙனம் ஜபித்தால் ஸர்வவாதி களையும் ஜயிக்கலாம். ஸிந்தூரவர்ணத்தால் எழுதி, வடக்குமுகமாக ஜபித்தால் உலகம் அவனுக்கு வமமா கும். மலை தாதுக்களால் எழுதி மேற்கு முகமாகப் பூஜித் தால் பெண்கள் வம்யமாவார்கள், மலையில் ஏகாந்த மாய் பூஜித்தால் கிழத்தன்மையையும், மரணத்தையும் ஜயிக்கலாம். இவைகள் அதி ரஹஸ்யமானவை. ஜாக்ரதையாக ரக்ஷிக்கத்தக்கவை. மறைப்பதால் ஸித்தி யும், ப்ரகாமப்படுத்துவதால் துன்பமும் உண்டாகும். புரம் சர்யை செய்யாமல் காம்யமான கார்யங்களைச் செய்தால்

தேவ சாபத்தை அடைவான்; கார்யமும் ஸித்தியாகாது. புரஸ்சர்யையில்லாமல் செய்த ப்ரயோகத்திலுண்டாகும் தோஷம் நிவர்த்தியாவதற்காக மறுபடியும் ஒருலக்ஷம் ஜபம் செய்து விதிப்படி பூஜை செய்யவேண்டும். இங்ஙனம் செய்யின் அவன் ஶுத்தனய் மறுபடியும் ப்ரயோகம் செய்வதற்கு அதிகாரியாகின்றான் காமனையின்றிப் பக்தியுடன் ஸதா தேவியையே நினைத்துப் பூஜித்துத் தன் ஶக்திக்கேற்றவாறு ஜபம் செய்வோருக்குத் தேவியே ஐஹிகமாய் இவ்வுலகிற்கு வேண்டிய எல்லாக் கார்யங்களையும் முடித்துவைத்து மோக்ஷத்தையுமளிப்பாள். அன்றியும் ஸதா அவனிடத்தில் நெருங்கியிருந்து அவனுக்கெல்லாவற்றையும் கூறுவாள். கன்றினிட முள்ள அன்பால் தாய்ப்பசு அதோடு செல்வது போல் சரணாகதனான பக்தனைப் பின்தொடர்ந்து தேவி செல்கிறாள்.

இஹலோக, பரலோக கார்யங்கள் இரண்டையும் தேவியினிடமே ஒப்பித்துவிட்டு எப்போதும் அவளிடமே மனதைச் செலுத்தி எல்லோருக்கும் அநுகூலனாய்ப் பகைமையை விட்டு, வேறொருவரையும் சரணமடையாமல் தன்னை ரக்ஷிக்கும்படி கௌரியையே வேண்டுபவனும், அவளையே நம்புபவனும், அவள் ஸேவையையே பரம ப்ரயோஜனமாய் நினைப்பவனும், தேவீ பூஜையிலேயே ஈடுபடுபவனாயுமுள்ளவன் சரணாகதனாவான். உலகம் தன்னை நிந்திக்குமானால் அது தன் உடலைச் சார்ந்ததேயன்றித் தன் ஸ்வரூபத்திற்கல்ல வென்னும் நிச்சயத்தோடிருப்பவன் ப்ரபன்னனாவான்.

ஶரணாகதி யென்பது அனுகூலமானதையே எண்ணுவது, ப்ரதிகூலமானதை விடுவது, பரதேவதை ரக்ஷிப்பாளென நம்புவது, நீயே ரக்ஷியென ப்ரார்த்திப்பது, தன்னை அர்ப்பணம் செய்வது, தனது ஏழ்மையைக் காட்டுவது என ஆறுவகைப்படும். இதில் ஆத்மாவை ஸமர்ப்பணம்

செய்வதே முக்யமானது. அதற்கு மற்ற ஐந்தும் அங்கங்களாம். புக்தி முக்திகளுக்கு இதற்கு ஈடான வேறு ஸாதனமில்லை. கர்வமில்லாமை, டம்பமில்லாமை, ஹிம்ஸைசெய்யாமை, பொறுமை, கபடமின்மை, ஆசார்யரை உபாஸித்தல், ஸுத்தமாயிருத்தல், த்ருட சித்தனுயிருத்தல், மனதையடக்குதல், ஆசையின்மை, அஹங்காரமில்லாமை, பிறவி, மரணம், கிழத்தன்மை, நோய், துக்கம் இவைகளிலுள்ள தோஷத்தை நன்கு அறிதல், பற்றில்லாமை, மனை, மனைவி மக்களிடம் ஸங்கமில்லாமை, ஸுக துக்கம் நேர்ந்தபோது ஸமமாயிருத்தல் தேவியின்பால் வேறிடஞ்செல்லாத ஏக பக்தியுடனிருத்தல், ஏகாந்தமான இடத்திலிருந்து ஸேவித்தல், ஜனக்கூட்டத்தில் ஆசையின்மை, ஸதா வேதாந்தவிசாரத்தில் ஈடுபடுதல், தத்வக்ஞானத்தை உணர்தல் ஆகிய இந்த ஞானஸாதனங்களை ஸதா அப்யஸிக்கவேண்டும். ஸ்ரீ தேவியினுடைய கர்மாவில் ஈடுபட்டு, அதையே சிறந்ததாக எண்ணி, தீவ்ர பக்தியுடையவனாய் ஸங்கத்தை விட்டு, ஸர்வ ப்ராணிகளிடமும் சத்ருபாவத்தை விட்டிருப்பவன் சிறந்த ஶ்ரீயை அடைவான். ஆம் நாய ஆசார்யர் * என்னைப்போல் அறிவுள்ளவராகவும், க்யாதியுள்ளவராகவும் இருத்தல் வேண்டும். சிஷ்யனும் † உன்னைப் போலிருக்கவேண்டுமென்று வித்வான்கள் கூறுகிறார்கள்.

---

## முத்ராலக்ஷண ப்ரகரணம்.

*அகஸ்த்யர்* :— ஹே அஶ்வாநந! எந்த முத்ரைகளைக் காண்பித்தால் ஸ்ரீதேவியானவள் ஸந்தோஷமடைந்து பக்தர்களை அநுக்ரஹிக்கின்றாளோ அந்த முத்ரைகளின் லக்ஷணங்களைக் கூறுவீராக.

---

* ஹயக்ரீவர். † அகஸ்த்யர்.

ஹயக்ரீவர் :— ஹே தபோதந! பரஸ்பரம் அபிமுகமான இருகைகளின் விரல்களையும் கோர்த்துக்கொண்டு இரு கட்டை விரல்களையும் பார்ஶ்வ பாகத்தில் ஒன்றுக்கொன்று ஸம்பந்த முள்ளவைகளாயும், ஸமமாகவும் வைத்துக்கொள்ளவும். இரண்டு தர்ஜநிகளையும் நன்கு வளைத்து வலது தர்ஜநியால் இடது அநாமிகையையும், இடது தர்ஜநியால் வலது அநாமிகையையும் நன்ருய் வளைத்துப் பிடித்துக்கொள்ளவும். இரு சுண்டுவிரல்களையும் அவ்வாறே இரண்டு நடுவிரல்களையும் ஒன்றுக்கொன்று சேர்த்து நிமிர்த்தி வைத்துக்கொள்ளவும். இம் மஹா முத்ரையானது **ஆவாஹநீ** அல்லது த்ரிகண்டா எனப்பெயர் பெறும். 1.

ஸம்க்ஷோபிணீ முத்ரையின் லக்ஷணத்தைக் கூறுகிறேன் கேள்! ஒவ்வொரு கையினுடைய சுண்டு விரல், கட்டைவிரல் இவைகளை அபிமுகமாகச் சேர்த்து, சேர்க்கப்பட்ட அவ்விருவிரல்களின் மத்ய பாகத்தில் நடுவிரல்களைச் சேர்க்கவும். அவ்வாறு சேர்க்கப்பட்ட மூன்று விரல்களின் (நகங்களின்) நுனிகளையும் பரஸ்பரம் சேர்த்துக்கொள்ளவும். பிறகு, வலது அநாமிகையை இடது நடுவிரலின் மத்யபர்வாவிலும், அவ்வாறே இடது அநாமிகையை வலது நடு விரலின் மத்யபர்வாவிலும் சேர்க்கவும். இரு தர்ஜநிகளையும் தண்டம்போல் நமக்கு எதிர்முகமாக நீட்டிப் பிடிக்கவும். 2.

முற்கூறிய (ஸர்வ) ஸம்க்ஷோபிணீ முத்ரையில் தர்ஜநியுடன் நடுவிரலையும் சேர்த்து நீட்டினுல் அதுவே வித்ராவிணீ முத்ரையாகும். 3.

மேற்சொல்லப்பட்ட (ஸர்வ) வித்ராவிணீ முத்ரையில், நேராக நீட்டப்பட்ட தர்ஜநீ, நடுவிரல் இவைகளை அங்குஶாகாரமாகச் சற்று வளைத்தாலே (ஸர்வ) ஆகர்ஷிணீ என்னும் முத்ரையாகும். 4.

பராங்முகமான (அ:தாவது இரு புறங்கைகளையும் ஒன்றுக்கொன்று அபிமுகமாயிருக்கின்ற) இரு கைகளின் விரல்களையும் கோர்த்துக்கொண்டு கைகளை இறுக மூடிக்கொள்ளவும். (தர்ஜநி முதலிய விரல்கள் கையினுள் அங்குஶாகாரமாக வளைந்து பரஸ்பர ஸம்பந்தத்துடன் கூடியதாயிருக்கும்) பார்ஶ்வ ஸம்பந்தமுடையதாய் இரு கட்டை விரல்களையும் சேர்த்து மற்ற விரல்களைக் கீழ்நோக்கி அமுக்கும்படி வைத்துக்கொள்ளவும். இது ஸர்வவஶங்கரீ எனப்படும். 5.

இரு கைகளையும் பார்ஶ்வ ஸம்பந்தமுடையவைகளாயும், நமக்கு அபிமுகமாகவும் வைத்துக்கொள்ளவும். இரண்டு சுண்டு விரல்களையும் குறுக்காக ஒன்றின்மேலொன்றாக வைத்து பவித்ர விரல்களுக்குமேல் சுண்டு விரல்களிருக்கும்படியாக, வலது சுண்டுவிரலை இடது நடுவிரலாலும் அவ்வாறே இடது சுண்டுவிரலை வலது நடுவிரலாலும் அழுத்திப்பிடித்துக்கொள்ளவும். நடுவிரல்களின் நகங்களை இரு கட்டைவிரல்களாலும் அழுத்திக்கொள்ளவும். ஸரளமாயிருக்கிற இரு அநாமிகைகளையும் அவைகளுக்குப் பக்கங்களிலுள்ள இரு தர்ஜநிகளையும் தண்டம் போல் நீட்டிப்பிடிக்கவும். இது ஸர்வோந்மாதிநீ. 6.

மேற்கூறிய ஸர்வோந்மாதிநீ முத்ரையில் தண்டம் போல் பிடிக்கப்பட்ட இரு அநாமிகைகளையும் அவ்வாறே தர்ஜநிகளையும் அங்குஶாகாரமாகச் சற்று வளைக்கவும். இது ஸர்வ கார்யங்களையும் ஸித்திபெறச் செய்யக்கூடிய ஸர்வமஹாங்குஶா. 7

வலது பாகுவின் மத்தியில் இடது பாகுவை வைத்துப் பரிவர்த்தன க்ரமமாக (அ:தாவது இடது கையை வலது கையின் அடிப்பக்கமாகக் கொண்டுவந்து) வலது கையின் பார்ஶ்வ பாகத்தை இடதுகையின் பார்ஶ்வபாக

ஸம்பந்தமுடையதாய்ச் செய்யவும். பிறகு வலது சுண்டு விரலையும் அநாமிகையையும் இடது நடுவிரலுக்கு அடிவழியாகச் செலுத்தி இடது தர்ஜநியால் நன்கு பிடித்துக் கொள்ளவும். அவ்வாறே இடது சுண்டுவிரலையும், அநாமிகையையும் வலது தர்ஜநியால் பிடிக்கவும். இரு நடுவிரல்களையும் நிமிர்த்தி, பார்ஶ்வ ஸம்பந்தமுடையவைகளாயும், அவ்வாறே இரு கட்டைவிரல்களையும் செய்யவும். எல்லாவற்றிலும் உத்தமமானதாயும், யோகிநிகளின் அநுக்ரஹத்திற்குக் காரணபூதமாயுமிருக்கின்ற இம் முத்ரை ஸர்வகேஶரீ. 8.

ஸர்வோந்மாதிநீ முத்ரையில் விஸ்தரித்தபடி முதலில் இரண்டு சுண்டுவிரல்களையும் இரண்டு நடுவிரல்களால் பிடித்துக்கொண்டு ஒவ்வொரு கையின் கட்டைவிரலையும் அதன் அதன் தர்ஜநியோடு அர்த்தசந்த்ராகாரமாய்ச் சேர்த்து (அஃதாவது இரு விரல்களின் நுனிகளையும் மத்தியில் அர்த்தசந்த்ரரூப இடைவெளியுள்ளதாய்ச் சேர்த்து) இரு கைகளையும் இறுக மூடவும். வெளியில் நீட்டிக் கொண்டிருக்கும் இரு அநாமிகைகளையும் பரஸ்பரம் அபிமுகமாகச் சேர்த்து நமக்கு எதிர்ப் பக்கமாக நீட்டிப் பிடிக்கவும். ஸர்வஸித்திகளையும் அருளுகின்ற இம் முத்ரைக்கு ஸர்வபீஜம் எனப்பெயர். 9.

இரு கைகளையும் பார்ஶ்வ ஸ்ப்ருஷ்டமாயும், ஸ்வாபிமுகமாகவும் வைத்துக்கொண்டு, அங்குஶாகாரமாக வளைக்கப்பட்ட தர்ஜநிகளின் நுனிகளை நேராக நிமிர்ந்திருக்கின்ற மத்யமையின்மேல் வைத்து, இவ் விரல்களின் மத்தியில் தோன்றுகின்ற இடைவெளியில், இடது அநாமிகையை வலது சுண்டுவிரலுக்கு அடிவழியாகச் சொருகவும். அவ்வாறே வலது அநாமிகையும் சொருகவும். இரு சுண்டுவிரல்களையும் பார்ஶ்வ ஸம்பந்த முடையவைகளாகவும் மத்மைசம்பந்த முடையவைகளாகவும் சேர்த்து நிமிர்த்திப் பிடித்துக்கொள்ளவும்.

இரு கட்டைவிரல்களின் நுனிகளை மத்தியமைகளின் மத்ய ரேகைகளோடு சேர்க்கவும். இதுவே எல்லாவற்றிற்கும் முதலாவதான யோநி முத்ரை எனப்படும். (இம் முத்ரை பத்தாவதாகவும், எல்லாவற்றிற்கும் முதன்மை யானதெனவும் இங்கு வ்யவஹரிக்கப்பட்டிருக்கின்றது. இதன் ஸமாதானம் வேறு க்ரந்தங்களில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. அங்கே கண்டு தெளிக). **10.**

ஸ்ரீதேவியின் ப்ரீதிக்குக் காரணமான இம்முத்ரைகள் பூஜா காலங்களில் குருவின் உபதேச க்ரமப்படி காண்பிக்கத்தக்கவைகள்.

---

## தேவீதர்சன தீக்ஷா வர்ணனம்.

அகஸ்த்யர் :— கருணைக்கடலான அஸ்வாநநரே! தேவியைத் தர்ஶிப்பதில் எத்தகைய தீக்ஷை செய்து கொள்ளவேண்டும் கூறுங்கள்.

ஹயக்ரீவர் :- உனக்கு அந்த எண்ணமிருந்தால் பாப மெனும் சேற்றை உலர்த்தும் அந்தத் தீக்ஷா விதியைக் கூறுகிறேன்! கேள். கையில் சிவபுரத்தை த்யானம் செய்து மூலாங்கமாலினியை ஜபிக்கவேண்டும். குரு சிஷ்யனது உடலைத் தொடல்வேண்டும். இது ஸ்பர்ஶ தீக்ஷை எனப்படும். தெளிந்த புத்தியுள்ள குரு ஸ்ரீ காமாக்ஷியை த்யானம்செய்து கண்களைத் திறந்து சிஷ்யனை நன்ருகப் பார்ப்பது த்ருக்தீக்ஷையாம். குருவை தர்ஶித்த மாத்ரத்திலுைம், அவருடன் பேசு வதாலும், அவரைத் தொடுவதாலும், உடனே ஞானம் உதயமாகும். அது ஶாம்பவிதீக்ஷை எனப்படும். தேவியினது ஶரீரம் போலவே குருவின் தேஹமுமிருக் கின்றது. குருவின் அருளால், சிஷ்யனும் தேவிவடிவனுக ஆகின்ருன். நீண்ட காலம் சிஷ்யன் செய்த பணிவிடை யால் ஸந்தோஷமடைந்த குரு மௌனமாய்ச் சிஷ்ய னுக்கு அனுக்ரஹம் செய்ய ஸங்கல்பம் செய்யின் அது

மானஸீகதீக்ஷை எனப்படும். எல்லாத் தீக்ஷைகளிலும் இதுவே மிக உத்தமமானதாகும். ஆதியில் க்ரியாதீக்ஷை செய்துகொள்ளவேண்டும். சுக்லபக்ஷத்தில் சுபமான தினத்தில் சுத்த மனமுள்ளவனுகத் தீக்ஷை ஆரம்பிக்க வேண்டும். நாக்கு, வாய் முதலியவைகளை சுத்தம் செய்துகொண்டு விதிப்படி ஸ்நானம்செய்து ஸந்த்யையை முடித்துக் குருவின் உடலில் தேவியை த்யானம் செய்ய வேண்டும். ஏகாந்தத்தில் மௌனியாக வஸித்துக் கொண்டு ஆகாரத்தை நியமமாக உட்கொள்ளவேண்டும். குருவும் அப்படியே இருந்து பூஜா மண்டலத்தில் நுழைய வேண்டும். தேவீ ஸூக்தத்துடன் கூடியதும், மாத்ருகை யுடன் கூடியதுமான வித்யா ந்யாஸத்தைச் செய்து. புருஷ ஸூக்தத்திலுள்ள பதினறு ருக்கு (மந்த்ரங்)களால் ஆவாஹணம், ஆஸநம், பாத்யம், அர்க்யம், ஆசமநம், ஸ்நானம், வஸ்த்ரம், ஆபரணம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம், தாம்பூலம், ப்ரதக்ஷிணம், நமஸ்காரம் என்னும் பதினறு உபசாரங்களால் அம்பிகையை அர்ச்சிக்கவேண்டும். ஸஹஸ்ராக்ஷர வித்யையால் புஷ்பாஞ்ஜலியை அளிக்கவேண்டும்.

ஓம் ஐம் ஹ்ரீம் ஶ்ரீம் ஐம் க்லீம் ஸௌ: ஓம் நம: த்ரிபுரஸுந்தரி ஹ்ருதயதேவி ஶிரோதேவி ஶிகாதேவி கவசதேவி நேத்ரதேவி அஸ்த்ரதேவி காமேஶ்வரி பகமாலிநி நித்யக்லிந்நே பேருண்டே வஹ்நிவாஸிநி மஹாவஜ்ரேஶ்வரி, வித்யேஶ்வரி, பரஶிவதூதி த்வரிதே குலஸுந்தரி நித்யே நீலபதாகே விஜயே ஸர்வமங்களே ஜ்வாலாமாலிநி சித்ரே மஹாநித்யே பரமேஶ்வரி மித்ரேஶமயி ஷஷ்டீஶமயி ஒட்யாணமயி சாயாநாதமயி லோபாமுத்ராமயி அகஸ்த்யமயி காலதாபஸமயி தர்மாசார்யமயி முக்தகேஶீஶ்வரமயி தீபகலாநாதமயி விஷ்ணுதேவமயி ப்ரபாகர தேவமயி தேஜோதேவமயி மநோஜதேவமயி அணிமாஸித்தே மஹிமாஸித்தே கரிமாஸித்தே

லகிமாஸித்தே ஈஶித்வஸித்தே வசித்வஸித்தே ப்ராப்தி ஸித்தே ப்ராகாம்யஸித்தே ரஸஸித்தே மோக்ஷஸித்தே ப்ராம்ஹி மாஹேஶ்வரி கௌமாரி வைஷ்ணவி வாராஹி இந்த்ராணி சாமுண்டே மஹாலக்ஷ்மி ஸர்வஸம் க்ஷோபிணி ஸர்வவித்ராவிணி ஸர்வாகர்ஷிணி ஸர்வவஶங் கரி ஸர்வோந்மாதிநி ஸர்வமஹாங்குஶே ஸர்வகேசரி ஸர்வபீஜே ஸர்வயோகே ஸர்வத்ரிகண்டே த்ரைலோக்ய மோஹநசக்ர ஸ்வாமிநி ப்ரகடயோகிநி பௌத்ததர்ம நாங்கி காமாகர்ஷிணி புத்யாகர்ஷிணி அஹங்காராகர் ஷிணி ஶப்தாகர்ஷிணி ஸ்பர்ஶாகர்ஷிணி ரூபாகர்ஷிணி ரஸாகர்ஷிணி கந்தாகர்ஷிணி சித்தாகர்ஷிணி தைர்யாகர் ஷிணி ஸ்ம்ருத்யாகர்ஷிணி நாமாகர்ஷிணி பீஜாகர்ஷிணி ஆத்மாகர்ஷிணி அம்ருதாகர்ஷிணி ஶரீராகர்ஷிணி குப்த யோகிநி ஸர்வாஶாபரி பூரகசக்ரஸ்வாமிநி அநங்க குஸுமே அநங்கலேகே அநங்கமதநே அநங்கமதநாதுரே அநங்கரேகே அநங்கவேகிநி அநங்காங்குஶே அநங்க மாலிநி குப்ததரயோகிநி வைதிகதர்மநாங்கி ஸர்வஸம் க்ஷோப காரகசக்ரஸ்வாமிநி பூர்வாம்நாயாதிதேவதே ஸ்ருஷ்டிரூபே ஸர்வஸம்க்ஷோபிணி ஸர்வவித்ராவிணி ஸர்வாகர்ஷிணி ஸர்வாஹ்லாதிநி ஸர்வஸம்மோஹிநி ஸர்வஸ்தம்பிநி ஸர்வஜ்ரும்பிணி ஸர்வவஶங்கரி ஸர்வ ரஞ்ஜிநி ஸர்வோந்மாதிநி ஸர்வார்த்தஸாதிகே ஸர்வ ஸம்பத்ப்ரபூரணி ஸர்வமந்த்ரமயி ஸர்வத்வந்த்வக்ஷயகரி ஸம்ப்ரதாயயோகிநி ஸௌரதர்மநாங்கி ஸர்வஸௌபாக்ய தாயகசக்ரே ஸர்வஸித்திப்ரதே ஸர்வஸம்பத்ப்ரதே ஸர்வ ப்ரியங்கரி ஸர்வமங்களகாரிணி ஸர்வகாமப்ரதே ஸர்வ துக்கவிமோசநி ஸர்வம்ருத்யுப்ரஶமநி ஸர்வவிக்ந நிவாரிணி ஸர்வாங்கஸுந்தரி ஸர்வஸௌபாக்யதாயிநி குலோத்தீர்ணயோகிநி ஸர்வார்த்த ஸாதகசக்ரே ஸர்வ க்ஞே ஸர்வஶக்தே ஸர்வைஶ்வர்யபலப்ரதே ஸர்வ க்ஞானமயி ஸர்வவ்யாதிநிவாரிணி ஸர்வாதாரஸ்வரூபே

ஸர்வபாபஹரே ஸர்வாநந்தமயி ஸர்வரக்ஷாஸ்வரூபிணி ஸர்வேப்ஸிதப்ரதே மிகர்ப்பயோகிநி வைஷ்ணவதர்ஶநாங்கி ஸர்வரக்ஷாகரசக்ரஸ்தே தக்ஷிணாம்நாயேஶி ஸ்திதிரூபே வஶிநிகாமேஶி மோதிநி விமலே அருணே ஜயிநி ஸர்வேஶ்வரி கௌலிநி ரஹஸ்யயோகிநி ஶாக்ததர்ஶநாங்கி ஸர்வரோகஹர சக்ரேஶி பஶ்சிமாம்நாயேஶி தநுர்பாணபாஶாங்குஶதேவதே காமேஶி வஜ்ரேஶி பகமாலிநி அதிரஹஸ்யயோகிநி ஶைவதர்ஶநாங்கி ஸர்வஸித்திப்ரதசக்ரகே உத்தராம்நாயேஶி ஸம்ஹாரரூபே ஶுத்தபரே பிந்துபீடகதே மஹாத்ரிபுரஸுந்தரி பராபராதிரஹஸ்யயோகிநி ஶாம்பவதர்ஶநாங்கி ஸர்வாநந்தமய சக்ரேஶி த்ரிபுரே த்ரிபுரேஶி த்ரிபுரஸுந்தரி த்ரிபுரவாஸிநி த்ரிபுராஶ்ரீ த்ரிபுரமாலிநி த்ரிபுரஸித்தே த்ரிபுராம்பே ஸர்வசக்ரஸ்தே அநுத்தராம்நாயாக்யஸ்வரூபே மஹாத்ரிபுரபைரவி சதுர்விதகுணரூபே குலே அகுலே குலாகுலே மஹாகௌலிநி ஸர்வோத்தரே ஸர்வதர்ஶநாங்கி நவாஸநஸ்திதே நவாக்ஷரி நவமிதுநாக்ருதே மஹேஶ மாதவ விதாத்ரு மந்மத ஸ்கந்தநந்தி இந்த்ர மநு சந்த்ர குபேர அகஸ்த்யே துர்வாஸ க்ரோதபட்டாரக வித்யாத்மிகே கல்யாணதத்வத்ரயரூபே ஶிவஶிவாத்மிகே பூர்ணப்ரம்ஹஶக்தே மஹாபரமேஶ்வரி மஹாத்ரிபுரஸுந்தரி தவ ஸ்ரீபாதுகாம் பூஜயாமி நம: ஸ்ரீம் ஹ்ரீம் ஐம்.

இந்த ஸஹஸ்ராக்ஷர வித்யையால் ஸ்ரீ தேவிக்கு புஷ்பாஞ்ஜலியை யளிக்காவிடில் பூஜையே வீணுகுமென்று வேதவாதிகள் கூறுகின்றனர். கோமயத்தால் பூமியைச் சுத்தம் செய்து அதில் சுத்தமான ஆறுபடி அரிசியைப் பரப்பி, அதன் மீது ஆறுபடி ஜலம் நிறைந்த ஒரு புதிய (கும்பத்தை) பாத்ரத்தை வைத்து, அதனுள் பஞ்சரத்நங்களையும், ஆல், அரசு, மா, நாவல், அத்தி இந்த மரங்களின் பட்டைகளையும், தளிர்களையும் போட்டு, அக்ரத்தில் ஒரு தேங்காயையும் வைக்கவேண்டும். அதை,

கந்த புஷ்ப தூபதீபங்களால் அர்ச்சித்து, ஸ்ரீ காமாக்ஷி யின் வடிவமாகக் கருதி, கலஶத்தைக் கரத்தால் தொட்டுக் கொண்டே மாத்ருகையுடன் ஸ்ரீ சிந்தாமணி மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். நூற்றெட்டுமுறை ஜபமானபின் தீபத்தைக்காட்ட வேண்டும். பின்னர் வஸ்திரத்தினல் கண்களைக் கட்டி ஏகாந்தமாகச் சிஷ்யனையழைத்து மூன்று முறை ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்யச்சொல்லி, குரு, அவன் கையில் புஷ்பங்களைக் கொடுத்து புஷ்பாஞ்ஜலி செய்யும்படிக் கூறவேண்டும். "ஸ்ரீ நாதே! கருணு ராஶே! பரஞ்ஜ்யோதிஸ்ஸான ஈஶ்வரீ! உன் பாதார விந்தத்தில் புஷ்பாஞ்ஜலி ஸமர்ப்பிக்கப்பட்டது. பரந்தாம! பரம்ப்ரம்ஹ! எனக்கு நீயே பரதேவதை. இன்று முதல் சரணுகதி யடைந்த என் மக்களைக் காத்தருள்வாய்" என்று கூறி குருவின் பாதாரவிந்தத்தில் சிஷ்யன் ஶிரஸ்ஸை வைத்து வணங்க வேண்டும். "ஜன்மாந்தர பாக்யவசத்தினல் என் ஶிரஸ்ஸின் மீது ஸ்ரீ குரு பாதுகை கள் வைக்கப்பட்டன. மும்மூர்த்திகளை ஸேவித்ததனல் இந்தப் பாக்யம் கிட்டிற்று" என்று கூறி, பக்தி ததும்ப ஶாந்தனுய் குருவின் இடது புறத்தில் கர்வத்தை விட்டு விநயத்துடன் நிற்கவேண்டும் குரு சிக்ஷ்யனை மூல மந்த்ரத்தால் ப்ரோக்ஷித்து, கண் கட்டை அவிழ்த்து அர்ச்சனையின் க்ரமத்தைக் காட்டவேண்டும். சர்க்கரை, மது, நெய், கதலீபழம், பாயஸம் ஆகிய இந்த நைவேத் யத்தை மஹாத்ரிபுர ஸுந்தரிக்களிக்க வேண்டுமென்று குரு உத்திரவிட வேண்டும். இடது காதில் மெதுவாக ஷோடஶாக்ஷரீ மந்த்ரத்தை உபதேசிக்க வேண்டும். பிறகு வெளியில் வந்து பட்ட வஸ்த்ரத்துடன் கூடிய சிஷ்யனை மணையின்மீது கிழக்குமுகமாக உட்காரவைத்து அவனுக்கு மந்த்ரத்துடன் அந்தக் கலஶ ஜலத்தால் அபிஷேகஞ் செய்யவேண்டும். பின்னர் சுத்த ஜலத்தில் ஸ்நானம்செய்து வஸ்த்ரமுடுத்தி நூற்றெட்டுமுறை மந்த் ரத்தை ஜபம் செய்து விட்டு அவன் தூங்கவேண்டும்.

நல்ல ஸ்வப்நம் தோன்றினுல் உத்தமமான புண் யத்தைச் செய்யவேண்டும். துஸ்வப்நம் தோன்றினுல் ஆயிரத்தெட்டு முறை ஜபம் செய்து விதிப்படி தேவீ பூஜை செய்விக்க வேண்டும். ஒரு ஸ்வப்நமும் தோன்ருவிடில் வெகுகாலஞ்சென்ற பிறகே ஸித்தி உண் டாகும். சிறந்த பக்தியினுல் மிகுதியான தேவியினரு ளைப் பெறவேண்டும். உடனே அந்த உத்தம சிஷ்யன் பந்திபாவனர்களில் பாவநனுக ஆவான்.

ஸ்ரீ குருவிற்குச் சீடன் தனது உடல், பொருள், ஆவி அனைத்தையும் அளித்து, அவருக்கு அடங்கி வாழ வேண் டும்; அவரை மீறக்கூடாது. அவர் அருளிருந்தால் அரை க்ஷணத்தில் மோக்ஷலக்ஷ்மி ஸித்திப்பாள். பிறவியைத் தாண்டிவைக்கும் ஆசார்யன் கிடைப்பது அதிதுர்லபம். கு என்னும் எழுத்து இருள்; ரு என்னும் எழுத்து அதை அகற்றுவது என்ற பொருளுடையதாம். குரு எனில் இருளை அகற்றுபவர் என்பது பொருள். அறிவுவடிவ ஞன ஆசார்யனைப் பெற்ற பின் வேறொரு குருவைத் தேடலாகாது. அவர் கடுமையாகப் பேசினுலும் அதை ஆசீர்வாதமாகக் கருதவேண்டும். லௌகிகமோ வைதிகமோ, வேதாந்தமோ எதைக் குருவினிடமிருந்து உபதேசம் பெறுவதானுலும் முதலில் அவரைப் பணிய வேண்டும். இங்ஙனம் மூன்று தீக்ஷையும் செய்து கொண்ட பிறகு செய்யவேண்டியதைப் பின்னறியவேண் டும். குருபக்தியே ஸதாசாரம்; குருத்ரோஹமே மஹா பாதகமாம். அவர் திருவடிகளை நினைப்பதே முக்தி. இந்த க்ரமம் உடலுள்ளவரை அனுஷ்டிக்கத்தக்கதாகும். பசு ப்ராம்ஹண வதங்களைவிட, குருவின் எதிரில் அஸத் யங்கூறுவது பாபமாம். ப்ரம்ஹாதி ஸ்தம்பபர்யந்த மாக உள்ள ஒவ்வொன்றும் எனது குருபரம்பரையாகும். ஆதலின் எல்லோரையும் அர்ச்சிக்கவேண்டிய எனக்கு எவர்தான் அவனியில் அர்ச்சிக்கத்தகாதவர்? என்று

எல்லோருக்கும் அநுகூலமாக இருப்பவனே சிஷ்யனுவான். ஶீலம் முதலிய விமலகுணம் நிறைந்தவனுயிருத்தலாலும் குரு ஆணையிலே அடங்கியிருத்தலாலும் சிஷ்யன் என்று ஸாதகன் கூறப்படுகிருன்.

ஜபம் செய்து களைப்படைந்தால் த்யானமும், த்யானம் செய்து களைப்படைந்தால் ஜபமும் செய்யவேண்டும். ஜபத்துடனும் த்யானத்துடனும் கூடியவனுக்கு விரைவில் மந்த்ரம் ஸித்தியாகும். த்யானத்தால் புழுவுங்கூட வண்டாகிறது. அங்ஙனமே ஸமாதியால் ஜீவனும் ப்ரம்ஹமாகிருன். ஸுஷுப்தியில் எப்படி ப்ரபஞ்சம் காணப்படுவதில்லையோ அங்ஙனமே உலகில் உபாஸகன் கண்களைத் திறந்திருக்கும்போதும் ப்ரபஞ்சம் தோற்ருது. எங்கும் நிறைந்த ஆத்ம வஸ்துவே காணப்படும். இந்நிலையே த்யானமாகும். வர்ணங்களைக் கடந்ததாயும் விகாரமற்றதாயுமுள்ள பரதத்வம் அறியப்படின் ஸாதகனுக்கு ஸகல மந்த்ரங்களும் மந்த்ர தேவதைகளுடன் கூட வேலைக்காரர்களாகின்றனர்.

ஆத்ம ஐக்யபாவ நிஷ்டையிலுள்ளவனது செயல்களே ஶாஸ்த்ரம், யோகம், தபஸ், மந்த்ரம், த்யானம் இவைகளாகும். தேஹாபிமானம் நீங்கிப் பரமாத்ம ஸ்வரூபத்தை உணர்ந்தபின் மனம் எங்குச் செல்கிறதோ அதே ஸமாதியாம். எங்குமுள்ளதாய், ஆனந்தமாய், ஆத்மாவாய், அத்வயமாய் உள்ள தன் ஸ்வரூபத்தைக் கண்டபின் ஒருவன் அடையவேண்டியதோ, அறியவேண்டியதோ, வேறென்றுமில்லை.

கோடி முறை பூஜை செய்வதற்கு ஸமம் ஒரு முறை ஸ்தோத்ரம் செய்வது; கோடி ஸ்தோத்ரங்களுக்கு ஸமம், ஒரு முறை ஜபம் செய்வது; கோடி ஜபத்திற்கு ஸமம், ஒரு முறை த்யானம் செய்வது; கோடி த்யானத்திற்கு ஸமம் லயமாவது. தேஹமே தேவாலயமாம்; ஜீவனே

அநாதியான ஈஶ்வரனும்; அவ்வீஶ்வரனை அக்ஞான மென்னும் நிர்மால்யத்தை அகற்றி, ஸோஹம் (அவனே நான் என்னும்) பாவனையால் பூஜித்தல் வேண்டும். உமி மூடியுள்ளவரை நெல் எனப்படும். உமி விண்டபின் அது அரிசியாம். பாஶத்தால் கட்டப்பட்டுள்ள வரையில் ஜீவனெனப்படுவான்; பாஶமகன்றபின் மஹேஶ்வரனுவன். ஆகாயத்தில் பக்ஷிகளது கதியும், ஜலத்தில் ஜலசரங்களது கதியும், பிறர்க்கு எங்ஙனம் தெரிவதில்லையோ அங்ஙனமே மஹா புருஷர்களது செயலும் எளிதில் அறியத்தக்கதல்ல. நித்ய பூஜை பகலிலும், நைமித்திகம் இரவிலும், காம்யம் இரண்டு வேளைகளிலும் செய்யத்தக்கதென்பது ஶாஸ்த்ரவிதியாகும். கோடி கோடியான மஹா தானங்களிலும், கோடி கோடியான மஹா வ்ரதங்களிலும், கோடி கோடியான மஹாயாகங்களிலும் ஸ்ரீ பாதுகாஸ்மரணமே மிகச்சிறந்ததாம். அறிந்தோ அறியாமலோ உடல் உள்ளவரை வர்ணாஶ்ரம ஆசாரங்கள் அவச்யம் கர்ம மோக்ஷத்தின் பொருட்டுச் செய்யத்தக்கன. குருவின் முகத்திலிருந்து கிளம்பிய சொற்கள் நிஷித்தமாயிருப்பினும் அதுவே வைதிகமான ஶாஸ்த்ரமென்னும் நிச்சயத்தோடு அநுஷ்டித்தல் வேண்டும். அது மீறத் தக்கதல்ல. ஒருவன் ஜாதியினுலோ, வித்யையினுலோ, செல்வத்தினுலோ சிறந்தவனுயினும், அவன் வெகு தூரத்தில் குருவைக் கண்டவுடன் தண்டம் போல் வீழ்ந்து ஒருமுறை நமஸ்கரித்து மும்முறை ப்ரதக்ஷிணஞ் செய்ய வேண்டும். ஸர்வ தேவதைகளையும் மற்றெதையும் குரு என்று எண்ணி நமஸ்கரிக்கவேண்டும். உலோஹத்தினுலும், மண்ணுலும் செய்யப்பட்ட ப்ரதிமைகளைத் தெய்வமென்றெண்ணி நமஸ்கரிக்க வேண்டும்.

குருவை ஹூம் என்று அதட்டுதலாலும், அவரை நீ என்று மரியாதையின்றிப் பேசுவதாலும், வீண் வாதத்தினுல் ப்ராம்ஹணனை ஜயித்தலாலும், ரஹஸ்யமான

ஶாஸ்த்ரங்களை விகற்பித்துப் பரிகசித்தலாலும் ப்ரம்ஹ ராக்ஷஸனுவான். எப்போதும் அத்வைதத்தையே பாவித் தல் வேண்டும். ஆனுல் குரு பக்தியில் அபேத அத் வைதத்தைப் பாவித்தல் கூடாது. இதர மதங்களையும். வேத ஶாஸ்த்ரங்களையும் நிந்திக்கக்கூடாது. குரு ஒரே க்ராமத்தில் வஸித்தால் சிஷ்யன் மூன்று ஸந்திகளிலும் அவரை வணங்கவேண்டும். க்ரோஶ தூரத்தில் வஸித் தால் ப்ரதிதினம் ஒருமுறை ஏகாக்ர சித்தனுய்க் குருவை நமஸ்கரிக்கவேண்டும். அர்த்த (பாதி) யோஜனை தூரத் தில் இருந்தால் பஞ்சபர்வாக்களிலும் வந்து நமஸ்கரிக்க வேண்டும். ஒரு யோஜனை முதல் பன்னிரண்டு யோஜனை தூரத்திலுள்ளவன் அந்தந்த யோஜனை தூரத்திற்குச் சொன்னபடி, அதாவது முதல் யோஜனையிலுள்ளவன் மாதத்திற்கொருமுறையிலும், பத்து யோஜனையிலுள்ள வன் பத்து மாதங்களுக்கொருமுறையாகவும் குருவை நமஸ்கரிக்கவேண்டும். வெகு தூரத்திலுள்ளவன் இஷ்ட மானபோது குருவினிடம் வந்து நமஸ்கரிக்கவேண்டும்.

அரசன், தேவதை, குரு ஆகிய இவர்களிடம் வெறுங்கையுடன் செல்லலாகாது. சக்திக்கேற்றபடி பழம், புஷ்பம், வஸ்த்ரம் முதலியவைகளைக் கொண்டு போய் ஸமர்ப்பிக்கவேண்டும். குரு என்பவர் மனிதத் தோலால் மூடப்பட்ட ஸாக்ஷாத் பரமஶிவனேயாவர். நல்ல சிஷ்யர்களை ரக்ஷிக்கும்பொருட்டு இங்ஙனம் பகவான் (ஶரீரத்திற்குள்) மறைந்து வஸிக்கிருர். ஸத் பக்தர்களுக்கு அருள் புரியவே, உருவமற்றவராயினும் க்ருபாநிதியான ஶிவன் ஒரு ஆகார (உருவ) த்தைப் பூண்டு உலகில் ஸம்ஸாரியைப்போல் ஸஞ்சரிக்கிருர். குரு, மூன்று கண்களில்லாத ஶிவனுகவும், நான்கு கைகளில்லாத நாராயணனுகவும், நான்கு முகங் களில்லாத ப்ரம்ஹாவாகவும் ஆவர். நன்ருக உதித்த

ஸூர்யனும் குருடனுக்குத் தெரியாததுபோல் கண் முன்னே நிற்கும் பரதத்வமென்னும் குரு. பாக்யஹீனர் களின் கண்ணிற்குப் புலப்படுவதில்லே. தத்வத்தைச் சிந்தனேசெய்வது உத்தமமாம்; ஜப சிந்தை மத்யமமாம்; ஶாஸ்த்ர சிந்தை அதமமாகும்; லோக சிந்தை அதமாதம மாகும். குருவைவிட உயர் தத்துவமில்லே. ஞானத்திற்கு அதிகமான ஸுகமில்லே. பக்தியைவிடச் சிறந்த பூஜை யில்லே. மோக்ஷத்திற்சிறந்த பலனில்லே. ஸர்வ வேதங் களிலும், தந்த்ரங்களிலும், ப்ரஹ்மா, விஷ்ணு. ஶிவன் முதலிய நாமங்களிலும் அங்கங்கே சப்தங்களால் பரா ஶக்தியான காமாக்ஷியே கூறப்படுகிருள்.

ஶசீ-இந்த்ரர்கள், ரோஹிணீ-சந்த்ரர்கள், ஸ்வாஹா-அக்நிகள், வாக்-ப்ரம்ஹாக்கள், லக்ஷ்மீ-நாராயணர்கள், பார்வதீ-பரமேஶ்வரர்கள், த்விட்-அக்நிகள், பிந்து-நாதங் கள், ப்ரக்ருதி-புருஷர்கள், ஆதார-ஆதேயங்கள், போக-மோக்ஷங்கள், ப்ராண-பானங்கள், ஶப்த-அர்த்தங்கள், விதி-நிஷேதங்கள், ஸுக-துக்கங்கள் முதலிய த்வந்த்வங் கள் யாவும் பரப்ரம்ஹமே. அதைத் தவிர வேறில்லே. காமாக்ஷி என்ற பெயருடன் உருக்கொண்டு நிற்கும் பரஞ்ஜோதிஸ்ஸை மும்மூர்த்திகளும் ப்ரதிதினம் த்யானம் செய்கின்றனர். இங்ஙனம் ஶாக்தமார்க்கத்தில் உள்ள வர் தேவியின் அருளால் புக்தி முக்திகளுக்குப் பாத்ர மாவர். மந்த்ரத்துடனே, மந்த்ரமில்லாமலோ காமாக்ஷி யை அர்ச்சிக்கும் பெண்களும், வைஶ்யர்களும், நான்காம் வர்ணத்தவர்களுங்கூடப் பரகதியை அடைவார்கள். மந்த்ர பூர்வமாகப் பூஜிக்கும் க்ஷத்ரியர்களேயும், ப்ராம்ஹணர் களேயும்பற்றிக் கூறுவானேன்! ஸம்ஸாரிகளாக இருந் தாலும் அவர்கள் முக்தர்களே. சர்க்கரை, மது, நெய், வாழைப்பழம், பாயஸம் இவைகளேப் பஞ்சபர்வாக்களில் எப்போதும் ஸ்ரீ அன்னேக்கு நிவேதநம் செய்யவேண்டும்'

ஶக்தியுள்ளவன் பூஜிக்காவிடில் தேவியின் ஶாபத்தைப் பெறுவான். ஶக்தியில்லாதவன் பாவனையால் அம்பிகையை அர்ச்சிக்கவேண்டும்.

ஸதாசாரத்துடன் க்ருஹஸ்தன் அநுகூல மனைவியோடு தேவியைப் பூஜிக்கவேண்டும். குரு மும்முறை சிஷ்யனுக்கு ஆசாரத்தை உபதேசிக்கவேண்டும். அதை அவன் ஏற்காவிடில் சிஷ்யனுக்கே பாபம் உண்டாகும். குருவிற்குப் பாபமில்லை. அறிவுள்ளவன் குருபத்னியையும், குருவையும் தாய் தந்தையர்களாகவும், லக்ஷ்மீநாராயணர்களாகவும், உமாமஹேஶ்வரர்களாகவும் எண்ணவேண்டும். அகஸ்த்யரே! இங்ஙனம் சுருக்கமாகக்கூறப்பட்ட இதைஊக்கத்துடன் அறிந்தவன் ஸர்வக்ஞனாக ஆவான்.

## மந்த்ரோபாஸனப்ரகாரத்தைக் கூறுதல்.

ஹயக்ரீவர் :— மந்த்ரக்ஞனான உபாஸகன் ஜபத்திற்கென ஏற்படுத்தப்பட்டிருக்கும் இடத்தையடைந்து தன் மனதை இதர விஷயங்களிற் செல்ல விடாமல் மந்த்ரோபாஸனையிலேயே ஏகாக்ரமாய் நிறுத்தி, குருவை மனத்தினால் நன்கு பூஜித்து, அவரால் உபதேசிக்கப்பட்ட முறைப்படி மந்த்ராதிஷ்டான தேவதையைப் பூஜித்துத் தன் ஆத்மாவை மந்த்ராதிஷ்டான தேவதையாகப் பாவித்து த்யானம் செய்துகொண்டு, கிழக்கு முகமாகப் பத்மாஸனத்தில் உட்கார்ந்து ஏகாக்ரசித்தனாய் த்யானம் செய்யவேண்டும்.

பிறகு த்ரிகண்டா முத்ரையினால் குருவையும் இதரமான பெரியவர்களையும் வந்தனம் செய்யவேண்டும். அதன் பிறகு பாலாமந்த்ரத்தின் பீஜாக்ஷரங்களை இரண்டு தடவையாக நடுவிரல் முதலாக ஐந்து விரல்களிலும், இரண்டு உள்ளங்கைகள், இரண்டு புறங்கைகளிலும் க்ரமமாய்க் கரஶுத்தி ந்யாஸம் செய்தல் வேண்டும்.

பின் அஸ்த்ர மந்த்ரத்திஞல் கரதலங்களிலும் ஶரீர முழுவதிலும் வ்யாபகமாக ந்யாஸம் செய்து அக்னிப்ராகார பாவனைவரையில் செய்தல் வேண்டும்.

பின்னர், பாதம், ஹ்ருதயம், ஶிரஸ் என்னும் மூன்று இடங்களில் ப்ரதிலோமமாகவும், தலை, ஹ்ருதயம், பாதம் என்பவைகளில் அநுலோமமாகவும் மாயாபீஜத்தோடு சேர்த்து ஸௌ: லீம், ஐம், ஐம், க்லீம், ஸௌ: என்று வ்யாபக ந்யாஸம் செய்யவும். இங்ஙனம் செய்த பின்னர், நாபி, ஹ்ருதயம், புருவமத்தியாகும் மூன்று ஸ்தானங்களிலும் பாலா மந்த்ர பீஜங்களை முறையே ந்யாஸம்செய்து, ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணமான மூன்று ஶரீரங்களைப் பாவித்தல் வேண்டும்.

பின்னர் அகாராதி க்ஷகாராந்தமான ஐம்பத்தோரு அக்ஷரங்களோடு பாலா பீஜங்களைச் சேர்த்து அம்ஐம்-க்ஷம்ஐம் (51); அம்க்லீம்-க்ஷம்க்லீம் (51); அம்ஸௌ:-க்ஷம்ஸௌ: (51); என்று நாபி, ஹ்ருதயம், புருவமத்திகளிலும், மறுபடியும் அம்ஸௌ:-க்ஷம்ஸௌ: (51); அம்க்லீம்-க்ஷம்க்லீம் (51); அம்ஐம்-க்ஷம்ஐம் (51); என்று புருவமத்தி, ஹ்ருதயம் நாபிகளிலும் ந்யாஸம் செய்யவேண்டும். இந்த நாப்யாதி ந்யாஸமானது கரஶுத்தி ந்யாஸம் செய்யாமல் செய்யலாகாது.

**நவாஸன ந்யாஸம்:—** இரண்டு பாதங்கள், முழங்கால்கள், தொடைகள், புட்டங்கள், குஹ்யம், மூலாதாரம், நாபி, ஹ்ருதயம், ஶிரஸ் என்னும் ஒன்பது ஸ்தானங்களிலும் 1. ப்ரம்ஹாஸனம், 2. விஷ்ணவாஸனம், 3. ருத்ராஸனம், 4. ஈஶ்வராஸனம், 5. ஸதாஶிவாஸனம், 6. புஷ்பதூலிகாஸனம், 7. உச்சீர்ஷாஸனம் (மஹோபதானம்), 8. ப்ரகாசகாஸனம் 9. வித்யாஸனம் என்னும் ஒன்பது ஆஸனங்களையும் ந்யஸித்தல் வேண்டும். ந்யாஸ மந்த்ரங்களைக் குரு முகமாய் அறியவும்.

பின், ஹ்ருதயத்தில் பத்ம முத்ரை, த்ரிகண்டா முத்ரை, யோனி முத்ரைகளைக் காட்டவும்.

குண்டலீ உத்தாபனம்:— பின் இரண்டு உதடுகளைக் குறுக்கி வாயுவை உள்ளேயிழுத்து, ஹூம், ஹூம், ஹூம் என்று குண்டலினீ ஶக்தியை நித்ரையினின்றும் எழுப்பி ஹ்ருதயத்தில் மந்த்ர ஶக்தியோடு சேர்த்து மேலுக்கு எழுப்பி, த்வாதஶாந்த ஸ்தானமாகும் ஸஹஸ்ரதள கமலத்தில் பரமஶிவத்தோடு ஐக்யப்படுத்திப் பின்னர் அக்குண்டலினீ ஶக்தியை ஸ்வஸ்தானமாகும் மூலாதாரத்தில் சேர்ப்பித்தல் வேண்டும். (இதற்குப் பூதஶூத்தி யென்றும் வேறு பெயருண்டு).

பின்னர் வாக்பவ, காமராஜ, ஶக்தி பீஜங்களை முறையே மூலாதாரம், ஹ்ருதயம், ஆக்ஞைகளிலும், ஶிரஸ்ஸில் எல்லாப் பீஜங்களையும் ந்யஸித்தல் வேண்டும்.

இங்ஙனமே மேற்கூறிய மூன்று பீஜங்களையும் இரண்டு கரங்களின் மூலம், மத்யம், அக்ரம் என்னும் மூன்று ஸ்தானங்களிலும் ந்யாஸம் செய்தல்வேண்டும்.

பின்னர், மூலமந்த்ரத்தின் கரந்யாஸம், அங்கந்யாஸங்களைச் செய்தல் வேண்டும்.

அதன்பின், குங்குமந்யாஸம் செய்யவும். அது எங்ஙனமெனின், அம்ஸௌ:, க்ஷம்ஸௌ: (51), அம்க்லீம் க்ஷம்க்லீம் (51), அம்ஐம், க்ஷம்ஐம் (51) என்று ஐம்பத்தோரு மாத்ருகைகளையும் மூன்று பாலா பீஜங்களோடு சேர்த்து மாத்ருகாஸ்தானங்களில் ந்யாஸம் செய்ய வேண்டும்.

பின்னர் அதிக விஸ்தாரமில்லாமல் சுருக்கமாய்ப் பூதலிபி ந்யாஸத்தை ஆசரிக்கவும். பூதலிபிகளின் எட்டு வர்க்கங்களை முறையே மூலாதாரம், நாபி, ஹ்ருதயம், கண்டம்(கழுத்து) தன்முகத்தின் கிழக்கு, தெற்கு, மேற்கு

வடக்கு என்னும் நான்கு திக்குகள் ஆக எட்டு ஸ்தானங்களிலும் ந்யாஸம் செய்தல் வேண்டும். பூதலிபியின் எட்டு வர்க்கங்களாவன:—

(1) அ-இ-உ-ரு-லு. (2) ஏ-ஐ-ஒ-ஔ. (3) ஹ-ய-ர-வ-ல. (4) க-ச-ட-த-ப. (5) க$^{2}$;ச$^{2}$-ட$^{2}$-த$^{2}$-ப$^{2}$. (6) க$^{3}$-ச-ட$^{3}$-த$^{3}$-ப$^{3}$. (7) க$^{4}$-ச$^{2}$·ட$^{4}$-த$^{4}$-ப$^{4}$. (8) ங-ஞ-ண-ந-ம என்பனவாம். ஒன்பதாவதாகிய ஶ-ஷ-ஸ என்னும் மூன்று அக்ஷரங்களை முறையே மூலாதாரம், ஹ்ருதயம், ஶிரஸ் என்னும் மூன்று இடங்களில் ந்யஸித்தல் வேண்டும் பின்னர் அதே ஒன்பது வர்க்கங்களை வலது கக்ஷம், வலது கை, வலது மணி பந்தம், வலது இடுப்பு, இடது இடுப்பு, இடது மணிபந்தம், இடது கை, இடது கக்ஷம், ஹ்ருதயம் என்னும் ஒன்பது இடங்களிலும் ந்யாஸஞ் செய்தல் வேண்டும்.

அதற்குப் பிறகு பூதலிபி ந்யாஸத்தின் ருஷி, சந்தஸ், தேவதை முதலியவற்றையும், கரந்யாஸம், அங்கந்யாஸம், த்யானம் முதலியவற்றையும் செய்தல்வேண்டும். இந்த பூதலிபி ந்யாஸத்திற்கு ஶப்தப்ரஹ்மம் ருஷியாகும். பூதலிபி சந்தஸ், மூலப்ரக்ருதிதேவதை. த்யானம் கூறப்படுகின்றது:— கரங்களில் அக்ஷமாலை, புஸ்தகம், புஷ்ப பாணங்கள், கோதண்டம், வரதம். அபயம் இவைகளைத் தரித்திருக்கின்றவளும், கழுத்தில் முத்துமாலைகளையும், தோள்வளை, கைவளை, சன்னவீரம் முதலிய ஆபரணங்களையும் அணிந்தவளும், வாஸனை த்ரவியங்களாற்கூடிய சந்தனக்கலவை அணிந்த அங்கங்களையுடையவளும், ரத்ந குண்டலங்களாலலங்கரிக்கப்பட்ட காதுகளையுடையவளும் அக்ஷரமயமான கல்பவ்ருக்ஷத்தின் கீழ் அழகான தாமரை மலரின்மேல் அமர்ந்துள்ளவளும், அக்ஷர ஸ்வரூபிணியாயுள்ளவளும், பக்தர்பால் மிகுந்த அன்புள்ளவளும், தன்னைச் சுற்றிலும் அநேக கோடி தூதீகணங்களால்

சூழப்பட்டவளுமான பைரவீ தேவியை த்யானித்துப் பஞ்சபூஜை செய்து அதன் பின்னரே பூதலிபி ந்யாஸம் செய்தல் வேண்டும். கரஷடங்க ந்யாஸம் செய்யும்முறை கூறப்படுகின்றது;—

(1) ஹ०-ய०-ர०-வ०-ல० = கட்டைவிரல்.... ஹ்ருதயம்
(2) க०-ச०-ட०-த०-ப० = தர்ஜநீவிரல் .... ஶிரஸ்
(3) க$^{2}$०-ச ०-ட$^{2}$०-த$^{2}$०-ப$^{2}$० = நடுவிரல் .... ஶிகை
(4) க$^{3}$०-ஜ०-ட$^{3}$०-த$^{3}$०-ப$^{3}$० = மோதிரவிரல்... கவசம்
(5) க$^{4}$०-ஜ$^{2}$०-ட$^{4}$०-த$^{4}$०-ப$^{4}$० = சுண்டுவிரல் .... நேத்ரம்
(6) ங०-ஞ०-ண०-ந०-ம० = } உள்ளங்கை
} புறங்கை ... அஸ்த்ரம்

விஸ்தாரமான பூதலிபி ந்யாஸம்

(1) மூலாதாரம்—அ०-இ०-உ०-ரு०-லு० 5 எழுத்துக்கள்
(2) நாடீகந்தம் –ஏ०-ஐ०-ஒ०-ஔ० 4 ,,
(3) ஸ்வாதிஷ்டானம்–க०-ச०-ட०-த०-ப० 5 ,,
(4) மணிபூரகம்—க$^{2}$०-ச$^{2}$०-ட$^{2}$०-த$^{2}$०-ப$^{2}$० 5 ,,
(5) அநாஹதம்–க$^{3}$०-ஜ$^{3}$०-ட$^{3}$०-த$^{3}$०-ப$^{3}$० 5 ,,
(6) விசுத்தி(கழுத்து)-க$^{4}$०-ஜ$^{2}$०-ட$^{4}$०-த$^{4}$०ப$^{4}$० 5 ,,
(7) முகம்(வாய்)-ங०-ஞ०-ண०-ந०,ம० 5 ,,
(8) ஆக்ஞை(புருவமத்தி)-ஹ०-ய०-ர०-
[வ०-ல०- 5 ,,

இங்ஙனம் மூலாதாரம் முதல் ஆக்ஞை வரையிலுள்ள எட்டு ஸ்தானங்களில் எட்டு வர்க்கங்களை ந்யாஸித்துப் பின் ஒன்பதாவது வர்க்கமாகிய ஶ-ஷ-ஸ என்னும் மூன்று எழுத்துக்களையும் ஶிரஸில் ந்யாஸம் செய்ய வேண்டும். பின்னர் ஸ்வரங்கள் (முதல் இரண்டு வர்க்கங்கள்) ஶிரஸ்ஸிலேயே ந்யஸித்தல் வேண்டும். அதற்கும் பின்னர் (1) வலது தோள்· முழங்கை, மணிக்கட்டு, விரல்களின்மூலம், விரல்களின் நுனி; (2) இடதுதோள், முழங்கை, மணிக்கட்டு, விரல்களின் மூலம், விரல்களின் நுனி

(3) வலது தொடை மூலம், முழங்கால், கணுக்கால், கால் விரல்களின் மூலம், விரல்களின் நுனி; (4) இடது தொடை மூலம். முழங்கால், கணுக்கால், கால் விரல் களின் மூலம், விரல்களின் நுனி, (5) வயிறு, (6) வலது புறம், இடதுபுறம், (7) நாபி, (8) ப்ருஷ்டம் ஆகிய எட்டு ஸ்தானங்களிலும் எட்டு வர்க்கங்களை ந்யஸித்துப் பின் ஶ-ஷ-ஸ என்னும் மூன்றெழுத்துக்களை முறையே மூலாதாரம், ஹ்ருதயம், மூர்த்தா(ஶிரஸ்) என்னும் மூன்றி டங்களிலும் ந்யாஸம் செய்தல் வேண்டும்.

பூதலிபிகளின் வரலாறு கூறப்படுகின்றது:—

வர்க்கங்களின் தேவதைகள்

| | | | |
|---|---|---|---|
| 1-வது | வர்க்கம்— | 5 குற்றெழுத்துக்கள் | .... ப்ரம்ஹா |
| 2-வது | ,, | — 4 நெட்டெழுத்துக்கள் | .... விஷ்ணு |
| 3-வது | ,, | — ஹ0-ய0-ர0-வ0-ல0 | .... ருத்ரன் |
| 4-வது | ,, | — க0-ச0-ட0-த0-ப0 | .... வ்ரஜேஶன் |
| 5-வது | ,, | — க²0-ச²0-ட²0-த²0-ப²0 | .... இந்த்ரன் |
| 6-வது | ,, | — க³0-ஜ0,ட³0-த³0-ப³0 | .... யமன் |
| 7-வது | ,, | — க⁴0-ஜ²0-ட⁴0-த⁴0-ப⁴0 | .... வருணன் |
| 8-வது | ,, | — ங0-ஞ0-ண0-ந0-ம0 | .... ஸோமன் |
| 9-வது | ,, | — ஶ0-ஷ0-ஸ0 | ... ஶக்தி த்ரயங்கள். |

ஆக 42 எழுத்துக்கள்.

இங்ஙனம் பூதலிபியில் ஸ்ருஷ்டி ந்யாஸம் செய்து இதற்கு விபரீதமாக ஸம்ஹார ந்யாஸமும் செய்தல் வேண்டும். இந்தப் பூதலிபிகளுடன் பிந்துவேயன்றி விஸர்க்கங்களும் (:) விஸர்க்க பிந்துக்களும் (.:) கூடச் சேர்த்து ந்யஸித்தல் வேண்டும்.

குறிப்பு:— இந்த ந்யாஸத்தில் இந்த மூல க்ரந்தத் தின்படி அநேகபிழைகள் இருக்கின்றன. அப் பிழைகளை அஸல் ப்ரம்ஹாண்டபுராணத்தைக் கொண்டும், மாத்ருகா

சக்ர விவேகம், சாரதா திலகம் முதலிய ப்ரமாண நூல்களைக் கொண்டும் திருத்தி மேலே கூறப்பட்டிருப்பது அறியத்தக்கது.

இதற்குப்பின், ரத்யாதி ந்யாஸம் செய்யத்தக்கது.

அறிவுள்ள உபாஸகன் த்யான பூர்வகமாய் ரத்யாதி ந்யாஸத்தை ஆஶ்ரித்தல் வேண்டும்.

காமாதி மன்மதர்களின் த்யானம் வருமாறு:— செம்பரத்தம் புஷ்பத்தின் நிறத்திற்கொப்பான திருமேனியையுடையவர்களும், குங்குமப்பூ முதலிய சிவந்த வாஸனை கலவையால் பூசப்பட்ட சரீரத்தோடு கூடியவர்களும் இடது துடையில் ஶக்தி(ரதீதேவி)களை யுடையவர்களும் கரும்புவில், ஐந்து புஷ்ப பாணங்கள் இவைகளைத் தரித்திருப்பவர்களுமான காமன், காமதன், காந்தன் முதலிய ஐம்பத்தோரு மன்மதர்களை த்யானம் செய்து, பிறகு ரதி காமன் முதலிய மன்மத தம்பதிகளின் ந்யாஸம் செயதல் வேண்டும்:

| | | | |
|---|---|---|---|
| 1. | காமன்-ரதி | 15. | ராத்ரிநாதன்-தரா |
| 2. | காமதன்-ப்ரீதி | 16. | ரமாகாந்தன்-ரமா |
| 3. | காந்தன்-காமினீ | 17. | ரமமாணன்-நிஶா |
| 4. | காந்திமான்-மோஹினீ | 18. | கல்யாணன்-மோஹினீ |
| 5. | காமகன்-கலஹப்ரியா. | 19. | நந்தகன்-உத்தமா |
| 6. | காமசாரன்-விலாஸினீ | 20 | நந்தீ-ஸுரா |
| 7. | காமி-கல்பலதா | 21. | நந்தனன்-உத்தமா |
| 8. | காமுகன்-ஶ்யாமவர்ணு | 22. | நந்தயிதா-ஸுலாவண்யா |
| 9. | காமவர்த்தனன்-விஸ்மயா | 23. | பஞ்சபாணன்-பாலதிநீ |
| 10. | ராமன்-விஸ்மயாக்ஷி | 24. | ரதிஸகன்-கலஹப்ரியா |
| 11. | ரமன்-லோலிஹனு | 25. | புஷ்பதன்வன்-ஏகாக்ஷி |
| 12. | ரமணன்-ரதி | 26. | மஹாதநு:-ஸுமுகா |
| 13. | ரதிநாதன்-திக்வக்த்ரா | 27. | ப்ராமணன்-நீலி |
| 14. | ரதிப்ரியன்-குப்ஜிகா | 28. | ப்ரமணன்-ஜடிலி |

29. ப்ரமமாணன்-ஶ்ரிகா
30. ப்ரமன்-முக்த்தா
31. ப்ராமண-முக்த்தா
32. ப்ராமகன்-ரமா
33. ப்ருங்கன்-ப்ராமிகை
34. ப்ராந்தசாரன்-லோசனு
35 ப்ரமாவஹன்-தீர்க்க ஜிஹ்விகை
36. மோஹனன்-ரதி
37. மோஹனன்-பலாஶாக்ஷி
38. மோஹன்-க்ருஹிணீ
39. மோஹதரன்-விகடேஶ்ரீ
40. வர்த்தனன்-தரா
41. மதனன்-அநூபமா
42. மன்மதன்-மலயா
43. மாதங்கன்-ஸலாதிநீ
44. ப்ருங்காயகன்விஶ்வதோமுகீ
47. காயகன்-நந்திநீ
46- கீதிஜன்-அநாமா
47. நர்த்தகன்-காளீ
48. க்ஷ்வேல்லகன்-காலகர்நாடீ
49. கந்தர்ப்போன்மத்தன்-நர்த்தகஶ்யாமளா
50. விலாஸன்-ஜஸை
51- காமவர்த்தனன்—உன்மத்தை

இங்ஙனம் கூறப்பட்ட ஐம்பத்தோரு மன்மத தம்பதிகளை அகாரம் முதல் க்ஷகாரம் வரையில் ஐம்பத்தோரு மாத்ருகைகளோடு சேர்த்து அந்த அந்த மாத்ருகா அக்ஷரத்திற்குரிய ஸ்தானங்களில் ந்யாஸம் செய்யவும். இதற்கு ரத்யாதி ந்யாஸம் அல்லது காமாதி ந்யாஸம் என்று பெயர்.

இதற்குப் பிறகு ஶ்ரீகண்டாதி ந்யாஸம் செய்ய வேண்டியது. அந்த ந்யாஸத்தின் த்யானம் வருமாறு:—

ஸிந்தூரம், தங்கம் இவைகளைப்போன்ற நிறமுடைய இரண்டு பாகங்களையுடையவரும், பாஶம், அபயம், அக்ஷமாலை, வரதம் இவைகளைத் தரித்த கைகளை யுடையவரும், ஒருபக்கம் பார்வதியாகிய ஶக்தி சின்னங்களையும், மற்றொருபக்கம் புருஷரூபஶிவ சின்னங்களையும் உடைய அர்த்தநாரீஶ்வரரை மனத்தில் த்யானித்து ஏகாக்ர சித்தனாய் இந்த ந்யாஸம் செய்தல் வேண்டும்.

1. ஶ்ரீகண்டன்-பூர்ணோதரீ
2. அநந்தன்-விரஜா
3. ஸூக்ஷ்மேசன்-ஶால்மலீ
4. த்ரிமூர்த்தி-லோலாக்ஷீ

5. அமரேஶ்வரன்-வர்த்து லாக்ஷீ
6. அர்க்கீஶன்-தீர்க்ககோணு
7. பாரபூதி-ஸுதீர்க்கமுகி
8. அதிதீசன்-கோமுகீ
9. ஸ்தாணு-தீர்க்கஜிஹ்விகா
10, ஹரன்-குஞ்சரோதரி
11, சண்டீஶன்-ஊர்த்வகேஶி
12. பௌதிகன்-விகடமுகி
13. ஸத்யோஜாதன்-ஜ்வாலா முகி
14. அநுக்ரஹேஶ்வரன்-உலகாமுகி
15- அக்ரூரன்-க்ரியாமுகி
16. மஹாஸேனன்-வித்யாமுகி
17. க்ரோதீஶன்-மஹாகாளி
18. சண்டீஶன்-ஸரஸ்வதி
19. பஞ்சாந்தகன்-ஸர்வஸித்தி
20. ஶிவோத்தமன்-கௌரி
21. ஏகருத்ரன்-த்ரைலோக்ய வித்யா
22. கூர்மேஶன்-மந்த்ரார்த்த ஶக்தி
23. ஏகநேத்ரன்-பூதமாதா
24. சதுராநநன்-லம்போதரீ
25. அஜேஶ்வரன்-த்ராவிணீ
26. ஸர்வஸோமேஶ்வரன்-நாகரீ
27. லாங்கலீஶன்-கேசரீ
28. தாருகேஶன்-மஞ்சரீ
29. அர்த்தநாரீஶ்வரன்-ரூபிணீ
30. உமாகாந்தன்-விரிணீ
31. ஆஷாடீ-கோடரீ
32. தண்டீ-பூதனு
33. அத்ரீஶன்-பத்ரகாளீ
34. மீனேஶன்-யோகினீ
35. மேஷேஶன்-ஶங்கினீ
36. லோஹிதன்-கர்ஜினீ
37. ஶிகீ-காளராத்ரீ
38. சகலண்டன்-கபர்த்தினீ
39, த்விதண்டன்-வஜ்ரா
40. மஹாகாளன்-ஜயா
41. வாலீஶன்-ஸுமுகேஸ்வரி
42. புஜகேஶன்-ரேவதீ
43. பிநாகீஶன்-மாதவீ
44. கட்கீஶன்-வாருணீ
45. பகேஶன்-வாயவீ
46. ஶ்வேதன்-ரக்ஷோவதாரிணி
47. அப்ரேஶன்-ஸஹஜா
48. நகுலீஶன்-லக்ஷ்மீ
49. ஶிவன்-வ்யாபினீ
50. ஸம்வர்த்தகன்-மாயா

இங்ஙனம் ஶ்ரீகண்ட பூர்ணோதரீ முதலாக ஐம்பது வர்ண ஶக்திகளோடு சேர்த்து மாத்ருகா ந்யாஸப்படி அந்தந்த இடங்களில் ந்யாஸம் செய்தல் வேண்டும். பிறகு ஷோடா ந்யாஸம் செய்யவேண்டும்.

## ஷோடா ந்யாஸம்.

ஸ்ரீகண்டந்யாஸம் செய்தபிறகு, பாலா பீஜங்களை இரண்டு தடவை யுச்சரித்து, அங்கந்யாஸம் செய்து பாலையின் மூன்று பீஜாக்ஷரங்களைச் சேர்த்துக்கொண்டு ஷோடாந்யாஸம் செய்தல் வேண்டும். இந்த ந்யாஸத்தின் பயன், உபாஸகன் தேவதைத் தன்மையை யடைவதே ஆகும். ஷோடாந்யாஸ மென்பது ஆறுவிதமான ந்யாஸங்களாகும். அவை கணேஶ, க்ரஹ, நக்ஷத்ர, யோகினீ, ராஶி பீடங்களென்பனவாகும். அவற்றில் முதலாவ-தாகும் கணேஶ ந்யாஸம் கூறப்படுகின்றது.

த்யானம்:— உதய காலத்திய பாலஸூர்யனுக்கொப்பான நிறத்தோடும், யானை முகத்தோடும், மூன்று நேத்ரங்களோடும், பாஶம், அங்குஶம், வரதம், அபயம் இவை விளங்கும் ஹஸ்தங்களோடும் ஶக்திகளோடும் கூடி விளங்கும் விக்நேஶ்வரர் முதலிய கணேஶர்களை நமஸ்கரிக்கின்றேன். இங்ஙனம் த்யானம் செய்து ந்யாஸத்தைத் தொடங்கவேண்டும்.

| கணேசர்கள்-சக்திகள். | கணேசர்கள்-சக்திகள் |
|---|---|
| 1. விக்நேசன்—ஸ்ரீ | 15. சங்குகர்ணன்—நந்தா |
| 2. விக்னராஜன்—ஹ்ரீ | 16. வ்ருஷத்துவஜன்-ஸுயசஸ் |
| 3. விநாயகன்—புஷ்டி | 17. கணநாதன்—காமரூபிணி |
| 4. சிவோத்தமன்—சாந்தி | 18. கஜேந்த்ரன்—உக்ரா |
| 5. விக்னஹ்ருத்—துஷ்டி | 29. சூர்ப்பகர்ணன்—தேஜோவதி |
| 6. விக்னஹந்தா—சாச்வதி | 20. த்ரிலோசனன்—ஸந்த்யா |
| 7. விக்னராட்—ரதி | 21. லம்போதரன்—விக்னேசானீ |
| 8. கணநாயகன்—மேதா | 22. மஹாநாதன்—ஸ்வரூபிணி |
| 9. ஏகதந்தன்-ரமா | 23' சதுர்மூர்த்தி-காமரதா |
| 10 த்விதந்தன்—காந்தி | 24. ஸதாசிவன்—மதஜிஹ்வா |
| 11. கஜவக்த்ரன்—காமினி | 25. ஆமோதன்—விகடா |
| 12. நிரஞ்ஜனன்-மோஹினி | 26. துர்மதன்—கூர்ணிதானனு |
| 13. கபர்த்வான்-தீவ்ரா | 27. ஸுமுகன்-பூதி |
| 14. தீர்க்கவான்—ஜ்வாலினீ | 28. ப்ரமோதன்—பூமி |

29. ஏகபாதன்—த்விரம்பா
30. த்விபாதன்—உமா
31 சூரன்-மாரூபி
32 வீரன்—மகரத்வஜா
33 ஷண்முகன்—விகர்ணு
34 வரதன்-ப்ருகுடீ
35. வாமதேவன்—லஜ்ஜா
36. வக்ரதுண்டன்-தீர்க்ககோணு
37. த்விதண்டன்-தனுர்த்தரீ
38. சேனுநீ-யாமினீ
39. க்ராமணீ-ராத்திரீ
40. மத்தன்-சந்த்ரகாந்தா
41. விமத்தன்-சசிப்ரபா
42. மத்தவாஹனன்-லோலாக்ஷீ
43. ஜடீ—சபலா
44. முண்டீ-ருஜவீ
45. கட்கீ—துர்ம்பகா
46. வரேண்யன்-சுபகா
47. வ்ருஷகேதனன்-சிவா
48. பக்ஷ்யப்ரியன்-துர்க்கா
49. கணேசன்-குஹப்ரியா
50- மேகநாதன்-காளீ
51. கணேசன்-காலஜிஹ்வா

இம்மாதிரி விக்னேஶர் முதலான ஐம்பத்தோரு கணபதிகளை அவரவர்களின் ஶக்திகளோடுகூட அகாரம் முதல் க்ஷகாரம் வரையில் ஐம்பத்தோரு மாத்ருகாஸ்தானங்களில் ந்யாஸம் செய்யவேண்டும். ந்யாஸம் செய்யும்போது ஒவ்வொன்றிற்கும் ஆதியில் பாலாபீஜங்களைச் சேர்த்தே செய்யவேண்டுமென்று முன் கூறப்பட்டு உள்ளதை மறக்கக்கூடாது.

இதற்குப் பிறகு க்ருஹந்யாஸம் சொல்லப்படுகின்றது. த்யானம்—வரதம் அபயம் இவைகளைக் கைகளில் தரித்துக்கொண்டும், ஶக்திகளால் ஆலிங்கனம் செய்யப் படுகிறவர்களாயுள்ள ஆதித்யாதி நவக்ரஹங்களைச் செவ்வனே த்யானம் செய்யவேண்டும்.

இங்ஙனம் த்யானஞ்செய்து, ஸூர்யனைக் குங்கும வர்ணமாயும், சந்த்ரனைப் பால் வர்ணமாயும், அங்காரகனை ரக்த வர்ணமாயும், புதனை மல்லிகைப்பூ நிறமாயும், குருவைத் தங்க வர்ணமாயும், ஶுக்ரனை சங்க வர்ணமாயும், ஶனியை மேகவர்ணமாயும், ராகுவை புகை (தூம்ர) வர்ணமாயும், கேதுவை இருள் நிறமாயும்

த்யானம் செய்யவேண்டியது. ஸூர்யனை ஹ்ருதயத்தின் கீழ்பாகத்திலும், சந்த்ரனை ஶிரஸ்ஸிலும் (மற்றொருபாடம் புருவமத்தியிலும்), குஜனை இரண்டு நயனங்களிலும், ஸுக்ரனை ஹ்ருதயத்திலும், புதனை ஹ்ருதயமத்தியிலும் (காதுகளின் கீழ்), குருவைக் கழுத்திலும், ஶனியை நாபியிலும், ராகுவை முகத்திலும், கேதுவை இரண்டு பாதங்களிலும் ந்யாஸம் செய்யவேண்டும். இதுதான் க்ரஹ ந்யாஸத்தின் க்ரமமாகும்.

பிறகு நக்ஷத்ர ந்யாஸம் கூறப்படுகின்றது. க்ரஹ ந்யாஸம் செய்த பின்பேதான் நக்ஷத்ர ந்யாஸம் செய்தல் வேண்டும். த்யானம்—அதிக காந்தியுடன் கூடின காலாக்னிக்குச் சமமான நிறத்தோடு கூடினவர்களாயும், வரதாபயங்களைத் தரித்தவர்களாயும், எல்லா ஆபரணங்களையும் அணிந்தவர்களாயும் இருக்கின்ற நக்ஷத்ரங்களை த்யானஞ்செய்து ந்யாஸம் தொடங்கவேண்டும்.

அஶ்விநீ—நெற்றித்தடம்
பரணி, க்ருத்திகை—இரண்டு கண்கள்
ரோகிணி, ம்ருகஶீர்ஷம்—இரண்டு காதுகள்
திருவாதிரை, புனர்பூசம்—இரு நாஶிகள்
பூசம்—கண்டம்
ஆயில்யம், மகம்—இரு தோள்
பூரம்—ப்ருஷ்டம்
உத்ரம், ஹஸ்தம்—இரு கூர்ப்பரங்கள் (முழங்கை)
சித்ரை, ஸ்வாதி—இரு மணிக்கட்டுகள்
விஶாகம், அநுஷம்—இரு கரங்கள்
கேட்டை—நாபி
மூலம்—இடுப்பு
பூராடம், உத்ராடம்—இரு துடைகள்
ஶ்ரவணம், அவிட்டம்—இரு முழங்கால்கள்
ஶதயம், பூரட்டாதி-இருமுழங்கால்களின் அடிப்பாகம்
உத்ரட்டாதி, ரேவதி—இரு பாதங்கள்

இங்ஙனம் நக்ஷத்ர ந்யாஸம் செய்தபிறகு யோகிநீ ந்யாஸம் செய்தல்வேண்டும். விஶுத்தி, ஹ்ருதயம், நாபி, ஸ்வாதிஷ்டானம், மூலாதாரம், புருவமத்தி, மூர்த்தா (ஶிரஸ்) இவைகளில் க்ரமமாக யோகினி ந்யாஸம் செய்தல் வேண்டும்,

டாகினீ என்னும் யோகிநி கழுத்தில் அ முதல் அ: வரையில் 16 ஸ்வரங்கள் கூடிய பதினறு தளங்களோடு விளங்கும் விஶுத்தி சக்ரத்தில் அம்ருதா முதலான 16 ஶக்திகளால் சூழப்பட்டு த்வக் தாதுவுக்கு அதிபதியாய் இருக்கின்றனள்.

ராகினீ என்னும் யோகிநி ஹ்ருதயத்தில் க முதல் ட$^{3}$ (ο)வரையில் பன்னிரண்டு அக்ஷரங்கள்சேர்ந்த பன்னிரண்டு தளங்களோடு கூடின அநாஹத சக்ரத்தில் காளராத்ரி முதல் பன்னிரண்டு ஶக்திகளால் சூழப்பட்டு ரக்த தாதுவுக்கு அதிபதியாய் விளங்குகிருள்.

லாகிநீ என்னும் யோகிநி நாபீ தேசத்தில் ட என்பது முதல் ப$^{2}$ வரையில் பத்து அக்ஷரங்கள் சேர்ந்த பத்துத் தளங்களோடு கூடின மணிபூரகத்தில் டாமரீ முதல் பத்து ஶக்திகளால் சூழப்பட்டு மாமிச தாதுவுக்கு அதிபதியாய் இருக்கின்ருள்.

காகிநீ என்னும் யோகிநி லிங்கஸ்தானத்தில் ப$^{3}$ முதல் ல வரையில் ஆறு அக்ஷரங்கள் சேர்ந்த ஆறு தளங்களோடு கூடிய ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் பந்திநீ முதலான ஆறு ஶக்திகளால் சூழப்பட்டு மேதஸ் என்னும் தாதுவுக்கு அதிபதியாய் இருக்கின்ருள்.

ஸாகிநீ என்னும் யோகிநி குதத்திற்கும் லிங்கத்திற்கும் மத்தியில் வ முதல் ஸ வரையில் நான்கு அக்ஷரங்கள் சேர்ந்த நான்கு இதழ்களோடு கூடின மூலாதாரத்தில் வரதா முதல்நான்கு ஶக்திகள் புடைசூழ அஸ்தியென்னும் தாதுவுக்கும் அதிபதியாய் விளங்குகின்ருள்.

ஹாகிநீ என்னும் யோகிநி புருவமத்தியில் ஹ, க்ஷ என்னும் இரண்டு அக்ஷரங்கள் சேர்ந்த இரண்டு தளங்களோடு கூடின ஆக்ஞை என்னும் சக்ரத்தில் ஹவஸ்வதீ க்ஷமாவதீ என்னும் இரு ஶக்திகளுடன் மஜ்ஜா தாதுவுக்கு அதிபதியாய் விளங்குகின்றாள்.

யாகிநீ என்னும் யோகிநி ஶிரஸ்ஸில் இருக்கின்ற ஸஹஸ்ரார பத்மத்தில் அ முதல் க்ஷ வரையில் ஐம்பது அக்ஷரங்களுடன் சேர்ந்த ஆயிரம் இதழ்களுடன் கூடின பத்மத்தில் விளங்குகின்றாள். இந்த ஏழு யோகிநிகளின் விரிவான விஷயமானது ஸ்ரீ லலிதா ஶஹஸ்ரநாமத்தில் நன்கு அறியத்தக்கது.

மேற்கூறிய யோகிநிகளை, ஒவ்வொருவருக்கும் தனித் தனியாகக் கூறப்பட்ட ஷோடஶதளம் முதலான பத்மங்களுடைய கர்ணிகா மத்யத்திலும், அவரவர்களுடைய வர்ண ஶக்திகளைத் தள அக்ரங்களிலும் ந்யாஸம் செய்ய வேண்டும்.

யாகிநீ என்னும் யோகிநியை ஸஹஸ்ரதளபத்மத்தில் அகாராதி ஐம்பதுவர்ண ஶக்திகளான அம்ருதாதி ஶக்திகளுடன் ந்யாஸம் செய்தல்வேண்டும். அம்ருதாதி ஶக்திகளுடைய பெயர்கள் கூறப்படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| 1. அம்ருதா | 5. உமா | 9. லுகாரா | 13. ஓங்காரீ |
| 2. ஆநந்திநீ | 6. ஊர்த்வகேஶி | 10. லூகாரா | 14. ஔஷதீ |
| 3. இந்த்ராணி | 7. ருத்திதா | 11. ஏகபதா | 15. அம்பிகா |
| 4. ஈஶாநீ | 8. ரூஷா | 12. ஐஶ்வர்யகரீ | 16. அக்ஷரா |

என்னும் 16 ஸ்வர ஶக்திகளுடன் கூடினவள் டாகிநீ.

| | | |
|---|---|---|
| 1. காளராத்ரீ | 5. ஙார்ணு | 9. ஜங்காரிணீ |
| 2. கேசரீ (கண்டிதா) | 6. சாமுண்டா | 10. ஞானரூபீ |
| 3. காயத்ரீ | 7. ச²த்ரிகா | 11. டங்கஹஸ்தா |
| 4. கண்டாதாரிணீ | 8. ஜயா | 12. ட²ங்காரிணீ |

என்னும் பன்னிரண்டு ஶக்திகளுடன் கூடினவள் ராகிநீ.

| | | |
|---|---|---|
| 1. ட³ாமரீ | 4. தாமஸீ | 7. த⁴ாத்ரீ |
| 2. ட⁴ங்காரிணீ | 5. த²ங்காரிணீ | 8. நாதிநீ |
| 3. ஞமினீ | 6. தயா | 9. பார்வதீ |
| | | 10. பட்காரிணீ |

என்னும் பத்து ஶக்திகளோடு சேர்ந்தவள் லாகிநீ.

| | | |
|---|---|---|
| 1. பந்தி⁴நீ | 3. மஜ்ஜா | 5. ராமா |
| 2. ப⁴த்ரா | 4. யஶஸ்விநீ | 6. லாமிநீ |

என்னும் ஆறு ஶக்திகளோடு கூடினவள் காகிநீ.

1. வரதா 2. ஸ்ரீ 3. ஷண்டா 4. ஸரஸ்வதி என்னும் நான்கு ஶக்திகளுடன் விளங்குபவள் ஸாகிநீ.

1. ஹம்ஸவதி 2. க்ஷமாவதி என்னும் இரண்டு ஶக்திகளுடன் விளங்குபவள் ஹாகிநீ.

ஏழாவது யோகினியான யாகிநீக்கு எல்லா அக்ஷரங்களும் சேர்ந்ததாகையினுல் அம்ருதாதி எல்லா ஶக்திகளும் சேரும்.

இதன் பிறகு ராசிந்யாஸம் செய்யவேண்டும். இந்த ந்யாஸத்தைத் தக்ஷிணபாகத்தில் ஆரம்பித்து வாமபாகத்தில் முடிக்கவேண்டியது.

மேஷம்-தக்ஷிணபாகம்: துலாம்-ஶிரோ வாமபாகம்
வ்ருஷபம்-லிங்கதக்ஷிணபாகம் : வ்ருச்சிகம்—இடதுகரம்
மிதுனம்-குக்ஷிதக்ஷிணபாகம்: தனுஸு ஹ்ருதயவாமபாகம்
கடகம்—ஹ்ருதயதக்ஷிணபாகம் : மகரம்—குக்ஷி வாமபாகம்
ஸிம்ஹம்—தக்ஷிணகரம் : கும்பம்—லிங்க வாமபாகம்
கன்னி-ஶிரோ தக்ஷிணபாகம் : மீனம்—இடது பாகம்

இங்ஙனம் க்ரமமாக ந்யாஸம் செய்யவேண்டியது. இதன் பின் பீடந்யாஸம். ஐம்பத்தோரு பீடங்களை மாத்ருகாக்ஷரங்களுக்குரிய ஸ்தானங்களில் ந்யாஸம் செய்தல்வேண்டும்.

1. காமரூபம்
2. வாரணஸி
3. நேபாளம்
4. பௌண்ட்ரவர்த்தனம்
5. வரஸ்திரம்
6. கான்யகுப்ஜம்
7 பூர்ணசைலம்
8 அர்ப்புதம்
9 ஆம்ராதகேச்வரம்
10 ஏகாம்ரம்
11 த்ரிஸ்ரோதஸ்
12 காமகோடி
13 கைலாஸம்
14 ப்ருகுநகரம்
15 கேதாரம்
16 சந்த்ரயுக்புரம்
17 ஸ்ரீபீடம்
18 ஏகவீரம்
19 ஜாலந்த்ரம்
20 மாளவம்
21 குலான்னம்
22 தேவிகோடம்
23 கோகர்ணம்
24 மாருதேச்வரம்
25 அட்டஹாஸம்
26 விரஜம்
27 ராஜகேஹம்
28 மஹாபதம்
29 கோலாபுரம்
30 ஏலாபுரம்
31 காளேச்வரம்
32 ஜயந்திபுரம்
33 உஜ்ஜயிநீ
34 சித்ரா
35 க்ஷீரகம்
36 அஸ்திணபுரம்
37 உட்டீசம்
38 ப்ரயாகை
39 ஷஷ்டிமாயாபுரம்
40 கைரீசம்
41 மலயகிரி
42 ஸ்ரீ சைலம்
43 மேரு
44 கிரிவரம்
45 மாஹேந்த்ரம்
46 வாமனகிரி
47 ஹிரண்யபுரம்
48 மஹாலக்ஷ்மீபுரம்
49 ஒட்யாணபுரம்
50 சாயாபுரம்
51 சத்ரபுரம்.

இங்ஙனம் ஐம்பத்தோரு பீடங்களென்று மஹான்கள் கூறுகின்றார்கள். மேற்கூறிய ந்யாஸங்களில், சில, வர்ண க்ரமங்களோடு கூடினவை. அதாவது ஐம்பத்தோரக்ஷரங்களுக்கும் க்ரமமாய்க் கூடினவை.

காமரதி ந்யாஸம், ஸ்ரீகண்ட ந்யாஸம், கணேசாதி பீட ந்யாஸம் முதலானவைகள் லிபிக்ரமங்களோடு

கூடினவைகள். அம்மாதிரியுள்ளதை அந்தந்தரீதியாகவே ந்யாஸம் செய்யவேண்டும். பரமேஶ்வரனுல் கூறப்பட்ட விதமாக ஷோடா ந்யாஸத்தை நான் சொன்னேன். இவ் விதம் அங்கங்களில் ந்யாஸம் செய்யப்பட்டவனுக்கும் தேவதைக்கும் பேதமில்லாத தன்மை ஏற்படுகின்றது.

ஷோடா ந்யாஸம் செய்த பிறகு ஶ்ரீசக்ர ந்யாஸத்தைச் செய்யவேண்டும். பூபுரம் முதல் ஸர்வாநந்தமய சக்ரம் வரைக்குமுள்ள ஒன்பது சக்ரங்களின் பீஜமந்த்ரங்களை முதலில் ஶரீரத்தில் வ்யாபகம் செய்துகொள்ளல் வேண்டும். பின்னர், சக்ரேஶ்வரீ மந்த்ரத்தையும், சக்ர ஸமர்ப்பண மந்த்ரத்தையும் ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்தல் வேண்டும். ஆரம்பத்தில் கணபதியை வலது துடையிலும், க்ஷேத்ர பாலனை வலது தோளிலும், யோகினியை இடது தோளிலும், வடுகனை இடது துடையிலும் ந்யாஸம் செய்யவேண்டும். பிறகு இந்த்ராதி திக்பாலகர்களைக் கூறப்படும் இடங்களில் ந்யாஸம் செய்ய வேண்டும்.

1 இந்த்ரன் — இரண்டு கால்களின் பெருவிரல்களின் நுனிகள்.
2 அக்னி — வலது முழங்கால்
3 யமன் — வலது பக்கம்
4 நிருருதி — வலது தோள்
5 வருணன் — மூர்த்தா (ஶிரஸ்)
6 வாயு — முகம்
7 குபேரன் — இடது பக்கம்
8 ஈஶானன் — இடது முழங்கால்
9 ப்ரம்ஹா — மூர்த்தா (ஶிரஸ்)
10 விஷ்ணு — மூலாதாரம்.

பிறகு த்ரைலோக்யமோஹனம் என்னும் முதல் சக்ரத்தில் முதல் ரேகையில் இருக்கும் பத்து ஸித்தி தேவிகளை மேற் கூறப்படும் பத்துஸ்தானங்களில் ந்யாஸம் செய்யவேண்டும்.

1 அணிமாஸித்தி — வலது தோள்
2 மஹிமாஸித்தி — ப்ருஷ்டம்
3 லகிமாஸித்தி — வலதுகை
4 ஈஶித்வஸித்தி — ஸ்பிக்கு
5 வஶித்வஸித்தி — ப்ரபதம்
6 ப்ராகாம்யஸித்தி — ஸ்பிக்கு
7 ப்ராப்திஸித்தி — புறங்கை
8 இச்சாஸித்தி — அம்ஸ ப்ருஷ்டம்
9 அர்த்தஸித்தி — மூர்த்தா
10 மோக்ஷஸித்தி — இரண்டு கால்கள்.

இவ்விதம் அணிமாதி ஸித்தி தேவதைகளை ந்யாஸஞ் செய்த பின்பு இரண்டாவது ரேகையிலிருக்கும் ப்ராம்ஹீ முதலான எட்டு மாத்ருக்களை மேற்கூறப்படுகின்ற இடங்களில் ந்யாஸம் செய்யவேண்டும்.

1 ப்ராம்ஹீ — இரண்டு கால்களின் பெருவிரல்கள்
2 மாஹேஶ்வரீ — வலது பக்கம்
3 கௌமாரீ — மூர்த்தா
4 வைஷ்ணவீ — இடது பக்கம்
5 வாராஹீ — இடது முழங்கால்
6 இந்த்ராணீ — வலது முழங்கால்
7 சாமுண்டா — வலது தோள்
8 மஹாலக்ஷ்மீ — இடது தோள்.

இங்ஙனம் எட்டு மாத்ருக்களை ந்யாஸம் செய்த பிறகு மூன்றாவது ரேகையிலிருக்கும் பத்து முத்ராதேவிகளை அடியில் கண்டவாறு அந்த அந்த இடங்களில் ந்யாஸம் செய்தல் வேண்டும்.

1 ஸர்வஸம்க்ஷோபிணீ — இரண்டு கால்களின் பெரு விரல்கள்
2 ஸர்வவித்ராவிணீ — வலது பார்ஶ்வம்
3 ஸர்வாகர்ஷிணீ — மூர்த்தா

| | | |
|---|---|---|
| 4 | ஸர்வவஶ்யகரணீ | — இடது பார்ஶ்வம் |
| 5 | ஸர்வப்ரியகாரிணீ | — இடது முழங்கால் |
| 6 | ஸர்வமஹாங்குஶா | — வலது முழங்கால் |
| 7 | ஸர்வகேசரீ | — வலது தோள் |
| 8 | ஸர்வத்ரிகண்டா | — இடது தோள் |
| 9 | ஸர்வபீஜா | — மூர்த்தா |
| 10 | ஸர்வயோநி | — இரண்டு பாதங்கள். |

இவ்விதமாக ந்யஸித்து சக்ரேஶ்வரியையும், த்ரைலோக்ய மோஹனம் என்னும் சக்ரத்தையும் ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்து ஶரீரத்தில் வ்யாபகம் செய்ய வேண்டும்.

குறிப்பு :— இங்கே ஸர்வோன்மாதிநீ முத்ரைக்குப் பதிலாக ஸர்வப்ரியகாரிணீ என்னும் நாமம் கூறப்பட்டுள்ளதோடு பத்தாவதாக, இதர நூல்களில் கூறப்படும் ஸர்வ த்ரிகண்டா முத்ரையை இதில் எட்டாவதாகக் கூறப்பட்டுள்ளது கவனிக்கத் தக்கது.

இரண்டாவது ஆவரணமான பதினறு தளங்களுடன் கூடின ஸர்வாஶாபரிபூரக சக்ரத்தில் இருக்கும் காமாகர்ஷிணீ முதலான பதினறு தேவதைகளைக் கூறப்படுகின்ற ஸ்தானங்களில் ந்யாஸம் செய்யவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| 1 | காமாகர்ஷிணீ | — | வலது காது |
| 2 | புத்யாகர்ஷிணீ | — | ,, ப்ருஷ்டம் |
| 3 | அஹங்காராகர்ஷிணீ | — | ,, தோள் |
| 4 | ஶப்தாகர்ஷிணீ | — | ,, முழங்கை |
| 5 | ஸ்பர்ஶாகர்ஷிணீ | — | ,, உள்ளங்கை |
| 6 | ரூபாகர்ஷிணீ | — | ,, ஸ்பிக்கு(இடுப்பு) |
| 7 | ரஸாகர்ஷிணீ | — | ,, முழங்கால் |
| 8 | கந்தாகர்ஷிணீ | — | ,, கணுக்கால் |
| 9 | சித்தாகர்ஷிணீ | — | இடது ,, |
| 10 | தைர்யாகர்ஷிணீ | — | இடது முழங்கால் |

| | | | |
|---|---|---|---|
| 11 | ஸ்ம்ருத்யா கர்ஷிணீ | — ,, | ஸ்பிக்கு |
| 12 | நாமா கர்ஷிணீ | — ,, | உள்ளங்கை |
| 13 | பீஜா கர்ஷிணீ | — ,, | முழங்கை |
| 14 | ஆத்மா கர்ஷிணீ | — ,, | தோள் |
| 15 | அம்ருதா கர்ஷிணீ | — ,, | ப்ருஷ்டம் |
| 16 | ஶரீரா கர்ஷிணீ | — ,, | காது. |

பிறகு சக்ரேஶ்வரியையும், சக்கரத்தையும் ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்து ஶரீரத்தில் வ்யாபகம் செய்ய வேண்டியது.

மூன்ருவது ஆவரணமான ஸர்வஸம்க்ஷோபணம் என்னும் எட்டுத் தளங்களுடன் கூடின சக்ரத்திலிருக்கும் அநங்ககுஸுமா முதலான எட்டுத் தேவிகளைக் கூறப் போகும் இடங்களில் ந்யாஸம் செய்யவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| 1 | அநங்ககுஸுமா | — வலது(ஶங்கம்) | நெற்றிப் பொட்டு |
| 2 | அநங்கமேகலா | — ,, | தோளின் சந்தி |
| 3 | அநங்கமதநா | — ,, | துடை |
| 4 | அநங்கமதநாதுரா | — ,, | கணுக்கால் |
| 5 | அநங்கரேகா | — இடது | ,, |
| 6 | அநங்கவேகா | — ,, | துடை |
| 7 | அநங்காங்குஶா | — ,, | தோளின் சந்தி |
| 8 | அநங்கமாலிநீ | — ,, | ஶங்கம். |

இங்ஙனம் அந்தந்த ஸ்தானங்களில் ந்யாஸஞ்செய்து, சக்ரேஶ்வரியையும், சக்ரத்தையும் ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்து ஶரீரத்தில் வ்யாபகம் செய்தல் வேண்டும்.

பிறகு நான்காவது ஆவரணமான ஸர்வஸௌபாக்யதாயகம் என்னும் சக்ரத்தில் பதினுன்கு கோணங்களிலிருக்கும் ஸர்வஸம்க்ஷோபிணீ முதலான பதினுன்கு தேவதைகளை மேல் கூறப்படும் இடங்களில் ந்யாஸம் செய்யவேண்டும்.

1 ஸர்வஸம்க்ஷோபிணீ — வலது லலாடம் (நெற்றி)
2 ஸர்வ வித்ராவிணீ — ,, கன்னம்
3 ஸர்வாகர்ஷிணீ — வலது தோள்
4 ஸர்வாஹ்லாதிநீ — ,, பாத மூலம்
5 ஸர்வஸம்மோஹிநீ — ,, முழங்கால்
6 ஸர்வஸ்தம்பிநீ — ,, ஜங்கையின்மேல்பாகம்
7 ஸர்வஜம்பிநீ — ,, ,, கீழ்பாகம்
8 ஸர்வ வஶகாரிணீ — இடது ஜங்கையின் கீழ்பாகம்
9 ஸர்வ ரஞ்ஜிநி — ,, ,, மேல்பாகம்
10 ஸர்வோந் மாதிநீ — ,, முழங்கால்
11 ஸர்வார்த்த ஸாதிநீ — ,, பாதமூலம்
12 ஸர்வாஶாபரிபூரணீ — ,, தோள்
13 ஸர்வமந்த்ர மயீ — ,, கன்னம்
14 ஸர்வ த்வந்த்வக்ஷயங்கரீ — ,, லலாடம்

இந்த இடங்களில் ந்யாஸம் செய்து சக்ரேஶ்வரியையும், சக்ரத்தையும் ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்து ஶரீரத்தில் வ்யாபகம் செய்யவேண்டும்.

ஐந்தாவது ஆவரணமான பத்துக்கோணங்களுடன் கூடின பஹிர்த்தசாரமென்னும் சக்ரத்தில் இருக்கும் ஸர்வஸித்தி ப்ரதா முதலான பத்துத் தேவதைகளை மேற் கூறப்படும் ஸ்தானங்களில் ந்யஸித்தல் வேண்டும்.

1 ஸர்வஸித்திப்ரதா — வலது மூக்கு
2 ஸர்வ ஸம்பத் ப்ரதா — ,, தந்த மூலம்
3 ஸர்வப்ரியங்கரீ — ,, ஸ்தனம்
4 ஸர்வமங்கள காரிணீ — ,, க்ருகாடிகா (பிடரி)
5 ஸர்வகாமப்ரதா — ,, ஸீவிநீ (ரஹஸ்யபாகம்)
6 ஸர்வ துக்க விமோசிநீ — இடது ஸீவிநீ
7 ஸர்வம்ருத்யு ப்ரஶமநீ — ,, க்ருகாடிகா
8 ஸர்வ விக்ந விநாஶிநீ — ,, ஸ்தனம்

9 ஸர்வாங்கஸுந்தரீ — ,, தந்த மூலம்
10 ஸர்வ ஸௌபாக்ய
தாயினி — ,, மூக்கு

இவ்விதமாக இந்த இடங்களில் ந்யாஸம் செய்து சக்ரேஶ்வரியையும், சக்ரத்தையும் ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்து ஶரீரத்தில் வ்யாபகம் செய்ய வேண்டியது.

பிறகு பத்துக் கோணங்களுடன் கூடின அந்தர்த்த சாரம் என்னும் பெயருடன் விளங்கும் ஆறுவது ஆவரணத்திலிருக்கும் பத்து தேவதைகளை மேல் கூறப்படும் இடங்களில் ந்யாஸம் செய்யவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸர்வக்ஞா | 6 | ஸர்வாதாரஸ்வரூபா |
| 2 | ஸர்வஶக்தி | 7 | ஸர்வ்பாபஹரா |
| 3 | ஸர்வைஶ்வர்யப்ரதா | 3 | ஸர்வாநந்தமயீ |
| 4 | ஸர்வ ஞானமயீ | 9 | ஸர்வரக்ஷாஸ்வரூபிணீ |
| 5 | ஸர்வவ்யாதிவிநாஶிநீ | 10 | ஸர்வேப்ஸிதபலப்ரதா |

வலது பாகம் முதல் வரிசையாய் தந்த மூலங்களில் ந்யாஸம் செய்ய வேண்டியது.

இவ்விதமாக ந்யாஸம் செய்து சக்ரேஶ்வரியையும், சக்ரத்தையும் ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்து ஶரீரத்தில் வ்யாபகம் செய்யவேண்டியது.

பின்பு, ஏழாவது ஆவரணமான ஸர்வரோகஹரம் என்னும் சக்ரத்தில் அஷ்டகோணத்திலிருக்கும் வஶிந்யாதி எட்டு வாக்தேவிகளைப் பின் கூறுமாறு ந்யாஸம் செய்தல் வேண்டும்.

1 வஶிநீ — வலது சிபுகம் (தாவாய்க்கட்டை)
2 காமேஶ்வரீ — கழுத்தின் வலது பாகம்
3 மோதிநீ — வலது ஸ்தனம்
4 விமலா — நாபியின் வலது பாகம்
5 அருணா — ,, இடது பாகம்

| | | |
|---|---|---|
| 6 | ஜயிநீ | — இடது ஸ்தனம் |
| 7 | ஸர்வேஶ்வரீ | — கழுத்தின் இடது பாகம் |
| 8 | கௌளிநீ | — இடது சிபுகம் |

இந்த ஸ்தானங்களில் ந்யாஸம் செய்து சக்ரேஶ்வரியையும், சக்ரத்தையும் ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்து ஶரீரத்தில் வ்யாபகம் செய்ய வேண்டியது.

பின் ஸர்வஸித்திப்ரத மென்னும் எட்டாவதாவரண சக்ரத்தை ஹ்ருதயத்தில் த்ரிகோண ரூபமாகப் பாவனை செய்து கோணுக்ரத்தில் (கிழக்குப் பாகத்தில்) மஹா காமேஶ்வரியையும், (நிருருதி கோணத்தில்) மஹா வஜ்ரேஶ்வரியையும். (வாயு கோணத்தில்) மஹா பகமாலிநியையும் ந்யாஸம் செய்யவேண்டும்.

புத்திமானுன உபாஸகன் த்ரிகோணத்தின் வெளிப்புறத்தில் நான்கு திக்குகளிலும் நான்கு ஆயுதங்களையும். த்ரிகோணத்தின் உட்புறத்தில் நான்கு பீடங்களையும், ஆக்நேயாதியாக ந்யாஸம் செய்யவேண்டும். பிறகு சக்ரத்தையும், சக்ரேஶ்வரியையும் ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்து ஶரீரத்தில் வ்யாபகம் செய்யவேண்டும்.

பின்பு, த்ரிகோணத்தின் மத்தியில் ஒரு வ்ருத்தத்தைப் பாவனை செய்து அதில் பதினாறு நித்யாதேவிகளை ந்யாஸம் செய்தல் வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| 1 | காமேஶ்வரீ | 9 | குலஸுந்தரீ |
| 2 | பகமாலிநீ | 10 | நித்யா |
| 3 | நித்யக்லிந்நா | 11 | நீலபதாகா |
| 4 | பேருண்டா | 12 | விஜயா |
| 5 | வந்நிவாஸிநீ | 13 | ஸர்வமங்களா |
| 6 | மஹாவஜ்ரேஶ்வரீ | 14 | ஜ்வாலாமாலிநீ |
| 7 | தூதீ | 15 | சித்ரா |
| 8 | த்வரிதா | 16 | மஹாத்ரிபுரஸுந்தரி |

இவ்விதமாகப் பதினாறு நித்யாதேவிகளை ந்யாஸம் செய்து, பிந்துவின் மத்தியில் ஸர்வாநந்தமயம் என்னும் சக்ரத்தில் ஸர்வ ஜகத்ரூபிணியான பரதேவதையை ந்யாஸம் செய்யவேண்டும். பிறகு சக்ரேஶ்வரியையும், சக்ரத்தையும் ஹ்ருதயத்தில் ந்யாஸம் செய்து ஶரீரத்தில் வ்யாபகம் செய்தல் வேண்டும்.

இங்ஙனம் ஒன்பது சக்ரங்களையும், சக்ரேஶ்வரிகளையும், பரதேவதையையும் ந்யாஸம் செய்து, யோநி முத்ரையைக் காட்டிப் பஞ்சதஶாக்ஷரீ மஹாமந்த்ரத்தை ஜபம் செய்யவேண்டும். இவ்வாறு அநுஷ்டானம் செய்பவன் ஸாக்ஷாத் ஸ்ரீ பரதேவதையாகவே ஆகின்றான்.

ஸ்ரீ பராபட்டாரிகாயை நம:
ஓம் தத் ஸத்.
ஸம்பூர்ணம்.

---

# ஸ்ரீ லலிதா ஸ்தவராஜம்.



ஸ்ரீ லலிதோபாக்யானம் 13-ஆவது அத்யாயத்தில் ஹரிஹர ப்ருஹ்மாதிகளால் கூறப்பட்ட ஸ்துதி இது. இதன் பொருள் 33-ஆவது பக்கத்தில் வந்துளது. இதைத் தவறில்லாமல் பாராயணம் செய்வோர் அம்பிகையின் அருளுக்குப் பாத்ரமாகி ஸகலவிதமான போக பாக்யங்களையும் பெறுவர். நம் அன்பர்களுக்கு ஸகல ஸித்தியும் உண்டாக இதை வெளியிடுகிறோம். எல்லோரும் படிக்கவும், தப்பில்லாமல் படிக்கவும், தமிழில் 2, 3, 4, என்ற எண்ணிக்கை கொடுத்துள்ளோம்.

| | | | |
|---|---|---|---|
| क—க | ख—க$^2$ | ग—க$^3$ | घ—க$^4$ |
| च—ச | छ—ச$^2$ | ज—ஜ | झ—ச$^4$ |
| ट—ட | ठ—ட$^2$ | ड—ட$^3$ | ढ—ட$^4$ |

| | | | |
|---|---|---|---|
| त—த | थ—த$^{2}$ | द—த$^{3}$ | ध—த$^{4}$ |
| प—ப | फ—ப$^{2}$ | ब—ப$^{3}$ | भ—ப$^{4}$ |

अस्तुः वः श्रेयसे नित्यं वस्तु वामाङ्गगोचरं ।

यतः तृतीयो विदुषां तुरीयं तत् परं महः ॥

அஸ்து வ: ஶ்ரேயஸே நித்யம்
வஸ்து வாமாங்க$^{3}$ கோ$^{3}$சரம்
யத: த்ருதீயோ விது$^{3}$ஷாம்
துரீயம் தத் பரம் மஹ:

1. ஜய தே$^{3}$வி ஜகன் மாத:
ஜய தே$^{3}$வி பராத்பரே.
ஜய கல்யாண நிலயே
ஜய காம களாத்மிகே.

2. ஜய ஶங்கரி வாமாக்ஷி
ஜய காமாக்ஷி ஸுந்த$^{3}$ரி.
ஜய அகி$^{2}$ல ஸுராராத்$^{4}$யே
ஜய காமேஶி காமதே$^{3}$.

3. ஜய ப்$^{3}$ரஹ்ம மயே தே$^{3}$வி
ப்$^{3}$ரஹ்மானந்த ரஸாத்மிகே.
ஜய நாராயணி பரே
நந்தி$^{3}$தாஶேஷ விஷ்டபே.

4. ஜய ஶ்ரீகண்ட$^{2}$ த$^{3}$யிதே
ஜயஶ்ரீ லலிதாம்பி$^{3}$கே

ஜய ஶ்ரீவிஜயே தே3வி
விஜயஶ்ரீ ஸம்ருத்3தி4தே3.

5. ஜாதஸ்ய ஜாய மானஸ்ய
சேஷ்டா பூர்த்தஸ்ய ஹேதவே.
நமஸ் தஸ்யை த்ரிஜக3தாம்
பாலயித்ர்யை நமோ நம:

6. கலா முஹூர்த்த காஷ்டா2அஹர்
மாஸ ஸம்வத்ஸராத்மிகே.
நமஸ் ஸஹஸ்ர ஶீர்ஷாயை
ஸஹஸ்ர முக2லோசனே.

7. நமஸ் ஸஹஸ்ர ஹஸ்தாப்3ஜ
பாத3 பங்கஜ ஶோபி4தே.
அணோரணுதரே தே3வி
மஹதோபி மஹீயஸி.

8. பராத்பர தரே மாத:
தேஜஸ்த்வம் தேஜஸாமபி
அதலந்து ப4வேத் பாதௌ3
விதலம் ஜானுனீ தவ.

9. ரஸாதலம் கடி தே3ஶ:
குக்ஷிஸ்தே த4ரணீ ப4வேத்,
ஹ்ருத3யந்து பு3வர்லோக:
ஸ்வஸ்தே முக2முதா3ஹ்ருதம்.

10. த்3ருஶஶ்சந்த்ரார்க த3ஹநா:
தி3ஶஸ்தே ப3ாஹ வோம்பி3கே.

மருதஸ்து தவோச்வாஸா
வாசஸ்தே ஶ்ருதயோகி3லா:

11. க்ரீடா3தே லோக ரசனு
ஸக2ா தே சின்மய: ஶிவ:
ஆஹாரஸ்தே ஸதா3னந்தோ3
வாஸஸ்தே ஹ்ருத3யம் ஸதாம்.

12. த்3ருஶ்யா த்3ருஶ்ய ஸ்வரூபாணி
ரூபாணி பு4வனுனி தே.
ஶிரோ ருஹா நப4ஸ்தேது
தாரகா: குஸுமானி தே.

13. த4ர் மாத்3யா பா3ஹவஸ்தே ஸ்யு:
அதர்மாஹ்யாயுதா4னிதே.
யமாஶ்ச நியமாஶ்சைவ
கர பாத3 ருஹாஸ்ததா2.

14. ஸ்தனௌ ஸ்வாஹா ஸ்வத4ா காரௌ
லோகோஜ்ஜீவன காரகௌ,
ப்ராணுயாமஸ்து தே நாஸா
ரஸனு தே ஸரஸ்வதீ.

15. ப்ரத்யா ஹாரஸ்து இந்த்3ரியாணி
த்4யானந்தே தீ4 ஸ்த்ருட3ாஸனம்
மனஸ்தே த4ாரணு ஶக்தி:
ஹ்ருத3யந்தே ஸமாதி4கா.

16. மஹீருஹாஸ்தே அங்க3ருஹா:
ப்ரப4ாதம் வஸனந்தவ,

பூ4தம் ப4வ்யம் ப4விஷ்யச்ச
நித்யஞ்ச தவ விக்3ரஹம்.

17. யக்ஞரூபா ஜகத்3த4ாத்ரீ
விஷ்வக்3ரூபாச பாவநீ
ஆத4ாரம் த்வாம் ப்ரபஶ்யந்தி
ந ஸம்யக் நிகி2லா: ப்ரஜா:

18. ஹ்ருத3யஸ்த2ாபி லோகாநாம்
அத்3ருஶ்யா மோஹநாத்மிகா
நாமரூப விபா4க3ஞ்ச
யாகரோதி ஸ்வலீலயா.

19. தான்யதி4ஷ்டாய திஷ்ட2ந்தீ
தேஷ்வ ஸக்தாச காமத3ா
நமஸ் தஸ்யை மஹாதே3வ்யை
ஸர்வ ஶக்த்யை நமோ நம:

20. யாதே3வீ பரமா ஶக்தி:
பரப்3ரஹ்ம அபி4 தா4யினீ
ப்3ரஹ்மானந்த3 அபி3 த4ானுயை
தஸ்யை தே3வ்யை நமோ நம:

21. யத3ாக்ஞயா ப்ரவர்த்தந்தே
வஹ்னி ஸூர்யேந்து3 மாருதா:
ப்ருதி2வ்யாதீ3னி பூ4தானி
தஸ்யை தே3வ்யை நமோ நம:

22. யா ஸஸர்ஜ வித4ாதாரம்
ஸர்க3ாத3ள ஆதி3 பூ4ரியம்

த3த4ார ஸ்வயமேவைகா
தஸ்யை தே3வ்யை நமோ நம:

23. யயா த்4ருதாது த4ரணீ
யயா ஆஶாதிஅமேயயா.
யஸ்யாமுதே3தி ஸவிதா
தஸ்யை தே3வ்யை நமோ நம:

24. யத3ந்தரஸ்த2ம் த்ரிதி3வம்
யத3ாத4ா ரோந்தரிக்ஷக:
யன்மயஶ்ச அகி2லோ லோக:
தஸ்யை தே3வ்யை நமோ நம:

25. யத்ரோதே3தி ஜகத் க்ருத்ஸ்னம்
யத்ர திஷ்ட2தி நிர்ப4ரம்
யத்ர அந்தமேதி காலேது
தஸ்யை தே3வ்யை நமோ நம:

26. நமோ நமஸ்தே ரஜஸோ ப4வாயை
நமோ நமஸ் ஸாத்விக ஸமஸ்தி2தாயை.
நமோ நமஸ்தே தமஸோ ஹராயை
நமோ நமோ நிர்கு3ணத: ஶிவாயை.

27. நமோ நமஸ்தே ஜக3 தே3க மாத்ரே
நமோ நமஸ்தே ஜக3தே3க பித்ரே
நமோ நமஸ்தே அகி2ல தந்த்ரரூபே
நமோ நமஸ்தே அகி2ல யக்ஞரூபே.

28. நமோ நமோ லோக கு3ரு ப்ரத4ானே
நமோ நமஸ்தே அகி2ல வாக்3விபூ4த்யை

நமோஸ்து லக்ஷ்ம்யை ஜக3தே3க துஷ்ட்யை
நமோ நம; ஶாம்ப4வி ஸர்வஶக்த்யை.

29. அனாதி3மத்4யாந்தம் அபாஞ்ச பௌ4திகம்
ஹ்யவாங் மனோக3ம்ய மதர்க்ய வைப4வம்
அரூப மத்3வந்த்3வம் அத்3ருஷ்டி கோ3சரம்
ப்ரபா4வ மக்3ரியம் கத2மம்ப3 வர்ண்யதே.

30. ப்ரஸீத3 விஶ்வேஶ்வரி விஶ்வ வந்தி3தே
ப்ரஸீத3 விஶ்வேஶ்வரி தே3வரூபிணி
ப்ரஸீத3 மாயாமயி மந்த்ரவிக்3ரஹே
ப்ரஶீத3 ஸர்வேஶ்வரி ஸர்வரூபிணி.

31. இதி ஸ்துத்வா மஹாதே3வீம்
தேவா: ஸர்வே ஸவாஸவா:
பூ4யோ பூ4யோ நமஸ்க்ருத்ய
ஶரணம் ஜக்3மு: அஞ்ஜஸா.

32. தத: ப்ரஸன்னா ஸாதே3வீ
ப்ரணதம் வீக்ஷ்ய வாஸவம்
வரேண ச2ந்தயாமாஸ
வரதா3 அகி2ல தே3ஹிநாம்.

33. இந்த்ர :—

யதி3 துஷ்டாஸி கல்யாணி
வயம் தை3த்யேந்த்3ர நிர்ஜிதா:
து3ர்த4ரம் ஜீவிதம் தே3வி
த்வாம் க3தா: ஶரணார்த்தி2ன:

34. ஸ்ரீ தேவீ :—

அஹமேவ விநிர்ஜித்ய
ப4ண்ட3ம் தைத்ய குலேஶ்வரம்
அசிராத் தவ தா3ஸ்யாமி
த்ரைலோக்யம் ஸசராசரம்.

35. நிர்ப4யா முதிதாஸ்ஸந்து
ஸர்வே தே3வ க3ணாஸ்ததா2
யே ஸ்துவந்தி ச மாம் ப4க்த்யா
ஸ்தவேநாநேந மாநவா:

36. பா4ஜனந்தே ப4விஷ்யந்தி
த4ர்ம ஸ்ரீ யஶஸாம் ஸதா3
வித்3யா விநய ஸம்பன்ன:
நீரோகா3 தீ3ர்க்க4ஜீவின:

37. புத்ர மித்ர களத்ராட்3யா:
ப4வந்து மத3னுக்ரஹாத்
இதி லப்3தவரா தே3வா:
தே3வேந்த்ரோபி மஹாப3ல:
ஆமோத3ம் பரமம் ஜக்3மு:
தாம் விலோக்ய முஹுர் முஹு:

---

நமோ நமஸ்தே ஜக3தே3க நாதே2
நமோ நம: ஸ்ரீத்ரிபுர அபி4தா4நே
நமோ நமோ ப4ண்ட மஹாஸுரக்4நி
நமோஸ்து காமேஶ்வரிவாமகேஶி.

ஓம் தத் ஸத்.

---

